

# SHAKESPEARE FOR TAMIL HOMES

## I

# OTHELLO

By A. MADHAVIAH, B. A.

# ஷேக்ஸ்பியர் நாடகங்கள்

க.

# ஒதெல்லோ

என்ற

# வெநிஸ் மோரியன்

இந்நாடகம்

நூலாசிரியர் சரித்திரம்

விருத்தியுரை குறிப்புரைகளுடன் தமிழ் வசன நடையில்

அ. மாதவையரால்

மொழிபெயர்க்கப்பட்டது.

முதற் பதிப்பு

சென்னை :

ஸ்ரீநிவாஸ, வரதாசாரியார் அண்டு கோ.

திருவல்லிக்கேணி.

1902.

TO

THAT GREAT SCHOLAR AND GREATER MAN

**THE REV. WILLIAM MILLER, M.A., LL.D., D.D., C.I.E., &c.,**

*Principal of the Madras Christian College and Vice-Chancellor of the University of Madras,*

WHO HAS DONE MORE THAN ANY OTHER TO POPULARISE SHAKESPEARE IN SOUTH INDIA AND FOR FORTY YEARS HAS SHED THE LUSTRE OF A LIFE OF SELF-SACRIFICE AND GOOD DEEDS UPON THE LAND,

I HUMBLY DEDICATE WITH DEEP GRATITUDE, REGARD AND AFFECTION, THIS TRANSLATION OF A MASTER-PIECE OF A MASTER-SINGER.

# A WORD

## TO THOSE WHO KNOW SHAKESPEARE IN HIS OWN GARB.

The poets of a nation are the truest mirrors of its likes and dislikes, its hopes and aims; and nothing will better enable two different peoples to understand, respect and love each other, than a right and sympathetic appreciation by each of the other's literature. Rendering the choice ideas of one nation into the language of another will best serve this purpose. The dramatic form of literature and many of the Western ideas are alike foreign to the pure Tamilian, and I have therefore spared no pains to aid him in rightly understanding and enjoying the play. It is hoped that this, the most human of the greater plays of the greatest poet will reach every Tamil home and that my humble attempt will be the forerunner of many similar efforts by abler men to enrich the Tamil literature and enliven the homes of the Tamilians.

The text used by me is that of Cowden Clarke's illustrated edition for family-reading.

More than ten years have gone by since I read *Othello* in the class-room, at the feet of the great teacher to whom I have made bold to dedicate this rendering of mine. Of much of what was eagerly engraved upon my heart during that happy period of life, time and other pursuits and cares have left no trace; but his regretful words at the close of our study of this play can never be forgotten. Said he, commenting on the heroine's character:—"The worst defect in Desdemona's character is *thoughtlessness*. In this world

> 'Evil is wrought by want of thought,
> As well as by want of heart.'

And now, my boys, the best of you are only so many Desdemonas."

How sad! and yet, how true to the life we live!

MARKAPUR,
*15th December, 1902.*

A. M.

# சூசிபத்திரம்

# முகவுரை

அகிலாண்ட கோடிகள அனைத்தையும் ஆக்குவித்தருளிய பிரம தேவனது வேதமோதிய நாவின்கண் வீற்றிருக்கும் கலைமகளையே நாம் பாமுதல்வியாகப் பாவித்துப் பணிகின்றோம்; ஐரோப்பிய பாஷைகள் பலவற்றுள் பாவலரைக்குறித்து வழங்குமொழிகள், ஆக்குதற் றொழிலடிப் பிறந்தனவாய் இருக்கின்றன; தெய்வத்தன்மையதான சிருஷ்டி வன்மையைச் சேர்ந்ததே கவிவன்மை என்பது, இவற்றால் ஒருவாறு விளங்கும்.

இத்தகைய கவிவன்மையின் காட்சிப்பொருட்களாகிய காவிய கிரந்தங்கள், ஒரோவழி, அதிசயவணியையும் இல்பொருளுவமையையும் இருபுடைச்சிறகராக்கொண்டு, உலகியற்கையையின்றி உன்னி உன்னிப் பறப்பனவாகவேனும்; அன்றேல், நாடோறும் கண்முன் நிகழ்வதையே உள்ளவாறு கூறிமுடிப்பனவாகவேனும், பெரும்பாலும் காணப்படுகின்றன. நாடுநகரம் கூடகோபுரம் மாடமாளிகை கோட்டைகொத்தளங்களை மனங்கொண்டவாறு நவமணி குயிற்றியவென வருணிக்கும் நாவலர் சிலர், தமக்குக் கண்கூடான தம்வீட்டு முற்புறம் பிற்புறங்களை உள்ளவண்ணம் சொல்லப்புகின், நகைப்பிற்கிடந்தரப் போலிமொழிபுகன்று கழிவர். இதனால், வெறுங்கற்பனையிலும் உண்மை உரைப்பதே உயர்வு என்பது வெளியாகின்றது. ஆயின், சிறிது ஆராயுமிடத்து, இவ்விரண்டையும் தழுவி, உண்மை இயலோடு மாறாது, கற்பனாலங்காரங்களையும் கைவிடாது, அரியதோர் மனோபாவத்தால் அமையும் கிரந்தங்களே யாவற்றினும் சிறந்தவை என்பது எளிதிற் புலப்படும்.

இவ்வித உண்மைச் சிறப்புற்ற உத்தம இலக்கியங்களில், கதையின் வரலாற்றையும், அதில் வருபவர் குணகுணங்களையும், அது நிகழும் களம் காலம் முதலியவற்றின் தன்மையையும், தாம் கூறு மொழிகளால் கவியே நேராக வருணித்து விளக்குதலே பெரும்பான்மையும் வழக்கம். நாடகவிலக்கியத்தில் மாத்திரம் அவ்வாறன்று; மாந்தரது

கட்புலன்கதுவாச் சித்தவிருத்தி, அறுகுணவிகற்பு, இவற்றை ஊகித்து ணர்ந்து, அவரவர் வாயிலாகப் பேசுவிக்கும் உரைகளால் இயைவது அது. மானிடப்பிறப்புற்றார், பழவினைப்பயனாலும் உரியகுடிபிறப்பாலும் விளையும் பக்குவ வேறுபாட்டால் பல்வேறு குணங்களும், தேச கால வர்த்தமானம் குலம் பருவம் பழக்கம் மதம்போன்ற பல ஏதுக்களால் அக்குணங்களில் எண்ணரிய பேதங்களும் உறுகின்றனர். இருவரேனும் முற்றும் ஒவ்வாராய் இவ்வண்ணம் வேறுபட்ட மனிதரிற் பலரையே பாத்திரங்களாக்கொண்டு; அவரவர் நடை உடை பாவனைகளையும் உள்ளக் கருத்துக்களையும் சிறிதும் பிறழாது, அணுவும் முரணாது, அவரவர் வாயிலாகவே தெரிவித்து; ஓர்கணத்தைப் பல்லாண்டு போலவும், பல்லாண்டுகளை ஓர் கணம்போலவும், தம்மாயவித்தையாற் காட்டிக், கதைநிகழ்ச்சியைக் கரதலாமலகம்போல விளங்கத்தீட்டும் நாடகப்புலவர் திறமைக்கு, ஏனைய கவிஞரின் தன்மை இணைசொல அணுகவும் தரமன்று. விரியுஞ்சிந்தனையில் வினைசூழ்ந்து புயம்வீங்கி இறுமாந்திருக்கும் மேதினியாளனையும், எரியும் கும்பியில் இரையின்றி மனமேங்கி ஏமாந்திருக்கும் ஏதுமில் ஏழையையும்; தன் கணவனையன்றி வளையாமுடிமன்னரையும் துரும்பென இகழ்ந்தொழுகும் கற்பரசியையும், விலங்குகள் போன்ற வீணரைக் கரும்பெனப்புகழ்ந்து அவர் வேண்டியபோது இன்பம் விரும்பித்தன்மானத்தை விற்று வயிறு வளர்க்கும் வேசியையும்; முதனூற்றாண்டானையும், கடைநூற்றாண்டானையும்; யூதனையும், கிறிஸ்தவனையும்; கிழவனையும், சிறுவனையும்; மதிமந்தனையும், அதிஞானியையும்; அங்கரூபனையும், அங்கஹீனனையும்; ஆஸ்திகனையும், நாஸ்திகனையும்; பித்தனையும், சித்தனையும், அனைவரையும் ஒருங்குதானே ஆக்கி, ஓரேகணத்தில் நாற்புறமும் நவரசங் கொழிப்ப நடித்துக்காட்டும் சூத்ரமாகிய மனோசக்தியால் அமையும் நாடக இலக்கியத்தின் பெருமை, நம்மால் நவிலற்பாற்றோ! இதுநிற்க:

ஐவகை இலக்கணங்களையும் ஆராய்ந்தறிந்த ஆன்றோரால் அமைவுற்ற தமிழாலயம், மனோரம்மியமான கோவை, இலம்பகம், மாலை, மஞ்சரி, வஞ்சி, காஞ்சியாதிய அணிகள் பலவால் அழகுபெறாநிற்பத், தன்னைச்சார்ந்து கண்டுகளிக்குமாறு, பாமரர் பண்டிதர் பாவலர் நாவலர் யாவரும் ஈண்டச்செய்வதோர் நாதமிட்டொலிக்கும் அந்நாடகமணிகள் இக்காலத்திலே இசைசெயப்பெறாமை, தமிழ்த்தளிக்கோர் பெரு

ங்குறையேயாம். அக்குறையையும் ஒருவாறு நிறைவிக்க நினைந்து, இலக்கியச்சிறப்புற்ற ஆங்கிலபாஷையில் ஒப்புயர்வற்ற மெய்ப்புலவரெனச் செப்புதற்குரியராம் நாடக கவீந்திரராகிய வில்லியம் ஷேக்ஸ்பியரது நாடகங்களிற் சிலவற்றை, எம் சிற்றறிவினுக்கும், அற்பப்புலமைக்கும், உற்ற உதவிக்கும் இயன்றவாறு, கற்றோரும் மற்றோரும் படித்துக் களிப்புறற்கேற்ற எளிய தமிழ்நடையில் மொழிபெயர்க்கப் புகுந்ததை, நற்றமிழாளர் இகழாது ஏற்பரென எம்முள்ளம் தழைக்கின்றது. எம் கல்வித்திறனன்று, நுண்ணறிவன்று, அறியாமையால் வரும் அகம்பாவமன்று, அதிகம் தெரிந்தோரின்மையன்று, எம்மை இம்முயற்சியிற் புகுத்தியது. பாற்கடலைப் பருகிடப் புகுந்த பூசையினது ஆசைபோல இந்நாடகங்களில் எமக்குள்ள பேரவாவும்; தாமின்புறுவது உலகின்புறக்காணும் விழைவும்; பிறநாட்டாரை நன்கறிதற்கு அவரது உத்தம இலக்கியங்களின் ஆராய்ச்சி சிறந்ததோர் வழியென்பது உண்மையாயின், இதுபோன்ற மொழிபெயர்ப்புக்கள், தமிழ்நாட்டாருள் ஆங்கிலம் அறியாதார்க்கு மிக்க நன்மைபயப்ப என்ற எண்ணமுமே, உண்ணின்று தூண்டி ஊக்கம் அளித்தன. இவ்வாங்கில கவியின் இன்சொற்பொதிந்த சிறந்த கருத்துக்களைத் தமிழில் மொழிபெயர்க்க யாம் புரிந்த சொற்போரில் எமக்குற்ற மனமகிழ்ச்சியுள், ஒரு பகுதியையேனும் இதை வாசிப்போரும் அடையின், அஃதே எமக்கு மனமிசைந்த கைம்மாறும்.

இதை வெளிப்படுத்துவதில் எமக்குற்ற இடையூறுகளையும் இடுக்கண்களையும் எடுத்தியம்ப, இது சமயமுமன்று இடமுமன்று. எம் தாய்மொழிவாணர் இதை உகந்தேற்று எமக்கு ஊக்கமுதவின், எவ்வாற்றானும் இன்னும் சில நாடகங்களை மொழிபெயர்த்து வெளிப்படுத்துவேமென்று உறுதிமொழி கூறவல்லேம். எம்முரிய நண்பர்களாகிய ஸ்ரீ. ல. ஸ்ரீ. இலக்குமணப்போற்றிகளும், ம-ா-ா-ஸ்ரீ. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்களும் இம்முயற்சியில் எமக்கிழைத்த பேருதவி மறக்கற்பாற்றன்று.

ஒரே பாஷையில் ஒரு மொழிக்குப் பொருள்கூறுங்கால் பிறிதோர் மொழிபகரின் பொருள் சிறிது வேறுபடுமெனின், ஒன்றிற்கொன்று எவ்வாற்றானும் ஒவ்வாது பெரிதும் விலகிய நாடுகளிலே, நடை உடை பாவனை நாகரீகங்களால் வேறுபட்ட மாந்தராலே வழங்கிவரும் வெவ்

வேறு பாஷைகளில், ஒன்றின் மொழிக்குப் பொருட் பொருத்தமுறப பிறிதில் மொழி காண்பதிலுண்டாம் உழைப்பானது, அம்முயற்சியில் தலையிட்டாரேயன்றி, ஏனையர் எளிதில் உணருந்தன்மையதன்று. இவ் வண்ணம் மூளை வியர்க்க உழைப்பார்க்குத் தமிழ் மொழியில் தக்க முன்மாதிரிகளும் அருமையாம். ஆதலின், இதனைக் கையாளும் நண் பருக்கு நாயனார் குறளொன்றை நினைப்பூட்டி இம்முகவுரையை நிறுத் துவாம் :

> "நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்."

மார்க்கபுரம்,
1902 ஹு டிசம்பர் மீ 15 உ. அ. மா

இந்நாடாளும் அங்கிலேயர் தந்நாடாகிய இங்கிலாந்திலே, வார்விக் மாகாணத்திலே, ஆவாறுற்றுக்கரை ஸ்டிராட்போற்டு என்ற ஊரிலே, இற்றைக்கு முந்நூற்றைம்பதாண்டுகளுக்கு முன்னர், ஜான் ஷேக்ஸ்பியர் என்ற ஒரு கையுறை* வியாபாரியிருந்தார். அவர், தோட்டம் வீடு முதலியதாயச்சொத்தும், தொழிலில் தேடிய உடைமைப்பொருளும், மனையாட்டி கொடுவந்த சீதனச் சீருமுடைய கிரகஸ்தர். தம்மயலாரால் நன்கு மதிக்கப்பெற்றவர். அவர் மனைவியார், மேரி ஆர்டன் என்பவர், ராபற்டு ஆர்டன் என்ற செல்வரின் கடைசி மகள். இவர்களுக்கு, கி. பி. 1558-ம் வருஷத்தில் ஜோன் என்ற ஒரு பெண் மகவும், நான்கு வருஷங்களுக்குப் பின்னர் மார்கரட் என்ற வேறொரு பெண் மகவும் பிறந்து, குழவிப்பருவத்திலேயே இறந்தன.

இருகண்ணுமிழந்தவர்போ லிவ்வாறு துயருழந்த துணைவருக்குக் கடவுள் கருணையாற் கண்ணொளி கதுவினாற்போல, கி. பி. 1564-ம் வருஷம் ஏப்ரல்மாதம் 23-ம் தேதியன்று, தாம் பிறந்த குலத்தையும் ஊரையும் நாட்டையும் தம் தாய் மொழியையும், ஞாயிறுந் திங்களுமுள்ளவரையும், தம் புகழொளியால் மற்றொளிமாற்றி மேம்படச் செய்து, வெகுகாலங்களுக்கு மானுட புத்திசாத்தியத்துக்குத் தாமே எல்லைவரம்பாக விளங்கவந்தவராகிய வில்லியம் **ஷேக்ஸ்பியர்** அவதரித்தார். அவ்வூர் ஹென்லி வீதியிலுள்ள அவர் ஜநநகிரகத்தை அங்கிலேயர் புதுப்பித்து, இன்றுகாறும் ஒரு பெரிய ஞாபகக்ஷேத்திரமாக மெய்யன்புடன் போற்றிவருகின்றனர். இக்கவியாலயத்தைத் தரிசிக்கச்செல்லும் பெரியோர் ஒரு தேயத்தினரோ! அவருள் புகழ் பெற்றுயர்ந்தவரையே கணக்கிடினும், ஆயிரக்கணக்கினும் அடங்கு

---

* ஐரோப்பியர் அணிகின்ற கைக்கவசம்.

பவரோ! ஆங்குத் தாமுற்ற வைபவத்தை யொருவாறு நிலைபெறச் செய்ய நினைந்து, நங்கவியேறு பிறந்தவறையின் வெண்சுதைதீற்றிய சுவர்முழுதும் மூலைமுடுக்கும்விடாது ஒவ்வொருவரும் தம்மூர்பெயர் எழுதியதாற் சுவர்களும் நீக்கமற நிறைந்தனவாக, நோக்கப்புகும் யாத்திரிகர் கைச்சாத்திடுதற்கென்றே இப்பொழுதோர் பெரிய புத்தகம் வைக்கப்பட்டிருக்கின்றது.

ஷேக்ஸ்பியர் பிறந்து இரண்டுமாதங்களுக்குள், அவ்வூரில், கொடியதோர் கொள்ளைநோய் பரவி, ஊர்வாழுநர் ஆயிரத்துநானூற்றுவருள் இருநூறுபேரை வாரிச்சென்றது. இவர் தாய்தந்தையர், தம் நான்கு கண்களுக்குமொரே மணியாக விளங்கும் மழவிளங்குழவியின் பொருட்டு அப்பொழுதுற்ற அச்சமுங்கவலையும், அவர் மகனார் பிந்திய பதவி முன்னரே தெரிந்திருப்பின், அங்கிலேயர்மட்டுமோ, நாகரீகம் பொருந்திய உலகர் அனைவருமேயவருடன் பகுத்தநுபவிப்பாரன்றோ? நம்புலவரினிரண்டாம் வயதில் அவர்க்குக் கில்பற்டு என்னொரு தம்பியும், ஐந்து ஏழு வயதுகளில் ஜோன், ஆநி என்ற இரு தங்கையரும் பிறந்தனர். இதற்குள் அவர் தந்தையார் செல்வத்திலுஞ் செல்வாக்கிலுஞ் செழித்துத் தம்மூர்த்தலைமையையும் அதற்குள்ள வதிகாரத்தையும் பூணுவாராயினர். நம்பாவலர் ஐந்தாவது வயதிலே "அரசிகூத்தர்" என்னொரு நாடகக்குழுவார் அவ்வூருக்குவந்து நாடகங்களாடியதாகத் தெரிகின்றது. நம் நாடகசிங்கமும் தம்வீட்டு முதுகுரவருடன் சென்று அவர் கூத்துக்களைப் பார்த்திருக்கலாம்.

அவ்வூரிலொரு தருமப் பள்ளிக்கூடமிருந்தது. அப்பள்ளிக்கு நம்புலவர் பெருமான் கற்கச்சென்றிருக்கலா மென்றநுமானமேயன்றி, உறுதியாகத் தெரிந்தபாடில்லை. ஒன்பதாமாண்டிலவருக்கு ரிச்சேற்டு என்னொரு சோதரர் பிறந்தார். அவ்வாண்டில் "லீசெஸ்டர் பிரபு கூத்தர்" என்ற நாடகக்காரரும், மறு வருஷத்தில் "ஓர்செஸ்டர் பிரபு கூத்தர்" என்னொரு நாடகக் குழுவினரும் அவ்வூருக்கு வந்து நாடகங்களாடினர். இசைபெற்றிலங்கிய எலிஸபெத் இராணியாரும் மறு வருஷத்தில் அவ்வூரருகேயுள்ள கெநில்வர்த் கோட்டைக்கு, அக்கோட்டை நாயகராகிய லீசெஸ்டர் பிரபுவின் விருந்தினராக வெழுந்தருளினர். அரசியாருக்கு மரியாதையாக நடந்த பவனிகளையும், கூத்துக்

களையும், விழாக்களையும் தம்மூராரோடு நம் கவியிளங்குமரரும் சென்று பார்த்திருப்பாரென்றே துணியற்பாலது. தலைநகராரொழிந்த புறநாட்டார்க்குக் கார்த்திகைப் பிறையினுங் காண்பரிய பேரரசரும், பிரபுக்களும், யுத்தவீரரும், உயர்குலச்சீமாட்டிகளும், மன்னர் சேவைக்குரிய மற்றைப் பரிவாரங்களும் எவ்வாறு பேசுகின்றனர், ஒழுகுகின்றன ரென்பதை இப்பொழுதே நம் கவியரசர் கவனித்துத் தம் அரிய மூளையிற் சேமித்துவைத்தனர் போலும்.

நிலையா மனவஞ்சக நேயமிலா வேசையாகிய அதிஷ்டவசத்தால், நம்புலவர் தந்தையா ரிக்காலந்தொட்டு வளங்குன்றி ஆண்டுக்காண்டு செல்வநிலை தளர்வாராயினர்.

கி. பி. 1579-ம் வருஷத்தில், அவர், சீதநமாகப் பெற்ற சில பூஸ்திதியை யிழந்ததுமன்றி, ஆநியென்ற மகளையுமிழக்க, ஷேக்ஸ்பியர், உடற்பிறப்பென்னும் பாசத்தாற் பிணிப்புண்டோர் படுந்துயரத்தை யநுபவித்தார். இவர் இளமையிலேயே, வாழ்வுந் தாழ்வும், உடன்வாழ்வார் நேசவின்பமும், இடைமாள்வார் பாசத்துன்பமும், மனிதப் பிறவிக்குரியவான பல விபத்துக்களையு மொருவாறுணரும்படி யநுபவித்ததோடு, இடையிடையே சில நாடகக்காரர் ஆட்டங்களையும் ஏனைய விநோதங்களையுங் கண்டுகளிக்கவும் நேர்ந்ததால், இணைபிரியா இன்ப துன்பப் புணர்ப்பான இவ்வுலக வாழ்க்கையின் மெய்த்தன்மையையறிந்தார். ஈரேழாண்டிலிவர் பள்ளிப்படிப்பு முடிந்திருக்கலாம்; அதன் பின்னர் யாதானுமொரு கலாசாலையில் இரண்டு மூன்று வருஷங்கள் உயர்தரக்கல்வி பயின்றிருக்கலாமென்பது, இவர் நூலாராய்ச்சியாலுண்டாகும் அநுமாநம்; அதை யுறுதிப்படுத்த எக்கல்லூரியினும் எவ்வித சாதநமுங் கிடைத்திலது. பதினெட்டாவது வயதிலே நம் கவிஞர் சித்தசன்வலைச்சிக்கித் தம்மிலும் எழாண்டு மூத்துள்ள ஆநி ஹாதவே என்ற பெண்மேற் காதலாகி, அவள் காதலையும் பெற்றார். கன்னிக்காதல் பூக்குஞ் சிதருவிளைஞர், மங்கைமடந்தை அரிவைப் பருவ மாதர்களை முற்றாவிளங் கரும்பாக மதித்திகழ்ந்து, அழகு மநுபவமு முதிர்ந்துள்ள தெரிவைப்பருவப் பெண்களையே அடங்காக் காதலோடு நோக்குவரென்றும்; உலகமறிந்தவாடவர், இளந் தயிருக்கும், மாசிலாமணிக்கும், மணவா மலருக்குஞ் சமமான மங்கைமடந்தைய

ரையே மனங்குழைந்து விரும்புவரென்றும்; இவர் உரையாசிரியருள் ஒருவர் இயற்கை நீதி யெடுத்துரைத்திருக்கின்றனர். இதனுண்மை யையும், இத்தேயத்துக்குப் பொருத்தமின்மையையும், இவண் பொரு ந்துந் தன்மையையும் ஆராய்தற்கு இடமீதல்ல. இது நிற்க: நம் கவீச ரின் ஒப்பற்ற மனச்சத்தியும், உற்சாகமும், புத்திவிசாலமும், பளிங் கிற்போற் பிரதிபலித்தொளிரும் அவர் முகச்சோதியையும், மகளி ரைப்புதியதோர் மகிழ்ச்சியோடுங் கூச்சத்தோடு மாதரவோடும் நோக் கும் அவர் ஆசை பொழியுங் கண்களையும், வடிவழகிய இளமையையும், தன்னிரு கண்களுங் குளிரக்கண்டு; அகத்தே தழைக்கும் பெரும் விழைவும் இன்ப வேட்கையும் அச்சமும் பத்தியும் தம்முள் தடுமாறிக் குதித்துக் கூத்தாடுந் தீவிரதசையில், அடங்காவேகத்தோடு, கடல் மடைதிறந்தாற்போல அவர் தம் தலைக்காதலை வெளியிடும் அமிழ்தி னும் ஆருயிரினும இனியமொழிகளை இருசெவியுங் குளிரப்பருகிய பாக்கியவதி, அவர்மேற் காதலானது வியப்பன்றே. இமோஜன், வயோ லா, ஹெலநா, ரோஸாலிந்து, கார்டிலியா, டெஸ்டிமோனு, மிராண் டா போன்ற அநேக ஸ்திரீரத்நங்களை யுலகத்துக்குத் தம் நாடக வாயிலாகத் தந்த இக்கவீந்திரர், தம்முள்ளங் கவர் கள்ளியிடத்திருப்ப னவாக அகக்கண்ணாலும் வெளிக்கண்ணாலுங் கண்ட அழகுகளையும், அருமை பெருமைகளையும், அற்புத குணங்களையும், மனச்சத்திகளையும் யாவரே யூகிக்கவல்லார்? ஆ! ஆ! மாரனிலும் வலிய மாயாவியரும் உளரோ!

இவ்வதூவரர் சிறிதும் தாழ்க்காது வேட்டு, கி. பி. 1583-ம் வரு ஷத்தில் ஸூஸாநாவென்றொரு பெண்மகவையும் பெற்றனர். இல் லற நுகத்தடி யிவ்வாறு சிறிது கழுத்திலழுந்தவே, இதுகாறும் விடைபோல் திரிந்த ஷேக்ஸ்பியர், மனைவி மகவைப் பேணிக் காக்கப் பொருளீட்டு முயற்சியைச் சூழ்வாராயினர். தம்மூர்ப் பள்ளியிலுப போதகராகச் சிலகாலமும், ஒரு நியாய துரந்தரரிடம் லிகிதராகச் சில காலமும், அவர் முதலில் வேலைபார்த்ததாகக் கூறியிருக்கின்றனர் சிலர். கைக்கொண்ட தொழிலேதேயாயினும், கி. பி. 1585-ம் வருஷத்தில் ஹாம்நேட் என்றோராண்மகவும் ஜூடித் என்றொரு பெண்மகவும் இவர் மனையாட்டிக்கு இரட்டையாகப் பிறந்து குடும்பத்தைப் பெருக் கியபொழுது, அத்தொழில், சுகவாழ்வுக்குப் போதுமான வேதனத்தைத்

தரலரிதாக, வளரும் வறுமை வாய்ப்பட்டுழலும் தந்தையிடத்தினின்றும் பொருள் வருவாயுமிலதாக, நங்கவிச் சக்கரவர்த்தி வெளிச்சென்று திரவியந்தேடல் அவசியமாயிற்று. லூஸி என்ற தனிகரின் பூங்காவனத்திலிருந்த ஒரு மானைச் சிலர் திருடிய குற்றத்தில் நம் கவிஞரும் அகப்பட்டு, அப்பிரபு தருமசபையில் தொடுத்த வழக்குக்கஞ்சியே இவர் ஊரைவிட்டோடியதாக வொரு கதையுண்டு. காரணமேதேயாயினும், இவர், இவ்வருஷாந்தத்தில் தம்மூரை நீங்கிக், கெட்டும் பட்டணஞ்சேரென்ற மதிமொழிக்கேற்ப, இராஜதாநியாகிய லண்டன் நகரத்தையடைந்தார்.

1586-ம் வருஷந்தொட்டு மூன்றாண்டுகளுக்கு லண்டனில் இவரின்னன செய்தாரென்பது நன்குவிளங்கவில்லை. ஆயினும் 1589-ம் வருஷத்தில் "பிளாக்பிரயர்ஸ் நாடகசாலை" முதலாளிகள் பதினறுவருள் இவர் பெயர் காணப்படுகின்றமையால், தம்மாலும் பிறராலுமியற்றப்பட்ட சில நாடகங்களை அரங்காடற்கேற்றவாறு திருத்துவதிலும், தாம் பின்பற்றிய நாடகமாடும் வித்தையில் பிறிதாற்றாலும் தேர்ச்சியடைவதிலும், இம்மூன்று வருஷங்களையுங் கழித்திருப்பார் என்பது ஒரு துணிவு. ஸ்டிராட்போற்டைத் துறக்குமுன்னரே தாமியற்றிய "வீநஸூம் அடோநிஸூம்" என்ற காவியத்தையும், பழக்கமின்மையையும் யௌவன சேஷ்டையையும் காட்டும் சில நாடகங்களையும் கொண்டு, பொருளும் புகழுந் திரட்டிவிடலாமென்ற நினைப்போடு இவர் லண்டன் நகரை நோக்கினரென்றியூகிக்கக் காரணங்களிருக்கின்றன. இவ்வாறு மின்மினிபோல் 1589-ம் வருஷத்தில் முதற்கண் தோன்றிய இவர் புகழொளி பெருகி, இப்பொழுது, ஆன்ற பேருலகெங்கும், கோடிசூரிய ரொருங்குதித்தாற்போல் பிரகாசிக்கின்றது. இவர் காலத்து மற்றைப்புலவர் பிரபந்தங்களில் நண்பராலும் நடுநிலைவாணராலும் இவர் மெச்சப்பட்டும், அழுக்காறுற்றாரால் இகழப்பட்டுமிருத்தலின், அப்பொழுதே இவர் பெயர்போனவரென்று விளங்குகின்றது. இவர் பிரபந்தங்களிலேதேனும் முதல் முதல் அச்சிற்றோன்றியது 1593-ம் வருஷத்தில். இதைப் பதிப்பித்தவர் ஸ்டிராட்போற்றேரினரா யிருத்தலானும்; இவர் நாடகங்களில் அவ்வூரார் பலர் பெயர்கள் எடுத்தாளப்பட்டிருத்தலானும்; உள்ளூர் துறந்து, புறவூர் போந்து, விடாமுயற்சியோடும் ஊக்கத்தோடும் இவர் பாடுபட்

டுப் பணந்தேடிய நாட்களெல்லாம், முடிவில் தம்மூர்வந்து வாழ்நாளந் தத்தைக் கழித்தற்கு வேண்டிய சௌகரியங்களிலேயே கண்ணுயிரு ந்ததானும்; இவர், பிறந்தவூர் வாஞ்சை மிகவுடையவரென்று துணி யத்தக்கது. முக்கியமாயிந்நாட்டிலும், பொதுவாய் வேறு நாடுகளி லும், புலமையை நீங்கா நிழல்போல் தொடரும் வறுமையால், இவர் வாதனையுற்றதாகத் தோன்றவில்லை. 1594-ம் வருஷத்தில் இவருரிய நண்பராகிய ஸௌதாம்ப்டன் என்ற பிரபு, கவித்திறமைக்காக இவ ருக்கு ஓராயிரம் பவுன் பரிசளித்தார். மறுவருஷத்திற் சில பங்காளிக ளுடன், இவர், வேனிற்காலத்தில் நாடகங்களாடற்கேற்றதாகப் "பூகோள நாடகசாலை" யென்ற கூரையில்லாச் சாலையொன்று கட்டி னர். கோடைக்காலத்திலிதிலும், கூதிர்க்காலத்தில் "பிளாக்பிரயர்ஸ் சாலை" யிலும் கூத்தாடிவந்தனர். அடுத்தவருஷத்தில், ஷேக்ஸ்பி யர், லண்டன் நகரத்தில், தம்முயற்சியிற் பிறர் மதிப்பும் செல்வச் செழிப்புமுற்றுக் கவுரவமாய் வாழ்ந்துவருவதைக் காண்கின்றோம். ஆயினும், சகடக்கால்போற் சுழலும் அதிஷ்டவசத்தால், துக்கத்தை யும் அவர் கூடவேயநுபவிக்க நேர்ந்தது. ஹாம்நெட் என்ற மகன் அவ்வருஷத்தில் ஸ்டிராட்போற்டிலிறந்தான். அதுவுமன்றி, அவரிரு முதுகுரவரும் கொடிய வறுமை வாய்ப்பட்டழுந்தினர். இதையறிந்த ஷேக்ஸ்பியர், தாமீட்டிய திரவியத்தில் ஒரு பகுதியைத் தம்மன்னை யார் சீதநச்சொத்திலொன்றை அடைமானத்தினின்று மீட்க வுதவின துமன்றி, "பெரிய வீடு" என்ற பெயர்கொண்ட கொல்லை வீச்சுள்ள வொரு மனையைத் தமக்கென்று விலைக்குவாங்கி, அதில் தம் தாய்தந் தையரை யிருத்தினர். அவர் தாம் செய்த நாடகங்களைச் சீர்திருத்தியும், அவற்றில் தாமொரு பாத்திரமாகத் தோன்றியாடியும், ஒத்த புலவருக் குதவிபுரிந்தும் வந்தனர். அவர் ஆக்க நிறைவையும் உதாரகுணத்தை யும், ரிச்சேற்டு குவைணியென்ற ஸ்டிராட்போற்டாரொருவர் 1598-ம் வருஷம் அக்டோபர் மாதம் 25-ம் தேதி அவருக்கெழுதிய நிருபமொ ன்று விளக்குகின்றது. அதில் அவர் முப்பது பவுன் இவரிடத்திற் கடனாக வேண்டுகின்றார்; அவ்வாறுதவிசெய்யுந் தன்மையினரிவரென் பது அந்நிருபத்தில் தொனிக்கின்றது. இப்புலவர் திலகருக்கு எழு தப்பட்டது, அக்கடிதமொன்றே கால நாசத்துக்குத் தப்பி யெஞ்சி யுள்ளது; அதன் மூலம் ஆவானுற்றுக்கரை ஸ்டிராட்போற்டில் இவ

ரைப்பற்றிய எவ்விதப் பொருளையும் ஞாபகப் பெருஞ் சாதனமாகத் திரட்டிச் சேமித்து வைத்திருக்கும் விநோத சாலையிலிருக்கின்றது.

இவ்வாறு திருவுஞ் சீர்த்தியுமுற்று வாழும் நாளையிலே, அவர் தந்தையார் ஜான் ஷேக்ஸ்பியர், 1601-ம் வருஷத்தில் மண்ணுலகை நீத்தனர். நம் கவிராயர் மனைவியாரின் குணாதிசயங்களைக்குறித்து அதிகமாய்த் தெரியவில்லை. ஒரு சிறு சங்கதிமட்டுங் கூறப்பட்டிருக்கின்றது: அவர் தந்தையாருக்கு ஊழியஞ்செய்துவந்த டாமஸ் விட்டிங்டன் என்ற ஒரு கிழ இடையன், சாந்தருணத்தில் தன் மரணாந்த அறிக்கைப்பத்திரவாயிலாக, ஸ்டிராட்போற்டிலுள்ள ஏழைகளுக்கென்று இரண்டுபவுன் விட்டுப்போனான். அதைத் தருமத்திற் செலவிடும் அதிகாரத்துக்கு நம் புலவர்துணைவியைக் குறிப்பிட்டிருந்தான். அவள் தருமசிந்தையையும், தன் கீழுள்ளோர் விசுவாசத்தையும் பக்ஷத்தையுங் கவரவல்ல நயவொழுக்கத்தையும், இஃதொருவாறு குறிக்கின்றது. 1602-ம் வருஷத்தில், ஷேக்ஸ்பியர் 320 பவுன் கொடுத்து 107 ஏக்ரா பூமியையும் ஒரு வீட்டையும், மறுவருஷத்தில் 60 பவுன் கொடுத்து ஒரு பழத்தோட்டத்தையும் பண்டசாலையையும் ஸ்டிராட்போற்டில் விலைக்கு வாங்கினர். அந்நாளை நாடக சாலை முதலாளிகள் அட்டவணைகளில், இவர் பெயர், 1589-ம் வருஷத்தில் பதினாறுபேர்களுள் பன்னிரண்டாவது தானத்தும், 1596-ம் வருஷத்தில் எட்டுப்பேர்களுள் ஐந்தாவது தானத்தும், 1603-ம் வருஷத்தில் ஒன்பதுபேர்களுள் இரண்டாவது தானத்தும் காணப்படுகின்றமை, விடாமுயற்சியால் இவர் கைக்கொண்ட சீவனோபாயத்தில் தளராது மேன்மையுற்றதை விளக்குகின்றது; தேடின திரவியத்தைச் செலவிட்டவிதமோ, தம்வாழ்க்கையின் மாலைப்பொழுதை, அதன் உதயகாலவிடத்திற் கழிப்பதையே கருதினரென்பதைக் கருகாது காட்டுகின்றது. தீவிரமும் மனோதருமச்செறிவும் சேர்ந்து வாய்ந்த சிந்தையினர், தம் இலைதழைகாலத்தும் மலரவிழ்காலத்தும் கனிசெறிகாலத்தும் எவ்வித நெருக்கமான பெரு முயற்சிகளிலும் மாண்டவினைகளிலும் பகிரங்கமாக வாழ்ந்துழைக்கினும், தம் இலையுதிர்காலத்தைப் பெரும்பாலும் அதிக உபத்திரவமில்லாத அவகாசத்திற் கழிக்கவே விரும்புகின்றனர். நம் கூத்துவல்ல கவிஞருக்கும் அக்காலம் அணுகியது. வேஷம்பூண்டு நாடகமாடும்வேலை யவர்

மனத்துக்கிசைந்ததன்றென்பதைத், தம் அந்தரங்க சங்கதிகளிற் சில வற்றை யொருவாறு வெளியிட்டிருக்கும் பதினான்கடிப்பாக்கள் ஒன் றில், " பார்வைக்கு விசித்திரமாய் வேஷம்பூண்டேன் " என்று இலே சத்தோடு கூறியிருப்பதால் அறிகின்றோம். ஆகவே, இவ்வெறுப்பும், அவ்விருப்பும், கடைநாளை யாழ்ந்தாராய்ந்து நாடகங்கள் எழுதுவதி லேயே கழிக்கவேண்டுமென்ற விழைவும் தூண்டாநிற்ப, இருப தாண்டுகளாக வருந்திச் சேர்த்த கைம்முதலும் அதற்கிணங்கியுதவ, 1604-ம் வருஷத்தில் அவர் தம்மூரையடைந்தார். இதன்பின்னும் செயலின்றிச் சோம்பியிருக்கவில்லை. மறுவருஷத்தில் 440 பவுன் கொடுத்துச் சில சுதந்தரங்களைக் கைக்கொண்டார்; இதைப்பற்றிய சாதனப்பத்திரத்தில் இவர் பெயர் " ஆவானூற்றுக்கரை ஸ்டிராட்போ ர்டு வில்லியம் ஷேக்ஸ்பியர் கனவான் " என்று கண்டிருக்கின்றது. புதிதாயியற்றிய சில நாடகங்களின் தலையரங்காட்டத்தையும் மேற் பார்த்தார்; 1607-ம் வருஷத்தில் தம்மகள் ஸூஸானாவை, டாக்டர் ஜான் ஹால் என்பவருக்கு மணம்புரிவித்தார்; அதேவருஷத்தில் அவர் கடைத்தம்பி எட்மண்டு என்பவர் இறக்க, அவருக்கு உத்தரகிரி யைகள் நடத்தினார்; மறுவருஷத்தில் அவர் மகளுக்கொரு பெண் பிறந்து அவர் " தாத்தா " வாயினர்; அவ்வாண்டிறுதியிலேயே அவர் தம் அன்னையாரை யிழந்தார்; அன்றியும், அவர் ஒரு நண்பர் குழந் தைக்கு ஞானத்தகப்பனாகவிருந்து பெயரளிப்பதையும், தோட்டத் தில் விருக்ஷங்கள் நடுவதையும், ஸௌதாம்ப்டன் பிரபுவிடமிருந்து ஒருரிமையான நிருபத்தைப் பெறுவதையும், 1610-ம் வருஷத்தில் ஒரு கடனை மீட்கும்பொருட்டு வழக்குச்செய்வதையும், கடன்காரன் ஒளித்தோடப் பிணையாக நின்றானைத் தொடருவதையும், இராச்சிய பரிபாலன சங்கத்தில் தம்மூர்ப் பொது நன்மையைக்குறித்த சில விஷயங்களை நிறைவேற்றற்குரிய செலவின்பொருட்டு நன்கொடை யளிப்பதையும் காண்கின்றோம். இதனிடையே, இவர் தம்மூரிலும் இராஜதானியிலுமாக வேலைக்கு வேண்டுமாறு வசித்துவந்தார். 1612-ம் வருஷமுதல், லண்டன்நகரத்தை முற்றுந்துறந்து தம்மூரிலேயே தங்குவாராயினர்.

இதன்பின்னருங்கூடக் காலத்தை வீண்போக்கவில்லை. வாதிகள் பலருள் ஒருவராகத் தாம் விலைக்குவாங்கிய சுதந்தர விஷயமாக இவர்

வியாச்சியம் தொடுத்தலையும், தம்மூர்ப்பொதுநிலத்தைக்கோலி வேலி யிடுவோரை யெதிர்த்துத் தடுப்பதையும், 140 பவுனுக்குத் தம் நாடக சாலையருகே ஒரு வீடு விலைக்கு வாங்குவதையுங் காண்கின்றோம். 1613-ம் வருஷத்தில் இவர் சகோதரர் ரிச்சேற்டு தேகவியோகமானார்; லண்டனில் "பூகோள நாடகசாலை" யெரியுண்டழிந்தது; மறு வருஷத்தில் ஸ்டிராட்போற்டிலேயே ஒரு பெரு நெருப்புப்பற்றி ஐம்பத்து நான்கு வீடுகள் நீறாயின; நம் கவிராயர் வீடு ஒரு சேதமுமடைய வில்லை. முதற்கண் இராஜதானியை நீங்கி யூரடைந்தபின், இவர் எட்டு நாடகங்களியற்றினார்.

1616-ம் வருஷத் துவக்கத்திலேயே தம் அந்தியகாலம் நெருங்கி நின்றதை யகக்கண்ணாலறிந்தார்போல் தோன்றுகின்றது: ஏனெனின், இவர், ஜநவரி இருபத்தைந்தாம் தேதியிலே தம் மரணசாதனத்தை யெழுதி, மார்ச்சு இருபத்தைந்தாந்தேதியில் அதை யுறுதி செய்து முடித்தார். "எதற்கும் ஆயத்தமாயிருத்தலே யதிமுக்கியம்" என்ற தம் வாக்குக்குத் தகநின்றார்போலும். பெப்ரவரி பத்தாந்தேதியில் தம் மகள் ஜூடித் என்பவளை டாமஸ் குவைனி யென்பவருக்கு விவாகஞ் செய்துகொடுத்தார். இவர் மரணவேது இன்னதென்று உறுதியாய்த் தெரியவில்லை. தம்மைக் காணவந்திருந்த நண்பராகிய சில கவிவாணர்க்கு விருந்தளித்துக் களித்ததினாலுண்டான தேக அசௌக்கியமே காரணமென்று கூறுவாருமுளர். இயமன் பழியேலான் என்று முது மொழியுண்டே. எதுவேதேனுமாகுக: நம் கவீசர் தம் ஐம்பத்திரண்டாவது பிறந்தநாளில்—கி. பி. 1616-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 23-ம் தேதியன்று—பொய்யுடம்பை நீங்கிப் புகழுடம்பை நிலைநிறுத்தினார். இப்புலவர் பெருமானியற்றிய நாடகங்களிற் சிலவற்றையேனும் மொழிபெயர்த்து வெளியிட வெண்ணியிருப்பதால், இவர் கவிவன்மையையும் புத்தி விசாலத்தையும்பற்றிக் கூறவேண்டுவதின்று. இவரையும் இவர் நாடகங்களையுங்குறித்துப் பல பாஷைகளிலும் பல மேதையரும் எழுதியுள்ள நூற்றுக்கணக்கான கிரந்தங்களின் பெயர்களையும் விஷய சங்கிரகத்தையுமே வரையப்புகின், இப்புத்தக முழுதுமே போதாதே. வள்ளுவர், கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திபோன்ற கவியேறுகளின் மெய்ப்பெயரே தெரியாமை கிடக்க, சிலவாண்டுகளு

க்குமுன் ஜீவந்தராயிருந்த தமிழ்ப் புலவரைப்பற்றியே விசேஷமாக ஒன்றுமே தெரியவராத இந்நாட்டார்க்கு, இவையனைத்தும் புதுமையாகவே தோன்றும். ஆகவே, இப்புலவர் இலக்கியங்களையும் சரித்திரத்தையும் ஆராய்தற்கென்றே பேரறிஞராகிய "ஷேக்ஸ்பியர் சங்கம்" என்றொரு சங்கம் இன்னும் பலவாற்றானும் உழைக்கின்றதென்பதூஉம்; இவர் நாடகங்களின் மொழிபெயர்ப்புக்கள் வழங்காத நாகரீக பாஷை யுலகின்கண் இல்லையென்பதூஉம்; இவர் தாய் மொழிவாணரிலும் அருமையாக ஜெர்மன் பிரஞ்சுமுதலிய பிறமொழிப்புலவர் இவரைப் புகழ்ந்து வெகு சிலாக்கியமான விருத்தியுரைகள் எழுதியிருக்கின்றனர் என்பதூஉம்; இவர் கிரந்தங்கள் முழுமையும் ஆறணாமுதல் நானூறு ஐந்நூறு ரூபாக்கள் வரையும் விலைபெறும்படி யத்தனை தரங்களில் அச்சிடப்பட்டிருக்கின்றன வென்பதூஉம்; இவர்காலம்தொட்டிதுகாறும் இவர் நாடகங்கள் இடையறாது ஆடப்பட்டுப் பல்லாயிரம் ஜனங்களுக்கு தினே தினே ஆநந்தத்தை யளிக்கின்றன வென்பதூஉம்; இவர் நாடகங்களில் சில பாத்திரங்களாக ஆடுந்திறமைக்காகவே ஹென்ரி இர்விங் என்பவர் "ஸர்" என்ற புகழ்ப்பட்டத்தைக் காலஞ்சென்ற நம்மிராணியர்பால் பெற்றனரென்பதூஉம்; இவரைப்பற்றிய அதிசய வஸ்துக்களைச் சேமித்துவைத்தற்பொருட்டேயொரு விநோத சாலை யேற்பட்டிருக்கின்றதென்பதூஉம்; நம்மிராணியார் சுவஹஸ்த லிகிதங்கள் இரண்டு ஐந்து பவுனுக்கும் எட்டுப் பவுனுக்கும் ஏலத்திற் போக, நம்புலவர் கிரந்தங்களுக்கு வியாக்கியான கர்த்தர் ஒருவரது சுவஹஸ்தலிகிதம் நூற்றுப்பதின்மூன்று பவுன்களுக்கு ஏலத்திற் போயிற்றென்பதூஉம்; இன்னு மிவைபோன்ற பல வதிசயங்களையும் கூறப்புகின், அம்மம்ம, நம் நாட்டார் வியப்பைச்சொல்லவும் கூடுமோ! இவர் நாமத்தைச் "செகப்பிரியர்" எனத்திரித்துக்கொண்டது தக்கதேயாம். இவ்வாறு புலவரைச் சீராட்டி நன்குமதிக்கும் மொழிவாணருள் புலமையும் கவிவன்மையும் தழைத்தோங்குவதும், நமது நாட்டார்போல், புலவருக்கு இல்லாமையே இல்லாளாகவும், தெருத்திண்ணையே அரண்மனையாகவும், உபவாசமே சகவாசமாகவும், திண்டாடித்திரியவிட்டும்; அன்றேல் ஏதேனும் கொடுத்தழிப் பிச்சைக்காரனுக்குப் பிச்சையிடுவதுபோற் கொடுத்தும், அவர்களை யுபேக்ஷையோடு நடத்தும் மொழியாளருள் மெய்ப்புலமை நாளுக்கு நாள் குறைந்து தாழ்வதும்

இயற்கைப் பிரமாணத்துக்கேற்றதேயாம். முன்னாட்களிற் புலவரை யொருவாறு காத்தளித்துவந்த சுவதேச மன்னவரும் ஒழிந்தாராக, அவரை யாதரித்துப், புலமை சோர்ந்து தளர்ந்து அழிந்துபோகா வண்ணம் பேணியோம்பும் 'கடன், தேசாபிமானமும் பாஷாபிமானமுமுள்ள கனவான்கள் மேலதே. குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தே யென்பது பழமொழி. உண்மையுரைப்பதிற் குழவித் தன்மையும், ஆக்குந்திறமையிலும் அறிவின் பெருமையிலும் தெய்வத் தன்மையும் அமைந்து விளங்கும் கவிப்புலமையும் அத்தகையதே. இக் காலத்துத் தமிழ்ப்புலவரும், நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கித் தழைக்கும் பிறிது சில பாஷைகளையும், அம்மொழியாளர் துணிவையும் உற்றுநோக்கித், 'தக்கதே தங்கும்' என்ற வியற்கை நீதியிற் சிறிது நம்பிக்கைவைத்துச்; சிவபெருமான் குறுமுனிக் குரைத்த இலக்கிய விலக்கணங்களையன்றி வேறொன்றுமே கையாளேமென்ற மனவுதாரமில்லாப் பிடிவாதத்தைச் சற்றொழித்து; 'வழக்கு' 'ஆன்றோராட்சி' யென்ற நியாயங்களைப் பிறமொழிக்கும் பிறமொழிவாணருக்கும் கூட அற்றம்பார்த்துப் பொருத்திப் பெறத் தக்க பயனையடைந்து; தம்மொழி நீடூழி வழங்கி வாழ விரும்புவாராயின்,

> "பருவத்தோடொட்ட வொழுகல் திருவினைத்
> தீராமை யார்க்குங் கயிறு"

என்ற வாக்கையும்,

> "செய்தக்கவல்ல செயக்கெடும் செய்தக்க
> செய்யாமை யானுங் கெடும்"

என்ற வாக்கையும் ஒரு கணமும் மறவாதொழுகக் கடவர்.

## வில்லியம் ஷேக்ஸ்பியர் இயற்றிய பிரபந்தங்களின்

# அட்டவணை

நாடகங்கள்:—

1. சண்டமாருதம்.
2. வெரோனா நகரத்துக் கனவான்களிருவர்.
3. விண்ட்ஸர் நகரத்து உற்சாக மனைவியர்
4. படிக்குப் படி.
5. நகைபிழை நாடகம்.
6. ஒன்றுமின்றி யதிகவீண் தொல்லை.
7. காதலுழைப் பிழப்பு.
8. நடுவேனிற் கனவு.
9. வெனிஸ் வர்த்தகன்.
10. நீ விரும்புவதுபோல்.
11. துஷ்டையைப் படிவித்தல்.
12. நன்முடிவினநல்லவே.
13. பன்னிரண்டாமிரவு அல்லது உன் மனம்போல.
14. கார்காலக் காதை.
15. ஜான் அரசன் வாழ்வும் சாவும்.
16. இரண்டாவது ரிச்சேற்டு அரசன் துன்பியல் நாடகம்.
17. நான்காவது ஹென்ரி அரசன்—முதற் பாகம்.
18. ஷை ஷை —இரண்டாம் பாகம்.
19. ஐந்தாவது ஹென்ரி அரசன் வாழ்வு.
20. ஆறாவது ஹென்ரி அரசன்—முதற் பாகம்.
21. ஷை ஷை —இரண்டாம் பாகம்.
22. ஷை ஷை —மூன்றாம் பாகம்.
23. மூன்றாவது ரிச்சேற்டு அரசன் துன்பியல் நாடகம்.
24. எட்டாவது ஹென்ரி அரசன் புகழ்பெற்ற சரிதை.
25. டிராயிலெஸஸும் கிரஸிடாவும்.

26. கோரியலானெஸ்.
27. டைடஸ் அண்ட் ரோனைக்கஸ்*
28. ரோமியோவும் ஜூலியத்தும்.
29. ஆதன்ஸ் நகரத்துட் டைமன்.
30. ஜூலியஸ் ஸீஸர்.
31. மாக்பெத்.
32. ஹாம்லெட் என்ற டெங்மார்க்தேசத்திளவரசன்.
33. லீயர் அரசன்.
34. ஒதெல்லோ என்ற வெநிஸ் மோரியன்.
35. அந்தோனியும் க்ளியோபத்திராவும்.
36. ஸிம்பலின்.
37. பெரிக்லிஸ். *

காவியங்கள்:—

1. வீநஸூம் அடோநிஸூம்.
2. லூக்ரீஸின் கற்பழிவு.
3. பதினான்கடிப்பாத்தொகை.
4. ஒரு காதலன் முறைபாடு.
5. காமவெறிகொண்ட பிரயாணி.
6. சில சாகித்யங்களைப்பற்றிய பதினான்கடிப் பாக்கள்.
7. பீநிக்ஸ்புள்ளும் ஆமையும்.

---

இவ்வுடுக்குறியிட்ட நாடகங்களிரண்டும் ஷேக்ஸ்பியரியற்றினவல்ல வென்பது பலர் துணிவு.

# பொதுப்பாயிரம்

**ஆங்கில நாடகங்கள்.**—பெரும்பாலும் கிரேக்க நாடகங்களை முதனூலாகக்கொண்டன. கிரேக்க நாடகவியற்படி நாடகங்கள், இடம் வினை காலம் என்ற மூன்றம்சங்களினும் இசைந்திருத்தல்வேண்டும்: அதாவது, ஒரு நாடகத்தையாட இரண்டியாமஞ் செல்லுமாயின், அதிற் கூறப்பட்ட சங்கதிகள் முற்றும், ஒரே இடத்தில் இரண்டியாமவரைக் குள் நிகழத்தக்கனவா யிருத்தல்வேண்டும்; பல்வேறிடங்களிலும், இடை நெடுங்கால மிறந்தவமயங்களிலும் நடந்த வெவ்வேறு விஷயங் களை, ஒரேயிடத்தில் ஒரே காலத்தில் இடையறுத்தொடர்பாய் நடந் தனவாக நடித்துக்காட்டல் குற்றமென்பது கிரேக்க கவிஞர் கொள் கை. கால்கைகளுக்குத் தளைகளிட்டுக் கரணம்போட முயன்றாற்போல், இவ்விதப் பந்தங்களுக்குண்ணின்று நாடகங்களியற்றப்புகின், அவ்வில க்கியம் ஒருநாளும் முதிர்ச்சியுற்றுக் கடைத்தேறாதென்பது யாவர்க்கும் எளிதிற்புலப்படும். இவ்வரம்புகளைக் கடந்து நடந்ததினாலேயே ஆங்கில நாடக விலக்கியம் இப்பொழுது இணைபெதிரின்றி யிலங்குகின்றது. ஆங்கில நாடகங்கள் முதற்கண் ஆண் பெண்களாக உருவகஞ் செய் யப்பட்ட பாவ புண்ணியங்களையே பாத்திரங்களாகக் கொண்டு, ஒரு வாறு பிரபோத சந்திரோதயம்போல எழுதப்பட்டுவந்தன. நாளாவர்த் தியில் இலக்கியப் பயிற்சி விருத்தியாகி, கற்பனாஸ்திரிபுருஷரும் மெய்யாகவே வாழ்ந்திறந்த மாந்தரும் நாடக பாத்திரங்களாகக் கையா ளப்பட்டனர். இவ்விருத்திக்கு ஷேக்ஸ்பியர் ஒரு முக்கிய காரணர். சரித்திரங்களிலும் பழைய கதைகளிலும் கூறப்பட்டுள்ள பல விஷயங் களையும் மாந்தரையும் தம் நாடகங்களிற் கையாண்டிருக்கின்றனர். இவர் தம் நாடகங்களை ஐந்து அங்கங்களாகவும் ஒவ்வோரங்கத்தையும் பல களங்களாகவும் வகுத்திருக்கின்றனர். இவர் நாடகங்கள் மூன்று தன்மையின:—மெய்ச் சரித்திரவிஷயங்களை ஆதாரமாகக்கொண்ட '* சரித்திர நாடகங்கள்;' இவையல்லாதனவற்றுள், சோகரசமே மிகு ந்துள்ள '† துன்பியல் நாடகங்களும்,' சந்தோஷமும் விநோதமும் விகடமுமே மிகுந்துள்ள '‡ இன்பியல் நாடகங்களும்.'

---

* Historical Plays. † Tragedies. ‡ Comedies.

**இவர் நாடகப்போக்கு.**—இம்மொழி பெயர்ப்புக்களை வாசிப்பவருக்குத் தானே தெரியவருமாயினும், முதற்கண் உதவியாமாறு, இவர் வினைசெயல் விதத்தைச் சுருக்கிச்சொல்லுவாம்: அநேகமாய் இவர் கதைகளை யுண்டாக்குவதில்லை. யாதானும் சரித்திரத்தினின்றேனும் பழைய கதைப்புத்தகத்தினின்றேனும் ஒரு கதையைத் தெரிந்தெடுத்துத் தனக்குவேண்டியவாறு சிறிதுமாற்றித் திருத்திக்கொண்டு, அக்கதையவ்வாறு நிகழ்ந்து முடிந்ததற்கு என்னகாரணம், அதன் பாத்திரங்கள் என்ன குணங்களையுடையவராயிருந்திருப்பார், பல்வேறு தன்மையினரும் ஒருவரையொருவர் எவ்விதம் தம் குணவொழுக்கங்களாற் பிறர் குணவொழுக்கங்களைத் திருத்தியும் மாற்றியும் செய்திருப்பார், என்பவற்றைத் தம்மரிய மூளைப்பலத்தாலும் உலகஞானத்தாலும் ஆராய்ந்தறிந்து வெளிப்படுத்தியிருக்கின்றார். இவ்வாராய்ச்சியிலும் யூகத்திலுந்தான் இவர் அருமைபெருமைகள் விளங்குகின்றன. எவ்வாறெனின்: பழவினைப்பயனாகும் விபத்துக்களாலன்றி, நல்லார் தாழ்வதாகவும் பொல்லார் வாழ்வதாகவும் நாடகவாயிலாக வுலகத்தார்க்குக் காட்டிப் போதித்தல் ஆபத்துக்கிடமாகும்; நன்மை தீமையிலுள்ள விருப்பும் வெறுப்பும் ஒழிந்து, தெய்வபத்தியும் நம்பிக்கையும் அழிந்து, சுவநயம்பேணலே கைப்பிடி தருமமாகிவிடும்; ஒருவற்குண்டாகும் இடையூறிடுக்கண்களுக்கு அவன் தீச்சிந்தையும் தீச்செயல்களுமே காரணங்களாகக் கைப்புண்போல் கருகாது காட்டினன்றோ உலகம் பயன்பெற்றுய்யும்; அஃதன்றோ கடவுளாணைக்கும் பொருந்தியது; ஆகவே, வெள்ளறிவினர்க்கும் வெளிப்பார்வைக்கும் முதலில் சற்குணர் தீங்குறுவதாகவும் துற்குணர் நன்மையுறுவதாகவும் தோன்றினும், ஊன்றிப்பார்த்தாலோசிக்கின் நியாயவுண்மை வெளிப்படல்வேண்டும். என்றும் மாறாது உலகத்தில் நடைபெறும் நீதிநியாயங்களை யெடுத்தோதுவதில் இவர் மிக்க சமர்த்தர். துக்காந்தமான எந்த வுண்மையிலக்கியமும், அத்துக்கத்தையநுபவிப்பார் செய்த தவறுகளினாலும் அக்கிரமங்களினாலுமே அத்துயரம் விளைந்ததாக நிரூபித்துக்காட்டல் வேண்டும். இப்பரீக்ஷைப்படி யிவர் நாடகங்கள் உத்தம விலக்கியங்களே. அன்றியும் இவர் செய்த முக்கிய நாடகங்கள் சிலவற்றில் வேறொரு பெரிய நியாயம் விளக்கிக்காட்டியிருக்கின்றனர். அதாவது, தீமையின் பயனாக

வினையுந் துன்பம், அத்தீங்கிழைப்பார் பொதுவா யெவ்வளவு மேம பட்ட ற்குணராயிருக்கின்றனரோ அவ்வளவு மிகக் கொடியதாயிருக்கும் என்பதே.

> "தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
> தெய்வமே கண்முன்னே நின்றுறுக்கும்—தெய்வம்
> இலதென்பார்க் கில்லை" யென்ற மூதுரையும்,

"நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும் உய்யுமால் உய்யாபிற" என்ற மூதுரையும் இந்நியாயத்தைத் தழுவி நிற்பனவே. ஒரு வேட்டியைத் திருடிய குறவனை ஐந்தாறு பிரம்படி யடித்துவிடுவதும், அதே குற்றஞ்செய்த வுயர்குணத்தானை ஐந்தாறு மாதம் கடுஞ்சிறை யிடுவதும் இந்நியாயம்பற்றியே. சடப்பொருள்களின் சார்பான விஷயங்களிலும் இதைச் சாதாரணமாய்க் கவனிக்கலாம். சில மணற்றுகள்கள் ஒரு செக்கினுள் விழுந்தால் கேடில்லை; அதே துகள்கள் ஒரு கைக்கடியாரத்துள் நுழைந்துவிட்டாலோ எல்லாம் நிலைகுலைந்து பாழாய் முடியும்; காலில் முள் தைத்தவுடன் வெடுக்கென்று பிடுங்கியெறிந்து மேற்செல்லுவார், அம்முள் கண்ணில் தைத்துவிட்டால் என்ன பாடுபடார்; தெருத்திண்ணையிலிருந்து தவறி விழுந்தார் சிறு காயங்களுறுவர், முகட்டுச்சியினின்றும் விழுந்தார் பிழைப்பரிதே. இந்நியாயத்தை 'ஒதெல்லோ' நாடக நிகழ்ச்சியிற் காணலாம்; ஏனெனின், ஒதெல்லோவும் டெஸ்டிமோனவுஞ் செய்த அற்பக்குற்றங்களையும் தவறுகளையும் அவரினுந்தாழ்ந்தோர் செய்திருப்பின் இத்துணைப் பெருந்துயரம் விளைந்திராது.

மனத்தைக் கவரும் மாய வித்தையில் மகா வல்லவராகிய ஷேக்ஸ்பியர், ஒதெல்லோ நாடகத்தில், கதைநிகழ்காலத்தை யிரண்டுவிதமாகக் குறிப்பித்துப் படிப்பவர் மனங்களில் அவர் அறியாமலே இருவித அபிப்பிராயங்கள் உண்டாகும்படி செய்திருக்கின்றனர். நாடகத்தை வாசித்தவுடன் ஒதெல்லோ ஸைப்பிரஸ்தீவை யடைந்த காலத்துக்கும் நாடக முடிவுக்கும் இடையே பல வாரங்கள் அல்லது மாதங்கள் கழிந்திருக்கவேண்டுமென்று மனதிற்படும் எண்ணம் சரியானதே; இயாகோவினது வஞ்சனைத்திறனையும் கொடுமையையும் காட்டற்கும், அவன் பாழாக்கிய காதலின்பம் நெடுநாளையதென்று குறித்தற்கும்

அக்கால நிகழ்வு ஆவசியகமே; கதை நிகழ்ச்சிக்கும் இவ்வித அவகாசம் இன்றியமையாததே. ஆயினும், பாவத்தின் பயனைத் துன்புவிளையுந் தீவிரத்தைவிளக்கி, மாந்தர்க்கு நன்மதியுறுத்தும்பொருட்டு, முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையுமென்பதைக் காட்டுவார்போல், எல்லாம் முப்பத்தாறுமணி நேரத்துக்குள் முடிந்துவிட்டதாக ஒருவாறு காலத்தைக் குறித்திருக்கின்றார். இதை விவரித்து விளக்கப்புகின் விரியும்; வேண்டுபவர் கவனித்தறிந்துகொள்க.

'ஒதெல்லோ' நாடகம் கி. பி. 1604-ம் வருஷத்தில் இயற்றப் பட்டதென்பது பெரும்பான்மையார் துணிவு. வேறு கதைகளிலுள்ள சம்பவங்களிற் சிலவற்றை யெடுத்துச் சேர்த்திருப்பதுண்மையாயினும், இந்நாடகக் கதைக்கு முதனூல், கி. பி. 1566-ம் வருஷத்தில் வெநிஸ் நகரத்தில் கிரால்டி ஸிந்தியோ என்ற புலவர் இத்தாலிய பாஷையில் இயற்றி வெளிப்படுத்திய எழாவது காதையே. அக்காதையின் மூலமோ ஆங்கில மொழிபெயர்ப்போ ஷேக்ஸ்பியர் வாசித்ததென்பதுறுதியாய்த் தெரியவில்லை.

தாமெடுத்துக்கொண்ட கதையை இரண்டுவிஷயங்களில் மாற்றியிருக்கின்றனர்: மூலத்தில், டெஸ்டிமோனை, ஒதெல்லோவின் முன்னிலையில், அவன் விரும்பியபடி, இயாகோவால், மணலால் நிரப்புண்ட ஒரு மேற்சோட்டால் அடித்துக் கொல்லப்படுகிறாள்; பின்பு, இருவரும், அவள் மரணம் அகஸ்மாத்தாய் நேரிட்டதென்று தோன்றச் செய்யுமாறு, வீட்டு மேற்கூரையைப் பிடுங்கி யவள்மேற் போட்டுவிடுகிறார்கள். ஒதெல்லோ தற்கொலை செய்துகொள்ளவில்லை; அவன் சிறையிலடைக்கப்பட்டுக் கடைசியில் டெஸ்டிமோனையின் பந்துக்களாற் கொல்லப்படுகிறான்; இயாகோ, வேறு சில குற்றங்களைச் செய்ய முயன்றபின், குற்றங்களை யொப்புக்கொள்ளுமாறு அவனைச் செய்த சித்திரவதையாலிறக்கிறான். இக்கதையை ஷேக்ஸ்பியர் மாற்றியிருப்பது எவ்வளவுசிதமாயும் நீதிபுகட்டுதற் கேற்றதாயு மிருக்கின்றதென்பது, சிறிது ஆழ்ந்தாராயின் புலப்படும். இந்நாடகத்திற் குறிப்பிட்டிருக்கும் துருக்கர் படையெழுச்சி சரித்திர வுண்மையே; இது நிகழ்ந்தது கி. பி. 1570-ம் வருஷம் மே மாதத்தில். கதையின் பெரும்பாகம் நிகழும் இடம் ஸைப்ரஸ் த்வீபத்தில் முக்கிய துறைமுகமாகிய பாமகுகுஸ்தா பட்டணமே.

இந்நாடக பாத்திரங்கள் அனைவரும் கிறிஸ்தவர் ஆதலின், அம்மதக்கொள்கைகளிற் சிலவற்றை முன்னரே கூறுதொழியின், மொழிபெயர்ப்பில் சில பாகங்கள் சிலர்க்கு நன்குவிளங்கா: தேவன் பரமண்டலத்திலிருக்கின்றார்; அவரைச்சுற்றி அவரது ஏவலியற்றும் தேவதூதர் இருக்கின்றனர்; பூமியில் அவரால் சிருஷ்டிக்கப்பட்ட மனிதர் வாழுகின்றனர்; பாதாளத்தில் நரகமிருக்கின்றது; அது நெருப்பும் பலவித வேதனைகளும் வாய்ந்து, தேவனது ஆணைகடந்து அத்தண்டனையுற்ற பைசாசங்களால் நிறைந்துள்ளது. தேவனெப்பொழுதும் மனிதனுக்கு நன்மையை நாடுகின்றார்; பைசாசங்கள் பாவத்தையே பெருக்க முயலுகின்றன. பாவங்களுக்கு மனம்வருந்தித் தேவனது கிருபையை வேண்டினோரது குற்றங்களைப்பொறுத்து அவர் காப்பாற்றுவார்; உலகாந்தகாலத்தில் அவரவர் பாவபுண்ணியங்களையும் பக்தியையும் மதிப்பிட்டு, நல்லவரைத் தம் சாமீபபதவிக்கு ஏற்றுக்கொண்டு, வினையரை நரகத்துள் தள்ளிவிடுவார்; தேவனது சாலோக சாமீப பதவியே சுவர்க்கம்; மானிடருக்காக அவதரித்த தேவகுமாரராகிய ஏசு கிறிஸ்துவை நம்பல்வேண்டும்; அங்ஙனம் அவரை நம்பினோர்பொருட்டு அவர் தமது தேவபிதாவோடு மன்றாடி அவர்கள் பாவங்களைப் பொறுத்தருளும்படி செய்வார்.

தேவனது திருநாமத்தை வீணிலெடுக்கலாகாதென்பது அவர் கட்டளையெனினும், ஊத்தை வாயினரும் தாபவயப்பட்டாரும் பேசும்பொழுது அவர் பெயரைக் கூறித் தம் மொழிகளை வற்புறுத்துவதுண்டு. தேவனது மன்னிப்பைப் பெறாத பாவத்துடன் மரிப்பவன் நரகத்தையடையக்கூடுமாதலின், இரவு நித்திரை போகுமுன், அன்றன்று செய்த பாவங்களை மன்னித்தருளும்படி கடவுளைப் பிரார்த்திப்பது வழக்கம்.

# ஒதெல்லோ

## நாடக வரலாறு.

ஐரோப்பா கண்டத்திலே இத்தலிதேயத்திலே வெநிஸ் என்றொரு நகரமிருக்கின்றது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னர், அந்நகர வாசிகள், தம்மால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரபுக்கள் பலரை 'ட்யூக்' என்ற தலைவரையுடைய ஓர் துரைத்தன பரிபாலன சங்கமாக நியமித்து, அச்சங்கத்தைக்கொண்டே குடியாட்சி புரிந்து வந்தனர். அன்னார் துரைத்தனம், கப்பலேறிக் கடலைக்கடந்து பிறநாட்டாரோடு செய்த வாணிக பலத்தாலும், இராணுவ பலத்தாலும், அநேக தீவங்களையும் நாடு நகரங்களையும் தன்னாட்சிக்கீழ்ப்படுத்திச், செல்வஞ் செழித்து விளங்கிற்று. அத்துரைத்தனத்தில் ஒதெல்லோ என்ற கிறிஸ்தவ மோரியன் ஒருவன் இராணுவத் தலைவனாகவிருந்தான். மோரிய சாதியார் ஐரோப்பியரல்லர்; ஆப்பிரிக்காகண்டத்து மிலேச்ச சாதியாருள் ஒரு வகுப்பார். மகமதிய மதத்தினர்; கறுத்த மேனியர்; தடித்த கீழுதடும் கரிய குறுமயிருமுடையவர்; முடலையாக்கையர்; முழுவலிமாக்கள்; முரட்டுத்தன்மையர்; கண்டவர் மனத்தில் அன்பிலும் அச்சத்தையே விளைக்கத்தக்கவர்; யுத்தவீரத்திலும், சிலவகை நாகரிகங்களிலும் மேம்பட்டவர். இது நிற்க: துரைத்தன சங்கத்தாருள் ப்ரபாண்ஷியோ என்றொரு பிரபுவிருந்தார். அவர் ஒதெல்லோவின்மேற் பிரியமாயிருந்தார். ஒதெல்லோ அடிக்கடி யவர் வீட்டுக்குப்போய்ப் பேசிக்கொண்டிருப்பது வழக்கம். அப்பிரபுவுக்கு டெஸ்டிமோனா வென்றொரே மகளிருந்தாள். அவள் இளமையும் அழகும் நற்குணமும் இன்சொல்லும் அமைந்தவள். அவ்வூர் உயர்குல இளைஞரிற் பலர் அவளை மணம்புரிய விரும்பினர்; ராடரிகோவென்ற கிரகஸ்தனும் இவ்வாறு விழைந்தவருள் ஒருவன். அவளோ இக்காளையர் ஒருவரையுமே விரும்பவில்லை. ஒதெல்லோ தன் வாழ்நாளின் சரித்திரத்தையும் பிறதேயங்களில் தான் கண்ட அதிசயங்களையும் விநோதங்களையும்பற்றி யடிக்கடி பேசுவதை, இப்பெண்மணி அவாவுடன் செவியாரக்கேட்டு, மனமுருகி, அவன் பட்ட கஷ்டங்களுக்காகப் பரிதாபமுற்று, முடிவில் அவன்மேல்

அளப்பருங்காதலுற்றனள். ஆனால், அவனைத் தான் மணம்புரியத் தன் தந்தை யிணங்காரென்றறிந்து, அவர் ஐயமுறாவண்ணம் தன் காதலை யவர்க்குத்தெரியாது மறைத்து நடித்துவந்தாள். அவள் யௌவனத்தையும், அதிரூபலாவண்ணியத்தையும், தன்மேற் காட்டிய பரிதாபத்தையும், மலரின் மணம்போல் மறைக்கமுடியாது தோன்றும் காதற்குறிகளையுங் கண்ணுற்ற முரட்டுமோரியனும், அவள்மேல் அடங்காக் காதல்கொண்டு தன்னிலையழிந்தான். இவர் காதல் கள்ளக்காதலாக, நம்பத்தக்க உரிமையான தூதொன்று ஆவசியகமாயிற்று. ஒதெல்லோவின் நண்பனாகிய மிக்கேல் காஷியோ என்ற கிரகஸ்தனொருவன், அத்தொழிலுக்கிசைந்து, உதவி புரிந்தான். இதன் கைம்மாறாக மோரியன் அவனைத் தன் உபசேனாபதியாக்கிக்கொண்டான். அவன் துவஜதாரியாகிய இயாகோ வென்பவன் அவ்வேலைக்குக் காஷியோவினும் உரியவனும் அருகனுமாயிருந்ததால், இதன்பொருட்டு ஒதெல்லோவின்மேற் கடும்பகைகொண்டான். காதல்வயப்பட்டு மதிமயங்கிய ஒதெல்லோ, தன் செய்கை மித்திர வஞ்சகமானதென்பதைச் சிறிதும் சிந்தியாது, பிதிர்த்துரோகமென்பதையும் கூடாவொழுக்கமென்பதையும் கருதாது அதற்குடன்பட்ட டெஸ்டிமோனாவை, அவள் பிதா ப்ரபான்ஷியோ அறியாமல் வீட்டைவிட்டுத் திருட்டுத்தனமாய்க் கடத்தி[illegible] மணம்புரியத் துணிந்து, ஓரிரவில் அவ்வாறு கடத்தினான்.

இதையறிந்த ராடரிகோவும், அவனுக்கு டெஸ்டிமோனாவின்மேலுள்ள காதலுக்குதவிபுரிவதாக அவனிடம் பணம்பற்றியிருந்த இயாகோவும், கூடுமாயின் விவாகத்தைத்தடுக்க நினைந்து, ஒன்றையுமறியாது நித்திரை செய்துகொண்டிருந்த ப்ரபான்ஷியோ பிரபுவை நள்ளிரவிற் சென்றெழுப்பி, அவர் மகள் ஒளித்தோடிய சங்கதியைத் தெரிவிக்கின்றனர். பிரபு, முதலிற் சிறிதும் நம்பாது கோபங்கொண்டு, பின்பு தம்மகள் வீட்டிலில்லாமைகண்டு நம்பி, மணியிழந்த நாகம்போல் நெஞ்சம் பதைபதைத்துப் பிரலாபித்துத் துணைக்குச் சிலரைத் திரட்டிக்கொண்டு ராடரிகோவுடன், ஒதெல்லோவையும் காணாமற்போன மகளையும் தேடப் புறப்படுகின்றார். ஒதெல்லோவின்மேல் தனக்குள்ள பகைமையை மறைவாய்ச் சாதிக்கவெண்ணிய இயாகோ இதற்குள்

1. அங்கம்—முதற்களம்.

ழவிவிடுகிறான்; ஒதெல்லோ டெஸ்டிமோனு இவர்கள் விவாகமும் நிறைவேறிவிடுகிறது.

I. இரண்டாங் களம்.

ராடரிகோவைவிட்டு நீங்கிய இயாகோ நேராக மோரியனிடம் வந்து சில வஞ்சனைமொழிகள் பேசிக்கொண்டிருக்கையில், துரைத்தன விஷயமாகத் திடீரென்று கிடைத்த சில சமாசாரங்களால் இரவிற் கூடிய துரைத்தன பரிபாலன சங்கத்தாரிடமிருந்து, ஒதெல்லோவைத் தேடிக்கொண்டு காஸியோவும் சில வுத்தியோகஸ்தரும் வந்து சேருகின்றனர். இவர்களுடன் பேசிக்கொண்டு சங்கத்துக்குச்செல்லப் புறப்படுகையில், ப்ரபான்ஷியோவும் அவர் சார்பினரும் வந்தடைகின்றனர். ஒதெல்லோவின் பொறுமையினுலும் மனவமைதியினுலும் கலகம் தடைப்பட்டு, எல்லாருமாகச் சங்கத்தைநோக்கிச் செல்கின்றனர்.

I. மூன்றாங் களம்.

வெநிஸ் துரைத்தனத்துக்கு விரோதிகளான துருக்கர் அதன் ஆதீனத்துக்குட்பட்ட ஸைப்ரஸ் தீவைநோக்கி நாவாய்ப்படையெடுத்துப் போவதாகக் கேள்வியுற்றுச் சங்கம் கூடியிருக்கின்றது. மந்திராலோசனை மத்தியில், ப்ரபான்ஷியோ, ஒதெல்லோ முதலியோர் வந்து சேர்ந்து, ப்ரபான்ஷியோ, தம் மகளை வசிய மந்திரங்களினுலும் மருத்தீட்டினுலும் மதிமயக்கித் திருடிச்சென்றதாக, ஒதெல்லோவைக் குற்றஞ்சாட்டுகிறார்.

சபையாரால் வினவப்பட்ட மோரியன், நடந்த விருத்தாந்தத்தையுரைத்து, அதன் மெய்ம்மையை டெஸ்டிமோனுவின் வாய்மொழிகளினுலேயே நிரூபிக்க, அவர்கள் விவாகம் உறுதியடைகின்றது. துருக்கரை யெதிர்க்கச்செல்லும் படையின் சேனுபதியாக ஒதெல்லோ நியமிக்கப்பட்டு, மறுநாட் காலையிலேயே புறப்படவேண்டுமென்ற கட்டளையும் பெறுகிறான். டெஸ்டிமோனுவும் அவனுடன் ஸைப்ரஸுக்குச் செல்லத் துணிகிறாள். அவளைப் பின்பு அழைத்துவர இயாகோவை நியமித்துத் தானும் தன் உபசேனுபதி காஸியோவுமாக முதலில் செல்ல ஒதெல்லோ நிச்சயிக்கிறான். மோரியன்மேலுள்ள வன்மத்தைச் சாதித்தற்கோருபகரணமாகவும், தனக்கு வேண்டிய திரவியங் கொடுத்தற்பொருட்டும், ராடரிகோவையுடனழைத்துச் செல்ல விரும்

பிய இயாகோ, பரிதானங் கொடுத்து டெஸ்டிமோனவின் காதலை விலைக்கு வாங்கிவிடலாமென்றும், நாளாவர்த்தியில் மோரியனை வெறுத்து அவள் வேறிளைஞரை நோக்குவாளென்றும், பலவிதமாக அவனுக்குப் போதனைசெய்து, அவனது சொத்துக்களையெல்லாம் காசுக்கு மாறிப் பணந்திரட்டி யெடுத்துக்கொண்டு, பிறரறியாவண்ணம் பொய்த்தாடி தரித்து மாறுவேஷம்பூண்டு, ஸைப்ரஸுக்குப் புறப்படும்படி அவனைத் தூண்டிவிடுகிறான்.

II. முதற்களம்.

கடற்கொதிப்பாலலைப்புண்டு, முதலில் காஸியோ மரக்கலமும், பின்பு டெஸ்டிமோனா, இயாகோ, ராடரிகோ முதலியோரேறிவந்த மதலையும், கடைசியில் ஒதெல்லோ நாவாயும் ஸைப்ரஸ் த்வீபத்தையடைகின்றன. துருக்கர் கப்பற்படை சமுத்திரத்திற் சிதறுண்டழிகின்றது. மோரியனும் டெஸ்டிமோனவும் தங்கள் அரண்மனைக்குச் செல்கின்றனர். நயவஞ்சகக் கள்வனாகிய இயாகோ, தனக்கு மோரியன்மேலுள்ள வன்மஞ்சாதிக்க இதுமுதல் தொடங்குகிறான். இவன் வஞ்சனையே இந்நாடகத்தின் சூத்திரக்கயிறு. இவனுக்கு ஒதெல்லோவின்மேலுள்ள பகைமைக்குக் காரணங்கள், தனக்கின்றிக் காஸியோவுக்கு உபசேனாபதி உத்தியோகத்தைக்கொடுத்தது ஒன்று; தன் மனைவி எமிலியா விஷயமாக ஒதெல்லோவின்மேற் கொண்ட சந்தேகமொன்று; ஆயினும், இவன் சுபாவத்தீச்சிந்தையே முக்கியகாரணம். முதற்கண் காஸியோவை வேலையினின்றும் நீக்க நினைந்து, அவன் டெஸ்டிமோனவின்மேற் காதலாயிருப்பதாயும், அன்றிரவு காவற்கூடத்தில் அவனுக்குக் கோபமூட்டிக் கலகம் விளைவித்து, அதுகாரணமாக அவன் தன் உத்தியோகத்தை யிழக்கும்படிசெய்தலே முதற்கருமமென்றும், ராடரிகோவுக்குப் போதனைபுகட்டி ஆயத்தஞ்செய்கிறான். காஸியோவுக்கும் டெஸ்டிமோனவுக்கும் கள்ளக்காதலுண்டென்று மோரியனிடம் அபவாதங்கூறல் இவன் உத்தேசம்.

II. இரண்டாங் களம்.

ஒதெல்லோவின் ஆணைப்படி, துருக்கர் படை நாசத்துக்காகவும், அவன் விவாக வுற்சவத்தின் பொருட்டும், எல்லோரும் விருந்தாடிக் களிக்கும்படி பறையறையப்படுகின்றது.

II. மூன்றாங் களம்.

தானே நேரில் இராக்காவலை மேற்பார்க்கும்படி சேனாபதியின் கட்டளையைப்பெற்ற காஸியோ மதுபானத்தால் எளிதில் மதிமயங்குந் தன்மையனென்பதை இயாகோ தெரிந்தவனாதலின், அவனைத் தந்திரமாய்ச் சிலருடன் குடித்து வெறிகொளச்செய்து, அவ்வமயத்தில் ராடரிகோ மூலமாக வொரு கலகத்தை விளைக்கின்றான். அவ்வரவம் கேட்டெழுந்துவந்த ஒதெல்லோ, இயாகோ எதிர்பார்த்தவண்ணமே, காஸியோவை உபசேனாபதி யுத்தியோகத்தினின்றும் நீக்குகிறான். வெறிதெளிந்து விசனித்துப் புலம்பும் காஸியோவைத், தன் சூழ்ச்சி முற்றுற, இயாகோ, பலவாறு தேற்றி, அவன் டெஸ்டிமோனாவின் தயவைப் பிரார்த்தித்துப் பெற்று மோரியனிடம் அவளை வேண்டிப் பேசும்படிசெய்தால், உத்தியோகத்தை மீட்டுமடையலாமென்று, அவனுக்கு வழிசொல்லிக் கொடுக்கின்றான். இது நக்கவழியேயாயினும், அவ்வாறு காஸியோ டெஸ்டிமோனாவுடன் பேசுவதன்மூலமாகவும், அவள் அவன்பொருட்டுச் 'சிபார்சு' செய்வதன்மூலமாகவும், ஒதெல்லோ மனத்திற் சமுசயத்தை யுண்டாக்கித் தன்னெண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளல் இப்பாதகன் உத்தேசம். 'பைசாசமும் காரியவசமாக வேதமோதும்,' அன்றோ?

III. முதற்களம்.

பொழுது புலர்ந்தவுடன், டெஸ்டிமோனாவின் தயவைப் பிரார்த்திக்குமாறு காஸியோ அரண்மனையை அடைந்து, அவளுடன் தனித்துப் பேச ஒரு நல்ல சமயம் பார்த்துதவும்படி, அவள் சேடியும் இயாகோ மனைவியுமாகிய எமிலியாவை வேண்டிக்கொள்கிறான். தன் உத்தேசத்துக்கு இசைவாயிருப்பதால், இயாகோவும் அவ்வாறு காஸியோவுக்குதவிசெய்யும்படி தன் மனைவியை வேண்டுகிறான்.

III. இரண்டாங் களம்.

கொத்தளக் காவல்விஷயமாக ஒதெல்லோ காலையில் வெளியே போய்விடுகிறான். இது, முதலிற் காஸியோவுக்குச் சௌகரியமாகவிருக்கிறது.

III. மூன்றாங் களம்.

அரண்மனைத் தோட்டத்தில், காஸியோ தன் துயரத்தைச் சொல்லி, அவள் வாக்குதவியைப் பிரார்த்தித்து, டெஸ்டிமோனாவுடன் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில், ஒதெல்லோவைத் தந்திரமாக இயாகோ அங்கழைத்து

வருகிறான். முன்னிரவு குடிவெறியாயிருந்த வெட்கத்தினாலும், சேனாபதியின் கோபத்துக்கஞ்சியும், காஸியோ விரைவே நழுவிப் புறம்போக, அதைக்கண்டு தனக்குட் சொல்லிக்கொள்வதுபோற் சொல்லும் சில மொழிகளாலும், ஒதெல்லோ வினாக்களுக்கு வெகு தந்திரமாயளிக்கும் விடைகளாலும், இயாகோ, அவன் மனத்திற் சந்தேகம் அரும்பச் செய்துவிடுகிறான். காஸியோவுக்காக வலிந்துபேசித் தன் கணவன் மனத்தை யிணக்கியபின், அவன் தனித்திருக்க விரும்பியதால், டெஸ்டிமோனா தன் சேடியுடன் அரண்மனைக்குச் சென்றுவிடுகிறாள்.

பின்பு, தான் ஒதெல்லோவின் மனத்தில் பற்றவைத்த சந்தேகப் பொறியை, இயாகோ, தன் சாதுரிய மொழிகளால் விசிறியெழுப்பி, டெஸ்டிமோனாவின் முந்திய நடக்கைகளில் அவ்வநுமானத்தைப் பலப்படுத்தற்கேற்ற சில சங்கதிகளை யவன் செவிவழிப்பெய்து, கல்வி நோக்கா மதியிலி மறையச்செய்த தீமைபோல், அச்சமுசயத்தீ, கொழுந்துவிட்டெரிந்து மோரியன் மதியையும் மனத்தையும் புகைத்துவிடும்படி செய்கிறான். இதனிடையே, தன் கணவனைப் போசனத்துக் கழைக்கவந்த டெஸ்டிமோனா, அவனுடன் பேசிக்கொண்டிருக்கையில், அவளுக்கு அவன் கன்னிக்காதன் முத்திரையாகக் கொடுத்திருந்த ஒரு கைதுவட்டியைத் தற்செயலாய்க் கீழே நழுவவிட, அப்பொழுது அங்கிருந்த எமிலியா, அதைக் கண்டெடுத்துத், தன் கணவன் பலமுறை திருடிக்கொடுக்கும்படி வேண்டியிருந்த கைதுவட்டி அதுவென்றறிந்து, அதையவன் கையிற்கொடுக்கிறாள். காஸியோ கண்டெடுக்கும்வண்ணம் அவன்வீட்டில் அதைவிட்டுவர ஆலோசித்துக்கொண்டிருக்கையில், மனங்கலங்கி வெறிகொண்ட மோரியன் வந்து தன் மனையாளின் தீயொழுக்கத்தை நிரூபிக்கும்படி நிர்ப்பந்தஞ்செய்ய, இயாகோ, டெஸ்டிமோனாவின் கைதுவட்டியொன்றைக் காஸியோ கையில் தான் கண்டதாகவும், காஸியோ ஓரிரவு நித்திரையில் அவளுக்குந் தனக்குமுள்ள காதலைக்குறித்துப் பிதற்றியதைத் தான் செவியுற்றதாகவுங் கூறி, அவன் சந்தேகத்தைத் திடப்படுத்துகிறான். உடனே யிருவருஞ் சேர்ந்து பழிவாங்க நிச்சயித்துச் சபதஞ்செய்துகொள்ளுகிறார்கள்

காஸியோ விஷயத்தில், தன் கணவன் மனத்தைச் சிறிதிணக்கிய

III. நான்காங் களம்.

தாக நினைத்த டெஸ்டிமோனு, அதை நிறை வேற்றக்கருதிப், பின்னும் அதைப்பற்றிப் பேச த்தொடங்கினாள். இயாகோ சொன்னதையே எண்ணியெண்ணி மனம்வருந்தும் மோரியன், தான் கொடுத்த கைதுவட்டியைக் காட்டும்படி யவளைவினவ, அவள் அவ்வாறு செய்யவும் முடியாது, உண்மையையும் கூறவஞ்சி, அப்பேச்சை மழுக்கிக் காஸியோ சமாசாரத்தையே வற்புறுத்திக் கூறுநிற்க, அவன், சமுசயமுறுதியடைந்து, கோபமாய்ப் போய்விடுகிறான். தன்னுயகனிடத்திலொரு நாளுங்கண்டறியா இக்குணத்தைக் கண்டு பயமுற்று வருந்தும் டெஸ்டிமோனு, அவனைச் சாந்தஞ்செய்யும்பொருட்டு இயாகோவையே அனுப்பி, மறுபடியும் தன் தயவை நாடிவந்த காஸியோவைச் சிறிதுபொறுமை செய்யும்படி வேண்டி, ஆறுதலைசெய்கிறாள். இதற்குள் காஸியோ முன் கூறிய கைதுவட்டியைத் தன் அறையிற் கண்டெடுத்திருக்கிறான். அது டெஸ்டிமோனுவுடையதென்றாவது, அதன் விஷயமாயுண்டான மனஸ்தாபத்தைப்பற்றியாவது, அவன் அறியவேயறியான். அதிலுள்ள பூவேலைபோல் தனக்குச் செய்துகொடுக்கும்படி அதைத் தன் வைப்பாட்டி பியான்கா கையில் கொடுக்கிறான்.

இயாகோ பின்னுந் தன் சாதுரியத்தால் ஒதெல்லோவின் சமுசயத்தைக் கிளர்ந்தெழச்செய்தும்; பியான்காவைக்

IV. முதற்களம்.

குறித்துக் காஸியோவுக்கும் தனக்கும் நடக்கும் ஒரு சல்லாபத்தைப் பேசுமொழிகள் செவிக்கெட்டாத அளவு தூரமாகவும், கைச்சமிக்ஞை முகச்சமிக்ஞைகள் கண்ணுக்குத் தெரியத்தக்கதாகவுமுள்ள ஓரிடத்தில் ஒதெல்லோ ஒளித்திருந்து நோக்கும்படி செய்தும்; இதனிடையே பியான்கா வந்து அக்கைதுவட்டியைக் காஸியோகையிற் கொடுப்பதை யவன் காணும்படி செய்தும்; அவன் சமுசயத்தைப் பலமாயுறுதிப்படுத்திவிடுகிறான்; உடனே, அன்றிரவே, மோரியன் தன் மனைவியைப் படுக்கையில் மூச்சையிறுக்கிக் கொன்றுவிடுகிறதென்றும் நிச்சயிக்கப்படுகிறது. இத்தருணத்தில், ஒதெல்லோவை யூருக்குத் திரும்பும்படியும், அவன் ஸ்தானத்தில் காஸியோவை நியமித்தும், வெநிஸ் துரைத்தனத்தாரிடமிருந்து கட்டளை வருகி

றது. தன் மனத்துள்ள தாபத்தையடக்க முடியாது, மோரியன் கண்டவர் அதிசயிக்கும்படிக்கும் பழிக்கும்படிக்கும் நடந்துகொள்ளுகிறான்.

IV. இரண்டாங் களம்.

ஒதெல்லோ, தன் மனைவியின் சேடி எமிலியாவைத் தனித்து வினவுகிறான். அவள் தன் எஜமானியின் கற்பைப் புகழ்ந்து மெய்ச்சுகிறாள். பின்பு டெஸ்டிமோனாவிடத்து நேரிற் பேசுகிறான்.

அவளுக்கு இவன் கோபத்தின் காரணம் தெரியவேயில்லை; குற்றமுள்ள நெஞ்சன்றோ குறுகுறுக்கும். கடைசியில், சந்தேகம் தன் கற்பைப்பற்றியே என்றறிந்தவுடன், திடீரென்று இடிவிழுந்தாற்போல் மனஞ்சோர்ந்தழுங்குகிறாள். மறுபடியும் தன்னாதனைச் சரிப்படுத்தும் பொருட்டு இயாகோவையே வேண்டிக்கொள்ளுகிறாள். இதுநிற்க; டெஸ்டிமோனாவுக்குக் கொடுத்து அவளை வசப்படுத்துதற்கென்று திரளான பணமும் நகைகளும் தான் இயாகோவுக்குக் கொடுத்திருந்தும், தன் காரியம் சித்திபெறாததால் சந்தேகங்கொண்ட ராடரிகோ வந்து, இயாகோவைப் பழித்துக் கோபித்துப் பயமுறுத்துகிறான். இயாகோ அவனை யெளிதில் எத்தித் தன்னுடன் சேர்ந்து அன்றிரவு காஸியோவைக் கொலைசெய்ய உடன்படும்படி செய்துவிடுகிறான்.

IV. மூன்றாங் களம்

மாசற்ற மனத்தினளாகிய டெஸ்டிமோனா, தன் கொழுநன் ஆணைப்படி மிக்க மனச்சோர்வுடன் சயனித்துக்கொள்ளுகிறாள். இதன் மத்தியில், ஒதெல்லோ, சில விருந்தினரை யுடன்சென்று வழிவிட வெளியே போயிருக்கிறான்.

V. முதற்களம்.

நடுநிசியில் ராடரிகோவும் இயாகோவும் காஸியோவைக் கொலைசெய்ய அவன் வரும் வழியிற் காத்திருக்கின்றனர். ஆனால் அவர்கள் எண்ணம் சரியாகக் கைகூடவில்லை: காஸியோவுக்குக் காலிற்காயம் இயாகோவினாலேயே உண்டாகிறது; ராடரிகோ காஸியோவினாலும் இயாகோவினாலுமே மரணகாயம் அடைகிறான். அவ்வழியே சென்றுகொண்டிருந்த பிரபுக்களிருவரும், அதற்குள் வீட்டுக்குப்போய் ஒன்றுமறியாதவன்போல் திரும்பிய இயாகோவும், வந்துசேர்ந்து, வெட்டுண்டு கிடந்த ராடரிகோவையும் காஸியோவையும் தூக்கிச்செல்கின்றனர். இவ்வரவம் கேட்டுவந்த

பியான்காவை, அவளேவலினாலீதெல்லாம் நடந்திருக்கலாமென்று தான் சந்தேகிப்பதாக இயாகோ பயமுறுத்திப் பழியை வேறு வழியில் திருப்பி, அங்குவந்த தன் மனைவியை இவ்விசேஷங்களைத் தெரிவிக்கும்படி அரண்மனைக்கு அனுப்புகிறான். இதன் மத்தியில், இப்பக்கம் வந்த ஒதெல்லோ, ராடரிகோவும் காஷியோவும் கூக்குரலிடுவதைச் செவியுற்று, இயாகோ உடன்படிக்கைப்படி காஷியோவைக் கொலை செய்கிறானென்றெண்ணி, அவனை மெய்ச்சிக்கொண்டு, தன் பாகத்தைச் செய்துமுடிக்க அரண்மனைக்குச் செல்கிறான்.

V. இரண்டாங் களம்.

ஒதெல்லோவந்து சேரும்பொழுது அவன் மனைவி நித்திரை செய்துகொண்டிருக்கிறாள்; அவன் முத்துதலால் அவள் விழிக்கிறாள்; இருவருக்கும் சிறிது சம்பாஷணை நடக்கின்றது; பின்பு அவன் அவளை மூச்சையிறுக்கிக்கொல்கிறான். இயாகோவால் அனுப்பப்பட்ட எமிலியாவந்து வெளியே நடந்த கொலையைப்பற்றிக் கூறுகிறாள். அத்தருணத்தில் குற்றுயிரோடிருந்த டெஸ்டிமோனா, தான் அநியாயமாய்ச் சாவதாயும், ஆனால் தன்னை வேறொருவரும் கொல்லவில்லையென்றும், தன்னாதனுக்குத் தன் காதலைக் கூறும்படிக்கும் எமிலியாவுக்குச் சொல்லிவிட்டுப் பிராணனைவிடுகிறாள். ஒதெல்லோ உண்மையை உரைக்க, எமிலியா கூக்குரலிடுகிறாள். எல்லோரும்வந்து கூடுகின்றார்கள். ராடரிகோவின் அங்கிப்பையிலிருந்தெடுக்கப்பட்ட இரண்டு நிருபங்களினாலும், கைகுட்டை விஷயமாக எமிலியா வெளிப்படுத்திய சமாசாரங்களினாலும், இயாகோவின் சர்ப்பனை வெளியாய் விடுகிறது. இதனிடையே ஒதெல்லோ இயாகோவைக் கோபத்திற் குத்துகிறான். தன் சொற் கடந்து தன் வஞ்சகத்தை வெளிப்படுத்திய எமிலியாவை இயாகோ குத்திக் கொன்றுவிடுகிறான். எல்லோரும் மோரியனைக் கைதியாக்கிக் கொண்டுபோக எத்தனிக்கையில், அவன் பேச்சு நடுவிலோர் கத்தியை உருவித் தற்கொலைசெய்துகொண்டு, தன் மனைவி பிரேதத்தின்மேல் வீழ்ந்திறக்கிறான்.

# ஒதெல்லோ
என்ற
# வெநிஸ் மோரியன

## நாடக பாத்திரங்கள்.

| பெயர். | இங்கிலீஷ். | விவரம். |
|---|---|---|
| ட்யூக். | Duke. | வெநிஸ் துரைத்தன பரிபாலன சங்கத் தலைவர். |
| ப்ரபான்ஷியோ. | Brabantio. | துரைத்தன பரிபாலன சங்கத்தார் ஒருவர். |
| வேறு துரைத்தன பரிபாலன சங்கத்தார் :— | | |
| க்ரேஷியானோ. | Gratiano. | ப்ரபான்ஷியோவின் சகோதரன். |
| ஒதெல்லோ. | Othello. | வெநிஸ் துரைத்தனத்திற் சேனாதிபத்தியம்வகித்த உயர்குல மோரியன். |
| காஷியோ. | Cassio. | ஒதெல்லோ உபசேனாபதி. |
| இயாகோ. | Iago. | ஷை துவஜதாரி. |
| ராடரிகோ. | Roderigo. | வெநிஸ் நகரத்தான் ஒருவன். |
| மண்டானோ. | Montano. | ஸைப்ரஸ் ஆட்சியில் ஒதெல்லோவுக்கு முன்னவன். |
| விதூஷகன். | | ஒதெல்லோவின் வேலைக்காரன். |
| வள்ளுவன். | | பறையறைவோன். |
| டெஸ்டிமோனா. | Desdemona. | ப்ரபான்ஷியோ மகள் ; ஒதெல்லோ மனைவி. |
| எமிலியா. | Emilia. | இயாகோ மனைவி. |
| பியான்கா. | Bianca. | காஷியோ வைப்பாட்டி. |
| உத்தியோகஸ்தர், கிரகஸ்தர், தூதர், ஏவலாளர், சங்கீத வித்வான்கள், மீகாமர், பிறர். | | |

## கதை நிகழ்விடம்.

முதல் அங்கம், வெநிஸ் நகரில்; மிகுந்தவை, ஸைப்ரஸ் தீவில் ஒரு துறைமுகப்பட்டணத்தில்.

# ஒதெல்லோ
## என்ற
# வெநிஸ் மோரியன்

## முதல் அங்கம்.

### முதற்களம்: வெநிஸ்—ஒரு வீதி.

(காலம்: நள்ளிரவு.)

[ராடரிகோவும் இயாகோவும் பிரவேசித்தல்.

**ராடரிகோ:**—அடபோ! என்னிடத்திலா இதெல்லாம்? இயாகோ, பெட்டியெனதும் சாவியுனதுமென என் பணத்தையநுபவித்து வந்தாயே; இவ்விஷயம்* உனக்குத் தெரிந்திருந்தும் நீ சும்மாவிருந்தது என் மனத்தை மிகவும் உறுத்துகின்றது.

**இயாகோ:**—கடவுள் சாக்ஷியாக,—ஆனால் நான் சொல்வதைத்தான் நீ கடைசிவரையும் கேட்கிறதில்லையே; சங்கதி இவ்விதமென்று நான் சொப்பனமாவது கண்டிருந்தால், நீயென்னை முற்றும் வெறு.

**ராட:**—அவன்† மேலுனக்குப் பகையென்று சொன்னையே நீ.

**இயா:**—நான் அவனைப் பகைக்காவிட்டால் என்னை நிந்தி. இந் நகரத்துப் பிரபுக்களில் மூவர் தாங்களே நேரிற் சென்று அவனைத் தாழ்மையாக வணங்கி, என்னை அவன் உபசேனாபதியாக்கவேண்டினர்:—

உண்மையாகவே, என் யோக்கியதை யெனக்குத் தெரியும்: நான் அந்த வேலைக்கு அருகனே. ஆனால், அவனோ, யுத்த தந்திர பரிபாஷைக்குரிய வசனங்களைப் பயமுறும்படி பகட்டியடுக்கிச் சுற்றிச் சுழற்றிப் போக்குச்சொல்லி, முடிவில், தன் உத்தியோகஸ்தனை நிச்சயமாய் தான் தெரிந்தெடுத்தாய்விட்டபடியால், இனிச் செய்யக்

* டெஸ்டிமோனா ஒதெல்லோவிடம் ஓடிப்போனது.

† ஒதெல்லோ.

கூடியதொன்றுமே யில்லையென்று அவர்களை அனுப்பிவிட்டான். ஆகட்டும், அவன் எப்படிப்பட்டவன்? மெய்யாகவே, ஒரு பெரிய கணக்கன்: 'மிக்கேல் காஷியோ' என்ற பிளாரன்ஸ்நகரத்தானொருவன்: ரூபவதியான ஒரு பெண்* நிமித்தமாக நரகத்தை நெருங்கிக்கொண்டிருக்கும் ஒரு பயல்: அவன் யுத்த களத்தில் தளம் வகுத்ததுமில்லை; போரணி வகுப்பில், கொட்டை நூற்குங் குமரியினும் அதிகமாய்த் தெரிந்தவனுமில்லை: டோகா† தரித்த மந்திரக்கிழவரும் அவனைப்போல் சாமர்த்தியமாய்ப் பிரஸ்தாபிக்கக்கூடிய எட்டுப்படிப்புத் தவிர வேறொன்றுமில்லை; அவன் யுத்த தந்திரமெல்லாம் அநுபவமில்லாத வீண் பிதற்றலே. அவனுக்கு நியமனமாய்விட்டது. யானோ, ரோட்ஸிலும், சைப்ரஸிலும் கிறிஸ்தவ மதமும் இதர மதங்களும் பரவப்பெற்ற பிறவிடங்களிலும், என் யுத்த சாமர்த்தியத்தின் பலனை யவன்‡ கண்ணாரக்கண்டிருந்தும், இந்த வரவு செலவு கணக்காளி§ க்கு வழி விட்டுவிட்டுச் சும்மாவிருக்கவேண்டியதாயிற்று. இந்த முழக்கோல்§ நல்லசமயத்தில், அவனுடைய உபசேனபதியாக வேண்டுமாம்; யானோ, தேவகிருபையினால், அவர் மோரியகனத்துக்குத் துவஜதாரி|| யாக விருக்கவேண்டுமாம்.

ராட:—தேவனானை, இப்படியிருப்பதினும் நானானால், அவனைத் தூக்கிற் போடுபவனாகவேனும் இருக்க விரும்பியிருப்பேன்.

இயா:—எல்லாம் வேறு போக்கில்லாமல்தான்; இது சேவகத்தின் சாபம்: முதலவன் வேலைக்கு இரண்டாமவன் என்று முன்போற் படிப்படியாக வில்லாது, 'சிபார்சு' கடிதங்களையும் அபிமானத்தையும் பொறுத்து மேல்வேலை கொடுக்கப்படுகின்றது. ஆகவே, அந்த மோரியன்மேல் நான் பக்ஷமாயிருக்க ஏதாவது நியாயமிருக்கிறதாவென்று நீயே ஆலோசித்துப் பாரப்பா.

---

* காஷியோ பியான்காவை வைப்பாட்டியாகக் கொண்டிருத்தலைக் குறிக்கின்றது.

† ஒருவித மேலுடை; ரோம குடியாட்சியங்கத்தினர் தரித்து வந்தது. துரைத்தன பரிபாலன சபையார் தரிக்கும் உடையாதலின், சமாதானத்துக்கும் யுத்தமுறை யறியாமைக்கும் குறிப்பாகக் கூறப்பட்டது.

‡ ஒதெல்லோ. § காஷியோ. || போரில் விருதுக்கொடி பிடிப்பவ

ராட :—நானுனல் அவனிடம் வேலைபார்க்கமாட்டேன்.

இயா :—சற்றுப் பொறு, அப்பா, பொறு ; நான் அவனை விடா திருப்பதெல்லாம் சமயம் பார்த்து என் சேஷ்டையைக் காட்டும்பொருட்டே : நாம் எல்லாரும் எஜமானரா யிருத்தலும் முடியாது, எல்லா எஜமானரிடத்திலும் உண்மையுடன் சேவிப்பதும் முடியாது ; தம் எஜமானரின் சுமைக் கழுதைகளைப்போல, கேவலம் ஜீவனத்துக்காகமாத்திரமே தம் இழிவான அடிமைத்தனத்தை மிகவும் அபிமானித்துத் தம் காலத்தைத் தொலைக்கும் முட்டுப்பணியும் மூட ஊழியக்காரர் அநேகரை நீ பார்ப்பாய் ; இவர்கள் வயதானவுடன் வேலையினின்றும் தள்ளப்படுகிறார்கள் : இப்போர்க்கொத்த வெள்ளைத்தன வேலைக்காரரைச் சாட்டையடியடித்தாலும் தகும். வேலைக் கடமையின் தோற்றங்களிலும் பாவனைகளிலும் தேர்ந்தவர்களாய்த், தங்கள் சுவாதீனமையிலேயே கருத்தாகவிருந்து, எஜமானருக்குத் தொண்டுபுரிவதுபோல் நடித்துக்காட்டி, அவர்கள் மூலமாய் நன்றாய்ச் செழித்துத் தங்கள் வாய்க்கால்களைப் பெருக்கிக்கொண்டுவிட்டபின், சுவாதிகாரிகளாகிவிடும் வேறு சில வேலைக்காரரும் உண்டு ; இந்தப் பயல்கள்தான் சிறிது நெஞ்சுத் துணிவுள்ளவர்கள். நானும் இப்படிப்பட்டவனே. ஏனெனின், கேள், நீ ராடரிகோ வென்பதுண்மையாயின், நான் அந்த மோரியனாயிருந்தால், இயாகோவா யிருக்கமாட்டேன்* என்பது திண்ணம். அவனைப் பின்பற்றுவதில் என் சுயநயத்தைத்தான் பின்பற்றுகிறேன். அன்புக்கும் கடமைக்குமன்றி, அப்படிப்போல நடித்து, என் சொந்தக் காரியத்தின்பொருட்டே நான் அவனைப் பின்பற்றுகிறேனென்பதற்குக் கடவுளே சாக்ஷி : என் இருதயத்தின் சுபாவ வடிவையும் அந்தரங்கவெண்ணங்களையும் என் வெளிப்படையான நடபடிக்கைகளும் மரியாதையான ஒழுக்கமும் உள்ளபடி வெளியிட்டால், அதன் பின் அதிசீக்கிரத்தில், காக்கை கொத்தும்படி யென் இருதயத்தைப் பெயர்த்துக் கைமேல் வைத்துக்கொள்ளவும் செய்வேன் :† நான் காணப்படுகிறபடி உண்மையிலில்லை.

---

* இப்பொழுதொழுகுவதுபோல் ஒழுகமாட்டேனென்பது கருத்து.

† பின் கூறியவிதமாய் நடக்கமாட்டேனென்பது எவ்வளவு உறுதியோ அவ்வளவு முன் கூறியபடியும் உள்ளும் புறமும் ஒக்க நடக்கமாட்டேனென்பது மெய்யே.

**ராட**:—இவ்வாறு* அவன்† சங்கதியை முடித்துக்கொண்டால், அந்தத் தடித்த உதடுகள்‡ என்ன நிறை செல்வத்தை யடைகின்றன !

**இயா** :—அவள் தகப்பனைக் கூவியெழுப்பி : அவனைப்§ பின்றொடர்ந்து அவன் களிப்பில் நஞ்சிடு, தெருத்தெருவாய் அவனைத் தூற்று ; அவன் உறவினரைக் கோபமூட்டித் தேன்குடிப்பவன் சுகத்தை ஈக்கள் கெடுப்பதுபோல் அவன் சுகாநுபவத்துக்கு இடையூறுகள் உண்டாக்கு ; அவன் சந்தோஷம் சந்தோஷமாகவேயிருப்பினும், உன்னாலான உபத்திரவங்களைச் செய்து அதை நிறங்குன்றச்செய்.

**ராட**:—இதுதான் அவள் தகப்பன் வீடு ; நான் உரத்துக் கூவுவேன்.

**இயா** :—செய் ; ஜநசஞ்சாரமான நகரங்களில் அஜாக்கிரதையினால் இராக்காலத்தில் நெருப்புப் பற்றியதைக் கண்டு நடுக்குற்ற பயங்கரமான தொனியோடு கூக்குரலிடுவதுபோல் கூவு.

**ராட**:—என்ன, ஓ ப்ரபான்ஷியோ ! ப்ரபான்ஷியோ பிரபுவே ! ஓ !

**இயா** :—விழித்துக்கொள்ளும் ! என்ன, ஓ ப்ரபான்ஷியோ ! திருடர்கள் ! திருடர்கள் ! திருடர்கள் ! உம் வீட்டையும் மகளையும் பணப்பைகளையும் பார்த்துக்கொள்ளும் ! திருடர்கள் ! திருடர்கள் !

[மேன்மாடத்தில் ஒரு பலகணியின்கண் ப்ரபான்ஷியோ
தோன்றுகிறார்.]

**ப்ரபா** :—இந்தப் பயங்கரமான கூப்பாட்டுக்கு என்ன காரணம் ? அங்கென்ன விசேஷம் ?

**ராட** :—ப்ரபோ ! தங்கள் குடும்பத்தார் எல்லாரும் உள்ளேயிருக்கிறார்களா ?

**இயா** :—கதவுகள் பூட்டப்பட்டிருக்கின்றனவோ ?

**ப்ரபா** :—ஏன், எதற்காகக் கேட்கின்றீர்கள் ?

* டெஸ்டிமோனாவை மணந்த சங்கதியது.

† ஒதெல்லோ.

‡ ஒதெல்லோ மோரிய சாதியன் என்பதை நிந்தித்து.

§ ஒதெல்லோவை.

**இயா** :—ஐயா, சத்தியமாகவே, நீர் கொள்ளைகொடுத்துவிட்டீர்; மானங்காக்கும்படி மேலுடையைத் தரித்துக்கொள்ளும்.* உம்முடைய நெஞ்சிடிந்துவிட்டது; பாதி ஆத்மாவைப் பறிகொடுத்துவிட்டீர்; இப்பொழுது, இப்பொழுதே, இந்த நிமிஷத்திலேயே, கிளம்பும், கிளம்பும்; குறட்டைவிட்டுறங்கும் நகரவாசிகளை மணிகுலுக்கியெழுப்பும்: கிளம்பும் என்கிறேனே!

**ப்ரபா** :—என்ன! நீங்கள் மதியிழந்தீர்களா?

**ராட** :—மகா கவுரவ ப்ரபோ! என் குரலையறிவீர்களோ?

**ப்ரபா** :—நானறியேன்; நீர் யார்?

**ராட** :—என் பெயர் ராடரிகோ.

**ப்ரபா** :—அதற்காக† உன் வரவை யதிகம் வெறுக்கின்றேன். என் வீட்டுவாயிலில் அடிக்கடி வந்து உபத்திரவம் செய்யாதேயென்று யானுனக்கு ஆஞ்ஞாபித்திருக்கின்றேன்; என் புதல்வி உனக்கன்றென்று யான் ஒளிப்பின்றி வெளிப்படையாய்க் கூறியதை நீ கேட்டிருக்கிறாய்; இங்ஙனமிருக்க, இப்பொழுது, விலாப்புடைக்கத் தின்று குடித்து வெறியாகி மதிமயங்கித் தீச்சிந்தையுடன் என்னைத் தொந்தரைசெய்யத் துணிந்து வந்திருக்கின்றனை.

**ராட** :—ஐயா, ஐயா, ஐயா,—

**ப்ரபா** :—இதையுனக்குக் கசப்பாக்க என் ஆண்மைக்கும் அந்தஸ்துக்கும் வலியுண்டென்பதை, நீ திடமாய் அறிந்திருத்தல் வேண்டும்.

**ராட** :—நற்குண கனவானே, பொறுங்கள்.

**ப்ரபா** :—கொள்ளைப்பேச்சென்ன? இது வெநிஸ் நகரம்; என் இல்லம் காட்டு மடமன்றே.

**ராட** :—மகாகனம்பொருந்திய ப்ரபான்ஷியோ! கபடமில்லாமலும் மலமெலண்ணத்தோடுமே நான் தங்களிடம் வந்திருக்கிறே(ன்).

**இயா** :—ஐயா, சத்தியமாகவே, கடவுளை வழிபடச்சொல்லிப் பிசாசு போதித்தால், கூறுவது பைசாசமென்று, அவ்வாறு செய்யாத

---

* நித்திரை நடுவே திடீரென்றெழுந்து வந்ததால் அவர் சரியானபடி ஆடை தரித்திருக்கவில்லை.

† அந்தப் பெயர் உடைமைக்காக.

வர்களில் நீரொருவர்போலும். நாங்கள் உமக்குதவிசெய்ய வந்திருந்தும், நாங்கள் வம்பர்களென்று நீர் நினைப்பதால், உம்மகளையொரு பார்பரி* தேசத்துக் குதிரைக்கு† கட்டிக்கொடுக்க உடன்படுகிறீர். உம்முடைய பேரர் பேர்த்திகளும் சந்ததியாரும் பரியினமாகிக் கனைப்பது உமக்குச் சம்மதமே.

**ப்ரபா:**—எந்த ஊத்தைவாய்ப் பதரடா நீ?

**இயா:**—ஐயா, நான் உமக்கு இதைச் சொல்லவந்தவன்: உம்முடைய மகளும் மோரியனும்-

**ப்ரபா:**—நீயொரு பாதகனே.

**இயா:**—நீரோ, ஒரு—மந்திரக்கிழவர்.‡

**ப்ரபா:**—உன்னையானறிவேன், ராடரிகோ; இதற்கு நீதான் உத்தரவாதி.

**ராட:**—ஐயா, எதற்கும் உத்தரவாதஞ் செய்கிறேன். தயைசெய்து கேளுங்கள்: தங்கள் அழகிய மகள், காவலாளிகளும் கண்ணயரும் இரண்டுங்கெட்ட வேளையாகிய இந்த இராப்பொழுதிலே, சாதாரணக் கூலியாளாகிய ஒரு தோணிக்காரனே துணையாக,§ காமவெறி கொண்ட ஒரு மோரியனுடைய முரட்டு ஆலிங்கனத்துக்குக் கொண்டுபோகப்பட்டிருப்பது தங்களுக்குத் தெரிந்திருந்தால், தாங்கள் அதற்குச் சந்தோஷமாயும் மனப்பூர்வமாயும் உடன்பட்டிருப்பதாக எங்களுக்குச் சிறிது வெளியாகிறபடி (உண்மையாகவே) உடன்பட்டிருந்தால், நாங்கள் தங்களுக்கு அவமதிப்பான தீங்குகளைத் துணிந்து செய்தவர்களாகிறோம். தங்களுக்கு இது தெரிந்திராவிட்டாலோ, தாங்கள் எங்களைக் கோபிப்பது தவறென்றே என் புத்திக்குத் தோன்றுகிறது. எல்லா மரியாதையையும் தவிர்த்து, தங்கள் கவுரவத்துக்கிணங்காதவாறு விளையாடிப் பரிகசிப்பேனென்று எண்ணாதேயுங்கள்.

---

* ஆப்பிரிக்காகண்டத்தில் ஓர் பாகம்.

† மோரிய ஜாதியானாகிய ஒதெல்லோவை நிந்தனையாகக் குறிக்கின்றது.

‡ மந்திரக் கிழவருக்குச் சாதாரண புத்தியிராதென்றும், ஆதலால் அப்பெயரே இழிதன்மையதென்றும் இயாகோ இவ்வாறு கூறுகிறான்.

§ வெநிஸ்நகரம் நீரிற் கட்டப்பட்டது; வீதிகள் கால்வாய்களாயிருப்பதால் வண்டிகளுக்குப் பதிலாகத் தோணிகளே போக்குவரவுக்கு உபயோகப்படுத்தப்படுகின்றன.

தாங்கள் அநுமதி கொடுத்திராவிட்டால், தங்கள் மகள், தன் கடமை, அழகு, புத்தி, ஐசுவரியம் முதலிய எல்லாவற்றையும், இங்கும் எங்கும் நிலையின்றித் திரிந்தலையும் ஓரந்நியனிடம் ஒப்புவித்து, மிகவும் கடமை கடந்து நடந்திருக்கிறாளென்று நான் மறுபடியுஞ் சொல்லுகிறேன். உடனே தங்களைத் திருப்திசெய்துகொள்ளுங்கள்; தன் அறையிலாவது தங்கள் வீட்டிலாவது அவளிருப்பின், தங்களையிவ்விதம் ஏத்திய என்னை நியாயதண்டனைக்குட்படுத்துங்கள்.

**ப்ரபா**:—யாரங்கே! சக்கிமுக்கியைத் தட்டி வெளிச்சம் பொருத்து; எனக்கு ஒரு வர்த்தி கொடு; என் ஜனங்களைக் கூப்பிடு; இந்த விபத்து என் கனவுபோலவேயிருக்கின்றது; இதற்குள்ளேயே எனக்கதில் பலமான நம்பிக்கையுண்டாய்விட்டது. வெளிச்சம் கொண்டுவா! வெளிச்சம்!

[மேனிலையில் மறைகிறார்.]

**இயா**:—வாழி!* நான் போகவேண்டும்; இனியுன்னுடனிருந்தால் மோரியனுக்கெதிராகச் சாக்ஷி சொல்லவேண்டிவரும்; அது சரியன்று, என். வேலைக்கடுத்ததுமன்று; ஏனெனில், இதற்காகத் துரைத்தனத்தார் அவனையெவ்வளவு கண்டித்தாலும், உத்தியோகத்தைவிட்டு நீக்கத் துணியார் என்பதை நானறிவேன். இப்பொழுதே நிகழும் ஸைப்ரஸ் யுத்தங்களுக்குப் பிரபலமான காரணங்களால் அவன் கப்பலேற ஆயத்தமாயிருக்கிறான்; அவ்யுத்தத்தில் துரைத்தன காரியத்தை நடத்தி நிறைவேற்ற, அவனைப்போல் தேர்ந்த சமர்த்தன் ஒருவனுமே யவர்களிடமில்லை. இது காரணமாக, நரகவேதனையை வெறுப்பதுபோல் அவனை வெறுப்பினும், தற்கால ஜீவனார்த்தமாக, நான் பக்ஷபாவனையையும்† அடையாளத்தையும் காட்டவேண்டியிருக்கிறது; ஆனால், அது கேவலம் பார்வைக்குமட்டுமே. அவனை உறுதியாய்க் கண்டுபிடிக்கவேண்டுமானால், எழுப்பித்திரட்டிய தேடு கூட்டத்தை "அம்புக்குறி'‡க்கு அழைத்துவா; நான் அங்கேயவனுடனிருப்பேன். போய் வருகிறேன்.* (போதல்.)

---

* காணுந்தோறும், பிரியுந்தோறும் ஐரோப்பியர் கூறும் சில வழக்கச் சொற்களை சமயத்துக்கேற்ப மொழிபெயர்த்திருக்கிறோம்.

† பக்ஷமாயிருப்பதுபோல் நடித்தொழுகல்.

‡ டெஸ்டிமோனாவை ஒதெல்லோ ஒளித்துவைத்திருந்த ஓர் வீட்டின் பெயர்.

[இமே ப்ரபான்ஷியோவும், தீவர்த்திகளுடன் வேவுகாரரும் தோன்றுதல்.]

**ப்ரபா**:—இத்தீவினையிற் சந்தேகமேயில்லை: அவள் போயேவிட்டாள்; இனியென் இழிவுண்ட வாணளில் நேரக்கூடியதெல்லாம் துன்பமே.* ராடரிகோ, நீ அவளையெங்கு கண்டாய்? ஐயோ துர் அதிஷ்டப் பெண்ணே!—மோரியனோடென்று சொல்கின்றாய்? யாவரே தந்தையாயிருப்பர்!—அவள்தானென்று எங்ஙனமறிந்தனை? ஓ! அவளென்னை நினைப்பரியவண்ணம் வஞ்சிக்கின்றாள்!—உன்னிடத்தில் என்னசொன்னாள்?—இன்னும் சில தீவர்த்திகள் கொண்டுவாருங்கள்; என்னுறவினரையெல்லாம் எழுப்புமின்,—அவர்கள் விவாகமுடிந்திருக்குமென நினைக்கின்றனையா?

**ராட**:—மெய்யாகவே, விவாகமாயிற்றென்றே யெண்ணுகிறேன்.

**ப்ரபா**:—ஐயோ தெய்வமே! அவள் எங்ஙனம் வெளிப்பட்டாள்? ஐயோ இரத்தத்துரோகமே!—தந்தைகாள்! இனி உங்கள் புதல்வியார் வெளியொழுக்கத்தைக்கொண்டு, அவர்கள் மனங்களை நீங்களுணர்ந்ததாக நம்பாதீர்கள்—இளமையையும் கன்னிப் பருவத்தையும் கெடுக்க வல்ல மந்திரங்களுளவன்றோ? அப்படிப்பட்ட விஷயங்களைப்பற்றி நீ வாசித்ததில்லையா, ராடரிகோ?

**ராட**:—ஆம், ஐயா, நான் வாசித்துத்தானிருக்கிறேன்.

**ப்ரபா**:—என் சகோதரனைக் † கூப்பிடு.—ஐயோ நீயாவது அவளைக் கல்யாணஞ் செய்துகொண்டாயில்லையே!—சிலர் ஒருவழி, சிலர் வேறுவழி.—அவளையும் மோரியனையும் எங்கே கண்டுபிடிக்கலாம், உனக்குத் தெரியுமா?

**ராட**:—தாங்கள் தயைசெய்து நல்ல காவலாளிகள் சேர்த்துக்கொண்டு என்னுடன் சென்றால், அவனை நான் கண்டுபிடிக்கக்கூடுமென்றெண்ணுகிறேன்.

---

* உண்மை தெரிந்தவுடன், தம்மகளுறக்கூடிய துன்புக்கு வருந்தாது தம்பொருட்டே கிலேசமுறுகின்றனர்: இவர் தந்நயக் கருத்தினரே.

† க்ரேஷியானோ.

**ப்ரபா** :—தயைசெய்து வழிகாட்டிச் செல். ஒவ்வொரு வீட்டுக் காரரையும் கூப்பிடுவேன்; அநேகமாக எல்லா வீடுகளிலும் என்னதிகாரஞ் செல்லும்.—யாரங்கே! ஆயுதங்கள் கொண்டுவாருங்கள்! இராக்காலத்துக்குரிய உத்தியோகஸ்தர் சிலரை யெழுப்புமின்.—

நட, நல்ல ராடரிகோ:—உன் சிரமத்துக்குத்தக்கவாறு (பிரதியுபகாரம்) செய்வேன்.

[யாவரும் போதல்.]

## இரண்டாங்களம் :* வெநிஸ்—வேறொரு வீதி.

(காலம்: இரவு.)

[ஒதெல்லோவும், இயாகோவும், நீவர்த்திகளுடன் ஏவலரும் பிரவேசித்தல்.]

**இயா** :—யுத்தத்தொழிலில் நான் மனிதர்களைக் கொன்றிருந்தும், வன்மச்சிந்தையுடன் முன் சூழ்ந்து ஒரு கொலைசெய்ய மனச்சாக்ஷி சிறிதும் ஒவ்வவில்லை. சிலவேளைகளில் எனக்கு நன்மை பயக்கக்கூடிய மனக்கொடுமை, என்னிடமில்லை. ஒன்பது, பத்துத்தரம் அவரை† யிங்கு விலாவிலே குத்த நினைத்தேன்.

**ஒதேல்** :—(அப்படியொன்றும் நேரிடாது) இப்பொழுதுள்ள நிலைமையே உசிதமானது. ‡

**இயா** :—அதில்லை, அவர் தாறுமாறாக உளறினர் ■■ங்களைப்பற்றி அவமரியாதையாகவும், துடுக்காகவும் பேசினர்; இவையெல்லாம் கேட்க, எனக்குள்ள சொற்ப பயபக்தியுடன் என்னுற் பொறுப்பதரிதாய்விட்டது. இதுநிற்க; ஐயா, தங்கள் கல்யாணம் முடிந்துவிட்டதோ இல்லையோ, சற்றுத் தயைசெய்து சொல்லுங்கள்; ஏனெனில், இது நிச்சயமே: அந்தப் பிரபு மிகவும் (ஜனங்களால்) நேசிக்கப்பட்ட

---

* ராடரிகோவைவிட்டுப் பிரிந்த இயாகோ, ஒதெல்லோவிருந்தவிடம் வந்தடைந்தவுடன் நிகழ்கின்றது.

† ப்ரபான்ஷியோவை; ராடரிகோவை யென்பாருமுளர்.

‡ நம் நாடகத்தலைவன் முதல் முதல் பேசுவது இது: இதன் மூலமா அவன் மனவமைதியையும், அடக்கத்தையும் குறிப்பிக்கின்றார் கவி.

வர்; துரைத்தனத் தலைவராகிய ட்யூக்அளவு செல்வாக்குள்ளவர்; அவர் தங்களை விலக்கிவிடுவார்; அல்லது, சட்டப்படி தங்களுக்கெவ் வளவு தடையும் துன்பமும் இழைக்கக்கூடுமோ, அவ்வளவும் தம்மதி கார பலத்துக்கு எட்டியமட்டும் செய்வார்.

**ஒதேல்**:—அவர் பகைமையைச் செலுத்தட்டும். நான் துரைத் தனத்துக்குப் புரிந்துள்ள ஊழியங்கள் அவர் முறையீடுகளையெல்லாம் நாவடக்கிவிடும். தற்புகழ்ச்சி கவுரவகுணமென்றேற்படும் சமயத்தில் நான் வெளிப்படுத்துவேன்: நான் சிங்கவாசனத்திருந்தவர் வம்சத்தில் பிறந்தவனென்பதை இன்னும் யாரும் அறியார்; என் யோக்கியதை யும், இப்பொழுது நான் அடைந்திருக்கும் பெரும்பதவியுடன் சமத்து வமாக அளவளாவத்தக்கதேயன்றித் தலை வணங்கும்படி தாழ்ந்த தன்று. நான் சொல்வதைத் தெரிந்துகொள், இயாகோ: உயர்குல டெஸ்டிமோனாவின்மேல் எனக்குக் காதல்மட்டும் இல்லாவிடின், குடும் பப்பற்றில்லாத என் சர்வ சுதந்தர பிரமசாரிய நிலைமையைக் கடல ளவு ஐசுவரியம் கிடைப்பினும், நான் இவ்வாறு வரைகோலிச் சிறை யிடமாட்டேன். அஃதென்ன, நோக்கு! அதோ வருகின்ற வெளிச் சங்கள் என்ன

**இயா**:—அவர்கள்தான், எழுப்பப்பட்ட தகப்பனும் அவர் சிநே கிதர்களும்: நீங்கள் உள்ளே போவதே உத்தமம்.

**ஒதேல்**:—யானோ போவேன்? நான் (அவர்கள் கையில்) அகப் படவேவேண்டும்: என் சீலமும், தகுதியும், மாசற்ற நெஞ்சமும் நான் செய்தது குற்றமல்லவென்று நிரூபிக்கும். அவர்கள்தானா அது.

**இயா**:—ஜேநஸ்* ஆணை! அவர்களல்லவென்று எண்ணுகிறேன்.

[தீவர்த்திகளுடன் காஸியோவும் சில
உத்தியோகஸ்தரும் வருதல்.]

**தல்**:—ட்யூக்கின் வேவுகாரரும் என் உபசேனாபதியும்.—நண் பர்காள்! இவ்விரவு உங்களுக்கு நல்லதாகட்டும்! சமாசாரம் என்ன?

---

* உரோமரால் தொழப்பட்டுவந்த இருமுகத் தேவதையொன்றின் பெயர். இருமன நயவஞ்சகனாகிய இயாகோ சத்தியஞ்செய்தற்கு ஏற்ற தெய்வமே.

**காஸி**:—சேனுபதி! ட்யூக் தங்களுக்கு வந்தனமளித்து, இந்த நிமிஷமே, அதிதீவிர அவசரமாய்த் தங்களைக் காண விரும்புகிறார்.

**ஒதேல்**:—சங்கதி யென்னவென்றெண்ணுகிறாய்?

**காஸி**:—ஸைப்ரஸிலிருந்து தெரியவந்த ஏதோ விஷயம்போலும். அது சிறிது அவசரமான காரியம்; போர்க்கப்பல்களிலிருந்து ஒருவன்பின் ஒருவனுகப் பன்னிரண்டு தூதர்கள் இன்றிரவு தொடர்ந்து வந்திருக்கின்றனர்; மந்திரக் கிழவரில் அநேகர் எழுப்பப்பட்டு, இதற்கு முன்னமே ட்யூக் அரண்மனையில் சபைகூடிவிட்டது. தங்களை அவசரமாய் அழைத்திருக்கிறார்கள். தங்கள் வாசஸ்தலத்தில் அகப்படாமையால், துரைத்தனச்சங்கத்தார் தங்களைத் தேடிப்பிடிக்க, மூவரைத் தனித்தனியாக அனுப்பியிருக்கிறார்கள்.

**ஒதேல்**:—நீயே என்னை முதலிற் கண்டு பிடித்தது நலமாயிற்று; இங்கு வீட்டில் ஒரே ஒரு வார்த்தை சொல்லிவிட்டு உன்னுடன் வந்துவிடுகிறேன்.

[போகிறான்.]

**காஸி**:—துவஜதாரி! இங்கேயிவர் என்னசெய்கிறார்? *

**இயா**:—மெய்யாகவே, இன்றிரவு ஒரு பெரிய நிலக்கப்பல் பிடித்திருக்கிறார். அது சட்டப்படியவருக்குத் தங்கிவிட்டால், பின்பவருக்கு வேண்டியதொன்றுமிராது.†

**காஸி**:—நீ சொல்வது தெரியவில்லை.

**இயா**:—அவர் விவாகம் செய்துவிட்டார்.

**காஸி**:—யாரை?

[ஒதெல்லோ திரும்பி வருதல்.]

**இயா**:—யாரையா,—வாருங்கள், தலைவரே, போவோமா?

**ஒதேல்**:—இதோ வந்துவிட்டேன்.

---

* காஸியோ முழுதும் அறிந்தவனேயாயினும் தனக்குத் தெரியுமென்று இயாகோ சந்தேகியாதவண்ணமும், இயாகோவுக்குத் தெரிந்தது எவ்வளவென்றறியும்வண்ணமும், இவ்வாறு பேசி ஆழம்பார்க்கிறான்.

† ஒரு குறைவுமிராது.

**காஸி** :—தங்களைத் தேட இதோ வேறொரு கூட்டத்தார் வருகிறார்கள்.

**இயா** :—அது ப்ரபான்ஷியோ ;—சேனாபதி, என் புத்தியைச் சற்றுக் கேளுங்கள் ; அவர் கெட்டவெண்ணத்துடன் வருகிறார்.

[ப்ரபான்ஷியோவும், ராடரிகோவும், சேவர்த்திகள் ஆயுதங்களுடன் உத்தியோகஸ்தரும் வருதல்.]

**ஒதெல்** :—அதார் ! நில் அங்கே !

**ராட** :—ப்ரபோ ! அவன்தான் மோரியன்.

**ப்ரபா** :—(வெட்டிக்) கீழே விழுத்துங்கள் திருடனை !

[இருபக்கத்தாரும் வாள்களையுருவுகிறார்கள்.]

**இயா** :—ஏ ராடரிகோ ! வா அப்பா, நீயும் நானும் ஒரு கை பார்ப்போம். *

**ஒதெல்** :—பனியினால் துருப்பிடித்துவிடாமல், உங்கள் பளபளப்பான வாள்களை உறைகளிலிடுங்கள். கற்குண ப்ரபோ ! தங்கள் ஆயுதங்களாற் பார்க்கினும், தங்கள் மூப்பினால் என்னை யதிகமாக ஏவல்கொளளலாம்.

**ப்ரபா** :—அடே கெட்ட திருடா ! என் மகளை யெங்கு ஒளித்து வைத்திருக்கின்றாய் ? மகா பாபியாகிய நீ, அவளை மந்திரங்களால் மயக்கிவிட்டாய் ; அவளோ மேன்மையும் அழகும் சௌபாக்கியமும் நிறைந்த கந்நிகை ; விவாகத்துக்குச் சிறிதும் இணங்காது, எங்கள் சுவதேசத்தாரில் செல்வம் நிறைந்த எழிலிளங் குமரரையெல்லாம் வெறுத்து விலக்கியவள் ; யுத்தி புத்தி அநுபவத்துக்கிசைய எப்படி ஆலோசித்துப் பார்க்கினும், இத்தன்மையினள், மந்திரத்தைகளால் மதியழிந்து கட்டுண்டிருந்தாலொழிய, யாவரும் பரிகசிக்கும்படித் தன்

---

* தனக்கும் ராடரிகோவுக்கும் பகையென்று ஒதெல்லோ நினைந்துகொளளும் பொருட்டும், வேண்டியபொழுதெல்லாம் தனக்குப் பணங்கொடுப்பவன் ஒருவேளை தற்செயலாய்ச் சண்டையில் மடிந்துபோகாமலும், இவ்வாறு இயாகோ துவக்கத்திலேயே ராடரிகோவைத் தனியாய்ப் பிரித்து விடுகிறான்.

காவல் கடந்தோடிச்சென்று, களிப்பின்றி அச்சத்தையே தரக்கூடிய உன் கறுப்புக்கடாவிங்கனத்துக்கு ஒரு பொழுதும் உட்பட்டிருக்கவே மாட்டாள் என்பது தெரிகின்றது. நீ அவள்மேல் கெட்ட மந்திரங்களைப் பிரயோகித்து, மன நிலையைத் தளர்வுறுத்தும் மருந்திட்டிலுலோ, தாதுப் பொருள்களாலோ அவள் முதிரா இளம்பருவத்தைக் கெடுத்திருக்கின்றாய் என்பது புத்திக்குத் தெளிவாய்த் தெரியவில்லையாவென்று உலகமே ஆலோசித்து நியாயஞ் சொல்லட்டும். — எப்படிப்பார்த்தாலும் அதிற் சந்தேகமில்லை; அது புத்திக்கொத்ததாகவும், வெளிப்பொருளாகவுமே யிருக்கின்றது. ஆகையினுல், சட்டங்களால் தவிர்க்கப்பட்டனவும், ஆதாரமில்லாதனவுமான தொழில்களை அப்பியசித்து உலகைக் கெடுக்கும் ஒருவனுக, நானுன்னைக் குற்றஞ் சுமத்துகின்றேன்; இவனைப் பிடியுங்கள்; திருகியெதிர்த்தால், இவனுக்கு நேரிடக்கூடும் சேதத்தை யெண்ணுது அடக்குங்கள்

ஒதேல் :—என்னைச்சார்ந்தவர்கள், மற்றவர்கள், இருவரும் கை நீட்டாதேயுங்கள். கலகஞ்செய்வது தகுதியென்று நான் எண்ணினுல், அதற்கு ஒருவர் தூண்டுதல் எனக்கு வேண்டியிருந்திராது. தாங்கள் சார்த்திய இந்தக் குற்றத்துக்கு உத்தரவாதஞ்சொல்ல நான் எங்கு செல்லவேண்டும்?

ப்ரபா :—காலக்கிரமத்தில் இதற்கேற்ற சட்ட விசாரணை தொடங்கி உன்னைப் பிரதிவாதஞ்சொல்ல அழைக்கும்வரையும், சிறைச்சாலைக்குப் போகவேண்டும்.

ஒதேல் :—இதற்கு நான் கீழ்ப்படிந்து நடந்தாலென்ன? துரைத்தனக் காரியமாக என்னை உடனே தம்மிடம் அழைத்துவரும்படி இதோ என் பக்கத்தில் நிற்கும் வேவுகாரரையனுப்பியிருக்கும் ட்யூக் அதை யெப்படி யொப்புவார்?

முதல் உத்தியோகஸ்தன் :—மகா கண்ணியம்பொருந்திய ப்ரபோ! அது மெய்தான்; ட்யூக், துரைத்தனச் சங்கத்துடன் இருக்கிருர். தங்கள் கனத்தையும் அழைத்துவர ஆள் போயிருக்குமென்பது நிச்சயம்.

**ப்ரபா:**—எப்படி ! இரவில் இந்த வேளையில், ட்யூக், சங்கத்துட னிருக்கிறரா ! அவனைக் கொண்டுவாருங்கள் ; என் முறையீடு சாதா ரணமானதல்ல ; ட்யூக்கும் என் சோதர த்துரைத்தனத்தாரில் எவரும், இத்தீமையை அவரவர்க்கு நேர்ந்ததுபோலவே நினைப்பார்களென்பது திண்ணம் ; ஏனெனின், இம்மாதிரியான நடவடிக்கைகள் தடை யின்றி நடந்துகொண்டிருந்தால், அடிமைகளும் அஞ்ஞானிகளும் நம் துரைத்தன பரிபாலகராய்விடுவார்கள்.

[யாவரும் போதல்.]

## மூன்ருங்களம்: வெநிஸ்—ஒரு சபாமண்டபம்.

(காலம் : வைகறை.)

[ட்யூக்கும் துரைத்தனச் சங்கத்தாரும் ஒரு 'மேஜை'யைச் சுற்றி வீற்றிருத்தல்; உத்தியோ கஸ்தர் ஏவல்செய்து நிற்றல்.]

**ட்யூக்** :—இந்தச் சமாசாரங்கள் நம்புப்படி முன்பின் ஒத்திருக்க வில்லை.

**முதல் து. ச** :—அவை ஏறுமாருகவேயிருக்கின்றன. எனக்கு வந்த நிருபங்களில் நூற்றேழு மரக்கலங்களென்று எழுதியிருக்கின்றது.

**ட்யூக்** :—என் கடிதங்களில் நூற்றுநாற்பதென்றிருக்கின்றது.

**இரண்டாம் து. ச** :—என் கடிதங்களில் இருநூறென்றிருக்கின் றது. இம்மாதிரி விஷயங்கள், உத்தேசம்பற்றி யெழுதப்படுவதால், அவற்றில் அடிக்கடி வித்தியாசமிருக்கவேசெய்யும்; ஆயினும், இந்நிரு பங்கள் குறித்ததொகையில் ஒத்திராவிட்டாலும், ஒரு துருக்க நாவாய்ப் படை ஸைப்ரஸை நோக்கிச்செல்வதை, எல்லாம் உறுதிப்படுத்துகின்றன.

**ட்யூக்** :—ஆம், அது ஆலோசிக்கக்கூடியதே ; இந்த வித்தியாசம் சந்தேகத்தை விளைத்தாலும், முக்கிய விஷயத்தில் பொய்யென்று நான் பயப்படாதிருக்கவில்லை.

**மீகாமன்** :—[உட்புறத்தில்] என்ன ஓ! என்ன ஓ! என்ன ஓ!

**முதல் உத்தியோகஸ்தன்** :—கப்பல்களிலிருந்து ஒரு தூதன்

[ஒரு மீகாமன் பிரவேசித்தல்.]

**ட்யூக் :**—இப்பொழுது—சங்கதியென்ன?

**மீகாமன் :**—துருக்கர் கப்பற்படை ரோட்ஸ் தீவை நோக்கிப் போகிறது; அவ்வாறு துரைத்தனத்துக்கு, இங்கே தெரிவிக்கும்படி ஆஞ்சலோ பிரபு கட்டளையிட்டார்.

**ட்யூக் :**—இவ்விதம் மாறியிருப்பதெப்படி?

**முதல் து. ச :**—எவ்வாறு ஆலோசித்துப்பார்த்தாலும் இப்படியிருக்கமுடியாது; நாம் பொய் நோக்கங்கொள்ளும்படி செய்யப்படும் நடிப்பேயிது. துருக்கனுக்கு ஸைப்ரஸ் எவ்வளவு முக்கியமென்பதையும்; அதுவுமன்றி, அது துருக்கனுக்கு ரோட்ஸிலும் அதிக அவசியகமாயிருப்பதும் தவிர, ரோட்ஸைப்போல் பலமான காவலாற் சூழப்பட்டிராமலும், அதைப்போல் யுத்தசந்நதமாயின்றி, எளிதிற் பிடிபடும்படி யிருப்பதையும் நாம் ஆலோசிக்கின், தனக்குப் பிரதம முக்கியமானதைக் கடைசிவரையுந் தாழ்க்கவிட்டுச், செயற்கெளிதாயும் பிரயோசனப்படுவதாயுமுள்ள ஓர் முயற்சியைக் கைவிட்டுப், பிரயோசனமற்ற அபாயகரமானவோர் முயற்சியில் தலையிடும்படி, துருக்கன் அவ்வளவு யுத்தியில்லாதவனென்றெண்ண இடமில்லை.

**ட்யூக் :**—ஆம், அவன் நோக்கம் ரோட்ஸின்மேலில்லை யென்பது நிச்சயமே.

**முதல் உத்தி :**—இதோ இன்னும் சமாசாரம் வருகிறது.

[ஒரு தூதன் பிரவேசித்தல்.]

**தூதன் :**—கவுரவ ப்ரபுக்களே! கருணாநிதிகளே! துருக்கர் ரோட்ஸ்தீவை நோக்கி நேராக மரக்கலங்களையோட்டி, அங்கே மற்றொரு கப்பற்படையுடன் சேர்ந்துகொண்டார்கள்.

**முதல் து. ச :**—ஆம், அப்படியே நினைத்தேன்.—உன் மதிப்பில் எத்தனை கப்பல்களிருக்கும்?

**தூதன் :**—முப்பது பாய் கொண்டது; இப்பொழுது மறுபடியும் ஒளிப்பின்றி ஸைப்ரஸை நோக்கித்திரும்புகிறார்கள். உண்மையிலும் ஊக்கத்திலுஞ் சிறந்த தங்கள் காரியஸ்தராகிய மண்டானோ பிரபு

தம் வந்தனங்களை யளித்துத் தங்களுக்கு இதைத் தெரிவிக்கச்சொன்னார். தாங்கள் இதை நம்பும்படி பிரார்த்திக்கிறார்.

**ட்யூக்** :—ஆகவே, ஸைப்ரஸுக்கே என்பது நிச்சயம். மார்க்கஸ் லூக்கிக்காஸ்* ஊரிலில்லையா ?

**முதல் து. ச** :—அவனிப்பொழுது பிளாரன்ஸ் நகரத்திலிருக்கிறான்.

**ட்யூக்** :—உடனே வரச்சொல்லி அதிதீவிரமாய் நமது கட்டளை அனுப்புங்கள்.

**முதல் து. ச** :—இதோ ப்ரபான்ஷியோவும் மோரியவீரரும் வருகிறார்கள்.

[ப்ரபான்ஷியோ, ஒதெல்லோ, இயாகோ, ராடரிகோ
உத்தியோகஸ்தர், இவர்கள் பிரவேசித்தல்.]

**ட்யூக்** :—ஒதெல்லோ வீரரே ! பொதுவிரோதியாகிய துருக்கனையெதிர்க்க,† உம்மை யுடனே நியமிக்கவேண்டியிருக்கின்றது.

[ப்ரபான்ஷியோவை நோக்கி.]

நான் உங்களைப்பார்க்கவில்லை ; கவுரவப்ரபோ ! உங்கள் வரவு நல்லதாகுக ; இன்றிரவு உங்கள் ஆலோசனையும் உதவியும் இல்லாமை ஒரு குறைவாகவே யிருந்தது.

**ப்ரபா** :—நானும் அப்படியே தாங்களில்லாத குறையை யுணர்ந்தேன். மஹாப்ரபோ ! பொறுத்தருளுங்கள் ; என் உத்தியோகமன்று, துரைத்தனக் காரியங்களைச் செவியுற்றதுமன்று, நான் படுக்கைவிட்டெழுந்ததற்குக் காரணம் ; இப்பொழுதுள்ள பொதுக்கவலை

* ஸைபரஸ் தீவைச் சார்ந்த விவரங்களை அநுபவ ஞானத்தால் நன்கறிந்துள்ள ஓர் படைவீரன்போலும் ; அவனோடளவளாவிச் சில விஷயங்களையறியும்பொருட்டு, ட்யூக் அவனுளனோ என்று வினவுகிறார்.

† வெனிஸ் நகரக் குடியாட்சித் துரைத்தனத்தார், சுவதேசிகளை முக்கிய தளகர்த்தராக நியமிக்கின், ஒரு வேளை குடியாட்சியை யெதிர்த்தடக்கித் தாமே அரசராக முடிசூட்டிக்கொள்வாரென்றஞ்சி, அந்நாட்டில் விசேஷச் செல்வாக்கில்லாத அந்நியரையே யத்தகைய பெருந்தானத்தில் வைத்துத் தம் குடியாட்சியை யோம்பிவந்தனர்

யன்மனதிற் பற்றவுமில்லை; ஏனெனின், என் சொந்த வியாகுலம் தன் அளப்பரிய பெருமையாலும், அடங்காத உக்கிரத்தாலும், மற்றக் கவலைகளையெல்லாம் மேலிட்டு விழுங்கிவிட்டுத் தானே யென் மனத்தில் நிறைந்திருக்கின்றது.

**ட்யூக்** :—ஏன், என்ன விசேஷம்?

**ப்ரபா** :—என் மகள்! ஐயோ என் மகள்

**ட்யூக்கும் து. ச** :—இறந்தனளா?

**ப்ரபா** :—ஆம், என்மட்டில் இறந்தேவிட்டாள்; சூநியக்காரரிடம் பெறப்பட்ட மந்திரங்களினாலும் மருந்துகளினாலும் அவள் கெடுக்கப்பட்டு, என்னிடத்தினின்றும் திருடப்பட்டுக் கற்பழிவுண்டிருக்கிறாள். குருடு, பொறியூனம் முதலிய குறைவுகளொன்றுமில்லாதிருக்க, சூநிய மந்திரவாதமின்றி, ஒருபொழுதும் இயற்கை நிலையிவ்வளவு விபரீதமாகத் தவறியிருக்க முடியாது.

**ட்யூக்** :—இவ்வாறு துன்மார்க்கத்தில் உங்கள் மகளை மதிமயக்கிப் புகுத்தி, உங்கள் காவலினின்றும் கடத்தியவன் எவனேயாயினும், நீங்கள் சார்த்துங் குற்றத்துக்குட்பட்டவன் நம்முரிமை மகனேயாயினும், ஆகுக; அவனுக்கு உங்கள் அபிப்பிராயப்படி நீங்களே சட்டப் புத்தகங்களில் ஏற்பட்ட கொடூர தண்டனையை விதிக்கலாம்.

**ப்ரபா** :—தங்கள் கனத்துக்கு வணங்கி வந்தனமளிக்கிறேன். இந்த மனிதன்தான், இந்த மோரியனே; துரைத்தன விஷயமாகத் தங்கள் அவசரக் கட்டளையால் இப்பொழுது இங்குவந்திருக்கும் இவனே.

**ட்யூக்கும் து. ச** :—நாங்கள் இதற்கு மிகவும் மனம்வருந்துகின்றோம்.

**ட்யூக்**—[ஒதெல்லோவை நோக்கி] உம்முடைய பக்கத்தில் நீரிதற்கு என்னசொல்லக்கூடும்?

**ப்ரபா** :—இது உண்மையே என்பதைத் தவிர வேறில்லை.

**ஒதேல்** :—சர்வாதிகாரமும், ஆழ்ந்த சிந்தையும், கவுரவமும் பொருந்திய கனவான்களே! அதிகாம்பீரிய குணமும் சீலமும் வாய்ந்த என் அருமை இறைவர்களே! இந்தக் கிழவர் மகளை நான் கொண்டுபோய் விட்டது முற்றிலும் உண்மையே; நான் அவளை விவாகஞ்செய்து

கொண்டதும் உண்மையே. என் குற்றத்தின் தலைப்பெல்லாம் இவ்வளவே; மேலில்லை; என் பேச்சோ முரட்டுத்தன்மையது; வாக்கு நயமும் சாதுரியமுமாகிய பாக்கியத்தை நான் பெற்றவனில்லை. ஏனெனில், என் புயங்கள் ஏழாண்டுச் சதைப்பற்றுக்கொண்டது*முதல், இப்பொழுது வீணாகக் கழிந்த ஒன்பது மாசங்களுக்கு முன்வரையும்— இப்புயங்கள்-விழைந்துசெய்த முக்கியப் பிரவர்த்தியெல்லாம் கூடாரங்களடித்த போர்க்களத்திலேயே நிகழ்ந்தன. ஆகவே, சண்டை சச்சரவுகளைச்சார்ந்த வீரச் செய்கைகளைத்தவிர, இப்பேருலக விஷயங்களைப்பற்றி நான் அதிகமாகப் பேசவும் முடியாது; என் விஷயத்தையிப்பொழுது நானே எடுத்துப் பேசுவதில் என் கக்ஷிக்கு அதிக அநுகூலமுமிராது. ஆயினும், என் காதலின் விருத்தாந்தமுழுவதையும் உள்ளபடி சிறிதும் மழுக்காது கூறி, என்மேற் குற்றஞ்சுமத்தப்பட்டபடி, என்ன மருந்தீடுகள், என்ன வசிய பந்தனங்கள், என்ன மஹாமந்திர சக்திகளைக்கொண்டு அவர் மகளது காதலைப்பெற்றேனென்பதையும் வெளியிடுகிறேன்; தாங்கள் தயைகூர்ந்து பொறுமையோடு கேட்கும்படி பிரார்த்திக்கிறேன்.

ப்ரபா:—கந்நிகையோ ஒரு காலத்திலும் துணிவுள்ளவளல்ல. தன்னைக்கண்டே நாணுறுமளவு அச்சமும் அமைதியும் மடமும் பொருந்தியவள்; அப்படிப்பட்டவள், வயது, ஜநந பூமி, அந்தஸ்து, ஒன்றுமே பொருத்தமில்லாதிருக்க, தான் கண்ணெடுத்துப்பார்க்கவுமே அஞ்சிய † ஒன்றின்மேல் இயற்கை விரோதமாகக் காதலாக வேண்டுமானால்!—எல்லா நற்குணமும் நிறைந்துள்ளவள், சகல இயற்கைப்பிரமாணங்களுக்கும் மாறுபாடாக இவ்வாறு தவறியொழுகக் கூடுமென்று ஒப்புக்கொள்ளும் மதியூகம் ஊனமுள்ளதாகவும், மிகக் குறைபாடுள்ளதாகவுமே யிருத்தல்வேண்டும்; மகா தந்திரமுள்ள தூர்க்கிருத்தியங்களே இப்படி நேர்ந்ததற்குக் காரணம்; வேறு காரணங் கூறமுடியாது. ஆதலின், இரத்தத்தின் சுபாவத்தை மாற்றவல்ல மருந்துச்சேர்க்கை

* எனக்கேழுவயதானதுமுதல்.

† தன் காதலை ஐயுறுவண்ணம் இவ்வாறு ஒதெல்லோவைக்காணவும அஞ்சுபவள்போல் நடித்து, டெஸ்டிமோனு தன் தந்தையை வஞ்சித்தாளென்பதையும், அதற்கு மோரியனும் உடந்தையாயிருந்தானென்பதையும் அறிகிறோம்.

களினாலேனும், இவ்விளைவுண்டாகும்படி மந்திரிக்கப்பட்ட ஔஷதங்களினாலேனும், அவன் அவள் மனத்தைத் திருப்பியிருக்கிறானென்று நான் மறுபடியும் உறுதியாகச்சொல்லுகிறேன்.

ட்யூக்:—வற்புறுத்திக் கூறப்படும் வெறுமொழி ருஜுவாகாதே; அங்ஙனமிருக்கலாம் இங்ஙனமிருக்கலாமென்று சாதாரணமாய் அவருக்கு விரோதமாக யூகித்துக்கூறுவதைத் தவிர, வேறு ஒப்பக்கூடிய தக்க முகாந்திரங்கள் வேண்டுமே.

முதல் து.ச:—அதிருக்கட்டும்; ஒதெல்லோ, நீர் சொல்லும்; இவ்விளங் கந்நிகையின் மனத்தை நேரல்லாத வலாற்காரமான வழிகளால் வசப்படுத்திக்கெடுத்து, அவள் காதலை நீர் கொண்டீரா? அன்றேல், மனத்தோடு மனமிசைந்து நீர் வேண்டிக்கொண்டதின்மேல், அவள் இணங்கினளா?

ஒதேல்:—"அம்புக்குறி"க்கு ஆளனுப்பி யந்தச் சீமாட்டியையிங்கு வரவழைக்க வேண்டுகிறேன்; அவள் தந்தை முன்னிலையில் என்னைப்பற்றி யவளே பேசட்டும்; அவள் வாக்குமூலத்தினால் என்மேற் குற்றமிருப்பதாக விளங்கினால், என்னிடம் வைத்திருக்கும் நம்பிக்கையைத் துறந்து, என்னை வேலையினின்று நீக்குவதேயன்றி எனக்கு மரணதண்டனையும் விதிக்கலாம்.

ட்யூக்:—டெஸ்டிமோனாவை யிங்கழைத்துவா.

ஒதேல்:—துவஜதாரி, அவர்களைக் கூட்டிக்கொண்டுபோ; அவ்விடம் உனக்கே நன்றாய்த்தெரியும்.

[இயாகோவும் வேவுகாரரும் போதல்.]

அவள் வரும்வரையும், என் பாவங்களைக் கடவுள் முன்பு உண்மையாக ஒத்துக்கொள்வதுபோலவே, * இந்த அழகிய சீமாட்டியின் காதலை யானும், என் காதலை அவளும் எவ்வாறு அடைந்தோமென்பதை உள்ளபடி தங்கள் செவியுறக் கூறுகிறேன்.

*கிறிஸ்தவமதத்தில் ரோமன் காதோலிக் வகுப்பினர், குறித்த காலங்களில் குருமுகமாகவும், கடவுள் சான்றாகவும் தங்கள் பாவங்களை வெளியிட்டு வருந்தியும், பிராயச்சித்தங்களைச் செய்தும் விமோசநம் பெற வேண்டுவது வழக்கம்.

**ட்யூக் :**—சொல்லும் ஒதெல்லோ.

**ஒதேல் :**—அவள் தந்தையென்மேற் பக்ஷமாயிருந்தார்; அடிக்கடியென்னைத் தம் வீட்டுக்கழைத்தார்; ஆண்டாண்டாக என் வாழுளின் விருத்தாந்தத்தையும், நான் சம்பந்தப்பட்ட சண்டைகள் முற்றுகைகள் ஆபத்து சம்பத்துகளையும் சொல்லச்சொல்லிக் கேட்டார். பிள்ளைப்பருவம் தொடங்கி, அவர் வினவிய நிமிஷம்வரையும் நான் அதை விவரமாய்ச் சொன்னேன். அதில், பெருங்கேடான சம்பவங்களையும், நீரிலும் நிலத்திலும் நிகழ்ந்த பரிதாபமான விபத்துக்களையும், முற்றுகைசெய்த கோட்டை மதில்களில், உடனே பிராணஹானி நேரக்கூடிய துவாரங்களினூடு நுழைவதில் மயிரளவு தப்பி உயிர் பிழைத்தவைகளையும், இறுமாப்புற்ற எதிரிகள் என்னைச் சிறைப்படுத்தி அடிமையாக விற்றதையும், அடிமையினின்று மீண்டதையும், பின்பு செய்த பிரயாணத்தில் நடந்துகொண்டவிதத்தையும், அப்பிரயாணத்தில் கடந்த பெருங் குகைகளையும், பாழான பாலைவனங்களையும், கரடுமுரடான கற்சுரங்கங்களையும் பாறைகளையும், விண்ணுலகைத்தொடும் சிகரங்களையுடைய குன்றுகளையும், ஒருவரையொருவர் தின்னும் நர பக்ஷிணிகளையும், தோள்களுக்குக் கீழாகத் தலைவளரும் மனிதரையும்* பற்றிப் பேச நேர்ந்தது. இதைக் கேட்க டெஸ்டிமோனு வெகு பரபரப்புடன் விரும்புவாள்; ஆனால் வீட்டுவேலையினிமித்தம் நான் கதைசொல்லும் இடம்விட்டு அவள் அடிக்கடிப்போக நேரிடும்; அதைக் கூடிய சீக்கிரத்தில் முடித்துவிட்டுத் திரும்பிவந்து, என் வார்த்தைகளைப் பருகுவதுபோல் பேரவாவுடன் செவிக்கொள்வாள் :—இதை நான் கண்டு, ஒரு தக்க சமயம் பார்த்துக்கொண்டேன் : முழுதும் கவனமாகவின்றி, இங்கே சிறிது அங்கே சிறிதாகமட்டுமே தான் கேட்டிருந்த என் பிரயாண விருத்தாந்த முழுவதையும் தனக்கு விவரமாய்க் கூறவேண்டுமென்று மிக்க விருப்புடன் அவளேயென்னைப் பிரார்த்திக்கும்படிச் செய்தேன்; அவள் வேண்டுகோளுக்கிசைந்தேன். என் இளமையிலே நான் அநுபவித்த சில துக்ககரமான விபத்துக்களைக் கேட்க

---

* பேதைமன டெஸ்டிமோனுவுக்கு அளப்பரிய ஆச்சரியத்தையும் தன்மேல் பரிதாபத்தையும் உண்டாக்குமாறு, ஒதெல்லோ, தான் கண்ணுற் கண்டவற்றைமாத்திரமின்றி சில கட்டுக்கதை விஷயங்களையும் சேர்த்துப் 'புளுகி' யிருக்கிறுனென்பது துலங்குகிறது.

அவளுக்கு அடிக்கடி தானறியாமலே கண்ணீர்பெருகிற்று. என் கதை முடியவே, அவள் என் கஷ்டங்களுக்காக அளப்பரிய பெருமூச் செறிந்தாள்; 'உண்மையாகவே, இது ஆச்சரியமானதே, மிக ஆச் சரியமானதே; இது பரிதாபமானதே, மிகவும் பரிதாபமானதே; இதைக் கேளாதிருந்தேனில்லையே; ஆயினும், எனக்குக் கடவுள் இப்படி யொரு புருஷனை யளிக்க விரும்புகிறேன்' என்று வற்புறுத் திச் சொன்னாள்; எனக்கு வந்தனமளித்தாள்; என் சிநேகிதன் எவனு வது அவள்மேற் காதல் கொண்டிருந்தால், என் கதையைச் சொ ல்ல அவனுக்கு நான் கற்றுக்கொடுத்துவிடமட்டும் வேண்டுமென் றும், அதைக் கேட்டவுடன் தன் மனம் அவன் வயமாகிவிடுமென்றும் சொன்னாள். இந்தக் குறிப்பையுணர்ந்துகொண்டு, நான் என் காதலை வெளியிட்டேன். எனக்கு நேர்ந்த அபாயங்களின்பொருட்டு அவள் என்மேல் காதல் கொண்டாள்; அவைகளின்பொருட்டு அவள் பட்ட பரிதாபத்துக்காக, நான் அவள்மேல் காதலானேன். நான் பிரயோ கித்த வசிய மந்திரமெல்லாம் இதுதான்; இதோ அந்தச் சீமாட்டி வருகிறாள்; அவளே சாக்ஷி சொல்லட்டும்.

[டெஸ்டிமோனாவும், இயாகோவும், வேவுகாரரும் பிரவேசித்தல்.]

**ட்யூக்**:—இந்தக் கதை என் மகள் மனத்தையும் கவர்ந்துவிடு மென்றே நினைக்கிறேன்:—நற்குண ப்ரபான்ஷியோ, போனது போ கட்டும்; நடந்துவிட்டதில் நல்லதையே கொள்ளும; முறிந்த கைகளி லும் முறிந்த ஆயுதங்களையுடைய கை சிலாக்கியமென்றே உலகம் மதிக்கும்.

**ப்ரபா**:—தயைசெய்து அவள் என்ன சொல்கிறாள் கேளுங் கள். இந்தக் காதல் விஷயத்தில் தானே பாதி பிரவர்த்தித்ததாக அவள் ஒப்புக்கொண்டு, அதன்பின் அந்த மனிதன்மேல் நான் குறைகூறி னால் என் தலையில் இடி விழட்டும்! அம்மா சீமாட்டி, இங்கே வா; இந்தப் பிரபுக்கள் சங்கத்தில் நீ யாருக்கு அதிகமாகக் கீழ்ப்படிந்து நடக்கக் கடமைப்பட்டிருக்கிறாயென்பது தெரிகிறதா?

**டெஸ்டி**:—கண்ணியமுள்ள தந்தையே, இங்கு என் கடமை (ஒரே தலையாகவின்றி) பிரிந்து காணுகிறது. என் உயிருக்கும் வித்தி

யாப்பியாசத்துக்கும் நான் உமக்குக் கடமைப்பட்டவள்; என் உயிர் வாழ்க்கையும் கல்விப்பயிற்சியும் உமக்கு மரியாதை செய்யும் முறையை எனக்குக் கற்பிக்கின்றன; நீர் என் கடமைக்குரியவர்; இதுகாறும் நான் உம்முடைய மகளே: ஆனால் என் மணவாளர் இதோ இருக்கிறார்; தம் தந்தையிலும் உம்மையே அதிகமாகக்கொண்டு என் தாயார் உமக்கு எவ்வளவு உரிமை பாராட்டினரோ, அவ்வளவு உரிமை யானும் என்னுதராகிய இந்த மோரியருக்குச் செலுத்தலாமென்றெண்ணுகிறேன்.*

**ப்ரபா**:—உன்னைத் தெய்வமே காக்க! என் வேலை முடிந்துவிட்டது;—ப்ரபோ, தயைகூர்ந்து துரைத்தன வேலைகளிற் பிரவேசியுங்கள்; ஒரு குழந்தையைப்பெற்றெடுப்பதினும் சுவீகாரஞ்செய்து கொள்வதே நலமென்று தோன்றுகிறது—ஏ மோரிய, இங்குவா: என் இஷ்டப்படியெனின், ஒருபொழுதும் என் மனதார உனக்கிவளைக் கொடுக்கமாட்டேன்; ஆனால், முன்னமே உன் கைவசமாய்விட்டபடியால், என் மனப்பூரணமாக உனக்கிவளை இதோ கொடுக்கிறேன். பெண்மணியே, உன் நடபடிக்கையைக் கண்டபின், எனக்கு வேறு குழந்தைகளில்லாமையைக் குறித்து ஆத்மபூர்வமாய்ச் சந்தோஷப்படுகின்றேன்; ஏனெனின், உன் துள்ளல் சேஷ்டையால், அவர்களைக் கொடூரமாய் நடத்திக் கழுத்தில் கட்டைகட்டிவைக்க† விரும்பியிருப்பேன். ப்ரபோ! நான் சொல்லவேண்டியதெல்லாம் சொல்லியாயிற்று.

**டியூக்**:—நானும் உங்களைப்போற் பேசி, இந்தக் காதலர்கள் உங்கள் நல்லபிப்பிராயத்தை அடையும்படிசெய்ய முயலுகிறேன்:

* டெஸ்டிமோனு தன் தாயைக் குழவிப்பருவத்திலேயே இழந்தவளாகத்தோன்றுகிறது: ஆகவே, அவள் தந்தையே அவளுக்குத் தாயுந் தகப்பனுமாகவிருந்து, தம் ஒரே மகளைச் செல்வமாக வளர்த்துவந்தார். அத்தகைய தந்தையைத் தான் இவ்வாறு நடந்து துயருறுத்துவதுமன்றி, அவர் பொருட்டுச் சிறிதும் மனவருத்தப் படுபவளாகத்தோன்றவில்லை; தம் சுகமே பெரிதாகக் கருதுவார் தன்மை இது.

† மீறி நடவாவண்ணம்; துஷ்டமாடுகளுக்குக் கட்டுவதுபோல்.

(1) என்னுறுமோ என்றுழல்வார் தீர்வில் இடுக்கணுறில்
பின்னுறுவதில்லை பிற.

(2) உற்றொழிந்த தீங்குக் குளைதலே புத்திடரைப்
பற்றி யிழுக்கும் பணி.

(3) வீணுமே ஊழ்ப்பறியும் கேடும், விழுமனத்து
மாணப் பொறுமை வர.

(4) களவுண்ட வன்சிரிப்புக் கள்ளற் பறிப்பாம்
விளைவிறுயர் தற்பறிப்பா மே.

ப்ரபா :—(1) ஆயின் துருக்கன் அடைக ஸைப்ரஸ் தீவை
போயிலதாக் கொண்டுசிரிப் போம்.

(2) போதனைகள் நன்கு பொறுப்பான் அவையாற்றும்
வேதனைகள் இல்லான்காண் மின்.

(3) போதனையும் வேதனையும் ஒக்கப் பொறுத்திடுவான்
மாதுயர மேவியிடு வான்.

(4) இருமருங்கும் சார்வா யினிக்கும் கசக்கும்
ஒருமருங்கே சாரா உரை.

(5) கூற்றுக் கூற்றன்றியொரு கூற்றேனும் உட்புண்ணை
ஆற்றியதைக் கேட்டிலே மால்.

(1) மேற்பரிகாரமில்லையெனில் துன்பத்தின் கரையைக்கண்டதாகும், எங்ஙனமாகுமோவென்று எதிர்பார்த்திருந்ததில் உறற்குரிய கடுந்தீங்கே யுற்று விடுதலால். (2) சென்றுகழிந்த தீங்குக்கு வருந்துதலே, புதிய தீங்கை அழைத்தற்கேற்றவழி. (3) ஊழ்வலியால் கைவிட்டுத்தவறுவதைப் பொறுமையால் எளிதாக்கிவிடலாம். (4) களவுகொடுத்தும் மனம்நோவாது சிரிப்பவன், கள்ளனது அகச்செருக்கைக் கவர்பவனாகிறான்; பயனின்றித் துயருறுபவன் தன் மனநிறைவையே களவுசெய்கிறவனாகிறான்.

(1) இஃதுண்மையாயின், ஸைப்ரஸ்தீவைத் துருக்கர் கைக்கொள்ளட்டும்; நாம் சும்மா சிரித்திருந்து, இழவாதவராகிவிடுவோம். (2) தங்கள் சுகதுக்கங்கள் சம்பந்தப்படாதவரையில் யாரும் தத்துவம்பேசலாம், கேட்கலாம். (3) ஆனால் மெய்யாகவே துயரமுற்று, அதையும் சகித்துக்கொண்டு, தத்துவம்பேசுவாருக்கும் செவிகொடுத்துக்கொண்டிருப்பவர் பாடே கஷ்டம். (4) இத்தகைய நீதிமொழிகள் ஈரடியான பயன்பயப்பவை: இனிக்கவும் செய்வன; கசக்கவுஞ்செய்வன. (5) பேச்சுக்கள் வெறும்பேச்சே; நோவுண்ட உள்ளம் (செவிவழியாகக்கொண்ட) வெறும் போதனையால் ஆறியதென்று இதுகாறும் கேட்டதில்லை.

தயைசெய்து துரைத்தன காரியங்களிற் பிரவேசியுங்கள்.

**ட்யூக் :**—மிகப்பலமான படையெடுப்போடு துருக்கன் ஸைப ரஸைநோக்கிச் செல்கிருன் :—ஒதெல்லோ, அவ்விடத்துக் காவற் படை விவரம் உமக்கே நன்ருய்த்தெரியும் ; இப்பொழுது அங்குள்ள பிரதிநிதி அதிசமர்த்தராயினும், நற்பயன்விளைக்கும் வல்லமை மிக வாய்ந்த பொதுமதிப்புப்படி, நீரே தக்கவரென்று வெளியாகின்றது. ஆதலின், இப்பொழுது நீர் புதிதாயடைந்துள்ள அதிஷ்டப்ரகாசத் தையெல்லாம், கடினமும் கம்பலையுமே நிறைந்த இப்படையெடுப்புத் தலைமையை மேற்கொண்டு, சிறிது கறைப்படுத்திக்கொள்ளவேண்டும்.

**ஒதேல் :**—மஹாக்னம்பொருந்திய சபையீர்காள்! தீக்கல்லினு லும் எஃகினுலும் செய்த அமளிபோன்ற யுத்தப் பிரவர்த்தியானது, கடுமையான பழக்கத்தால், எனக்கு, மும்முறை கடைந்தெடுத்த மென் றூவி மெல்லணையாய்விட்டது. வன்ருெழில்களில் எனக்கு உற்சாக மும் இயல்பான குதூகலமும் உண்டாயிருப்பது மெய்யே ; இப்பொ ழுது துருக்கரை எதிர்த்து நேரும் யுத்தங்களைநடத்த நான் ஒப்புக் கொள்கிறேன். ஆதலின் தங்கள் கனத்தை வந்தித்து, என் மனையாட் டியின் தகுதிக்கும் வழக்கத்துக்கும் தக்கவண்ணம் இருப்பிடம் பரிச னமுதலியவை நியமிக்க மிகவும் தாழ்மையாய் வேண்டிக்கொள்கி றேன்.

**ட்யூக் :**—உமக்குச் சம்மதமாஞல் அவள் தன் தகப்பனூர்வீட்டிலி ருக்கட்டும்.

**ப்ரபா :**—எனக்கு அப்படிச் சம்மதமில்லை.

**ஒதேல் :**—எனக்கும் சம்மதமில்லை.

**டெஸ்டி :**—எனக்கும் அப்படியே ; கண்முன்னிருந்து என் தந் தையாருக்கு எப்பொழுதும் கோபத்தை உண்டுபண்ணிக்கொண்டு நான் அங்கு வசிக்கமாட்டேன். கருணுசாகரமாகிய ட்யூக் ப்ரபுவே! யான் சொல்லப்புகுவதற்குத் தாங்கள் நற்செவியுதவி, யான் வெள்ள றிவினளாதலின், தங்கள் வாக்குச்சகாயத்தால் என் வேண்டுகோளைப் பலப்படுத்துங்கள்.

**டயூக் :**—உன்னிஷ்டமென்ன, டெஸ்டிமோனு

டெஸ்டி :—எப்பொழுதும் அவர்கூடவே வாழத்துணியும் அளவு நான் இந்த மோரியரைக் காதலித்தேன் என்பதை, வெகு ' துடுக்காக ' ப் பிடிவாதங்கொண்டும், அதிஷ்ட சம்பத்துக்களை உதறியெறிந்து துற ந்தும் நான் அவருடன் வெளிப்பட்டது உலகத்துக்குப் பறையறை ந்து தெரிவிக்கும். என் இருதயம் என்னுதரது மனோபாவத்துக்கு ஒத் துப் படிந்துவிட்டது. அவர் மனத்தழகை நான் அவர் முகத்தழகாகக் கண்டேன்.* அவர் கௌரவநிலைக்கும் தீரகுணங்களுக்கும் என் ஆத்மா வையும் வாழ்க்கைநலன்களையும் அர்ப்பணஞ்செய்துவிட்டேன். ஆத லின், பிரிய பிரபுக்களே, விட்டிற்பூச்சிபோலச் சமாதானமாய் வாழும் படி† நான் இங்குவிடப்பட்டு, அவர்மட்டும் யுத்தத்துக்குச்சென்றால், எந்தக் கடமைகளின்பொருட்டு நான் அவரைக் காதலிக்கின்றேனோ அவற்றை நானிழந்து, அவரது அரிய பிரிவை ஆற்றமாட்டாது மிக வும் துன்புறுவேன். நான் அவருடன் செல்ல விடைகொடுங்கள்.‡

ஒதேல் :—தாங்கள் அநுமதி அளியுங்கள், பிரபுக்களே; அவள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றவேண்டுகிறேன். என் வேட்கையின்

* மற்ற மாதரைப்போல் முக அழகை மதிக்காது, அவர் மன அழகையே மதித்து அதையே அவர் வடிவழகாகக்கொண்டேன்.

† உயிர்வாழ்க்கையின் கவலை யொன்றுமேயின்றிக் கண்டபடி களித்துக் காலங்கழித்தல்.

‡ இந்தப்பேச்சு நன்கு கவனிக்கத்தக்கது: சுபாவமாகவே மடமும் அச்சமும் அமைதியும் வாய்ந்த டெஸ்டிமோனு, அவள் தந்தையால்மிகக் கண்டிப்பாய் வளர்க்கப்பட்டு, மிகவும் மேன்மையும் அச்சமும்பொருந்திய குணத்தினளாயிருந்தாள். இவ்வாறு வளர்க்கப்பட்டவர், அத்தியாவசியகம் நேர்ந்துழி, வெகு தைரியமாயும் பிடிவாதமாயும் அடங்காமற்பேசுவதும் நடப்பதும் இயல்பே. இவ்வியற்கைபற்றியே, இவள் தைரியமாய்த் தந் தையாணைகடந்து வெளியேறியதும்; சபைக்குள் வந்ததுமுதல் கேள்வி வுக்கு விடையளித்ததன்றி, வேறொன்றுக்கும் வாய்திறவாதிருந்தவள், இப் பொழுது, அவசியம்வரவே, வளர்ப்பு அப்பியாசத்தால் ஏற்பட்ட போலியச் சத்தை முற்றுந்துறந்து, வெகு ' துடுக்காயும், ' தைரியமாயும், விநயமாயும் பேசுகிறாள். அன்புடன் நடத்தினால் உத்தமகுணங்களைக்காட்ட வல்லவளே; கடுமையுடன் நடத்தினாலோ, வெறும்பயங்கொள்ளியாய் ஒழுகுபவளே. மென் மையான மனத்துக்குரிய குணநன்மைகள் வாய்ந்த இவள், கோழைமனத்துக் குரிய குணதோஷங்களும் உள்ளவளென்பதைப் பின் காணலாம்.

அண்ணத்தை இனிப்பிக்கும்பொருட்டாவது, யௌவனகால இச்சை அடங்கியுள்ள என் காமதாபத்தை உரியவாறு திருப்திசெய்யும்பொருட்டாவது, நான் இவ்விதம் வேண்டவில்லை என்பதற்குக் கடவுளே சாக்ஷி; அவள் மனோபாவத்தின் போக்குப்படித் தடையின்றி யிடங்கொடுக்கவே விரும்புகிறேன்: அவளென்னுடன் இருத்தலால், தங்கள் பெரிய முக்கியமான காரியத்தில் நான் அசட்டையாயிருந்துவிடுவேனென்று தாங்கள் எண்ணவேண்டாம்; தோகைகள் வாய்ந்த மன்மதனது மென்சிறைப்புள்ளினங்கள்போன்ற லீலாவிநோதங்கள், காமமயக்கான திரையையிட்டு என் காட்சித்திறனையும் வினைசெயுந்திறனையும்மறைக்க, என் விளையாட்டுத்தனத்தால் முக்கிய காரியங்கள் மாசுற்றுக் கெடுமாயின், என் யுத்தத் தலைச்சீரா பெண்டிர்களுக்குச் சமையற்பாத்திரமாகட்டும்; என் மதிப்பும் நற்பெயரும் மிகவும் இழிவுபயக்கும் துர்ச்சம்பவங்களாற் பழிப்புண்டு நாசமடைவனவாகட்டும்.

**ட்யூக்** :—அவள் இங்கே தங்குகிறதோ கூடப்போகிறதோ, அது உங்களுக்குள் முடிவுசெய்துகொள்வதுபோலாகட்டும். காரியமோ அவசரமானது; அதற்கேற்றபடி துரிதம் செய்யவேண்டும்.

**முதல் து. ச** :—நீரின்றிரவே புறப்படவேண்டும்.

**ஒதேல்** :—இருதய பூர்வமாயப்படியே.

**ட்யூக்**:—காலை ஒன்பது மணிக்கு இங்கு நாம் மறுபடியும் கூடுவோம். ஒதெல்லோ, நம்முடைய நியமன கட்டளையையும், உம்முடைய தகுதிக்கும் கவுரவத்துக்கும் வேண்டிய விஷயங்களைப்பற்றிய உத்திரவையும் பின்பு கொண்டுவர, யாவனாயினும் ஒருத்தியோகஸ்தனைவிட்டுவிட்டுப்போம்.

**ஒதேல்** :—தாங்கள் விடைகொடுத்தால், என் துவஜதாரியை விட்டுப்போகிறேன். அவன் நாணயமும் நம்பிக்கைக்குரிமையுமுள்ள மனிதன். என் மனைவியை அழைத்துவரும்படிக்கும், தாங்கள் எனக்கு அனுப்ப விரும்பும் மற்ற அவசியமான பொருள்களைக் கொண்டுவரும்படிக்கும், அவனை நியமிக்கிறேன்.

**ட்யூக்**:—அப்படியே ஆகட்டும்,—யாவர்க்கும் நல்லிரவாகுக.- [ப்ரபான்ஷியோவை நோக்கி] கவுரவ கனவானே! நற்குணத்துக்குக்

கண்பகட்டான அழகு அவசியமில்லையெனின், உங்கள் மருமகன் கறுப்பாயிருப்பதினும் அதி சௌந்தரியமுள்ளவராகவே யிருக்கிறார்.

**முதல் து. ச** :—போய்வாரும், மோரிய வீரரே! டெஸ்டிமோனாவை நன்றாக ஆதரியும்.

**ப்ரபா** :—உனக்குப் பார்க்கக் கண்களிருந்தால் அவளைப் பார்த்துக்கொள், மோரிய; அவள் தன் தகப்பனை வஞ்சித்துவிட்டாள், உன்னையும் அப்படியே செய்யக்கூடும். [ட்யூக், துரைத்தனச் சங்கத்தார், உத்தியோகஸ்தர், முதலியோர் போதல்.]

**ஒதேல்** :—அவள் கற்புக்கு என் உயிரையே பணயம் வைப்பேன்! நாணயமுள்ள இயாகோ, என் டெஸ்டிமோனாவை உன்வசம் விட்டுப் போகிறேன்; உன் பெண்சாதியை அவளுக்குச் சேடியாக்கும்படி வேண்டுகிறேன்; தக்க சௌகரியத்துடன் அவர்களைப் பின்பு அழைத்துவா. வா, டெஸ்டிமோனா; காதலுக்கும், மற்ற விஷயங்களைப்பற்றி 'ஏற்பாடு' செய்து உன்னுடன் கழிக்கவும், இன்னும் ஒருமணி அவகாசந்தான் எனக்கிருக்கிறது. நாம் காலத்துக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொள்ளவேண்டும்.

[ஒதெல்லோவும் டெஸ்டிமோனாவும் போதல்.]

**ராடரீகோ** :—இயாகோ,—

**இயா** :—என்னசொல்லுகிறாய் அப்பா, சீலவானே?

**ராட** :—நான் என்னசெய்யப்போகிறேனென்றெண்ணுகிறாய்?

**இயா** :—என்ன, படுத்துத்தூங்குகிறதுதான்.

**ராட** :—நான் இக்ஷணமே நீரில்மூழ்கி யிறக்கப்போகிறேன்.

**இயா** :—நீயப்படிச்செய்தால், பிற்பாடு ஒருபொழுதும் உன்மேற் பக்ஷமாயிருக்கவேமாட்டேன். எதற்காகவப்பா, அறிவீனரேறே.

**ராட** :—உயிர்வாழ்க்கை கொடுந்துயராயிருக்கையில், உயிரோடிருத்தலே அறிவீனம். அப்பொழுது கூற்றுவனே நமக்கு வைத்தியனும், சாவே ஏற்ற ஔஷதமுமாம்.

இயா :—அடேயப்பா! என்னபுத்திசாலித்தனமடா! நானும் இந்த உலகத்தை நாலேழுவருஷங்களாக* பார்த்துக்கொண்டு வருகிறேன்: எனக்கு இலாபமிது நஷ்டமிது என்று பகுத்தறியும் சக்திவந்த நாள் முதல் இதுவரையும், தன்னயத்தைச் செவ்வையாயறிந்து நடக்கக் கூடியவனொருவனையாவது நான் கண்டதேயில்லை. ஒரு விலைமாதின்† காதலுக்காக நான் மூழ்கியிறப்பேனென்று சொல்வதிலும், நானென்றால், மனுஷத்தன்மையை மாற்றிக்கொண்டு (கேவலம் மூடாத்மாவாகிய) குரங்காய்விட இசைவேன்.

ராட :—நான் என்னசெய்வேன்? இவ்வளவு மூடத்தனமாயிருத்தல் எனக்கு மானக்குறைவேயென்று ஒப்புக்கொள்கிறேன்; ஆனால் அதைத் திருத்த எனக்கு மனவலிமையில்லையே?

இயா :—மனவலிமையா! மண்ணாங்கட்டி! நம்முடைய மனநிலையிப்படியோ அப்படியோவென்பது நம் கையிலேயேயிருக்கிறது. நம்முடைய சரீரங்கள் தோட்டங்கள்; அவற்றிற்கு நம் சித்தங்களே தோட்டக்காரர்கள்; ஆகவே முட்செடிகள் நடவோ கீரைவிதைக்கவோ, செவ்வந்தியைவைக்கவோ எருக்கைப்பிடுங்கி யெறியவோ, ஒரேசாதிச் செடிகள்போடவோ, பலவகைப்பூண்டுகள் மயங்கித் தடுமாறும்படி நிரப்பவோ, சோம்பலால் பாழாகவைத்திருக்கவோ முயற்சியுரமிட்டு வளமாக்கவோ, எவ்விதமாகவேனும் செய்யும் சக்தியும் திருத்தும் அதிகாரமும் நம் சித்தத்துக்கிருக்கின்றது. நம்முயிர்வாழ்க்கையாகிய தராசுக்குப் புலன்வேட்கையென்ற தட்டுக்குமாறாக விவேகம் என்றொரு தட்டுமில்லாவிடின், நம் இரத்தக்கொழுப்பும் இழிவான

---

* இதனால் இயாகோவின் வயது இருபத்தெட்டேயென்றேற்படுகின்றது. ஆகவே, அவன் தீக்குணங்களும், சர்ப்பனைத்திறனும், நற்குணங்களிற் சிறிதும் நம்புதலின்மையும், அவனுடன் பிறந்தனவேயன்றி, உலக அநுபவத்தாலும், பழக்கத்தாலும், துன்பத்தாலுண்டான மனக்கசப்பினாலுமுண்டாயினவல்லவென்று வெளியாகிறது. இச்சிலவானுக்கு முதற்கண் உதித்த பகுத்தறிவு, நன்மையிது தீமையிது என்று கருதாது, இலாபமிது நஷ்டமிதென்றே கருதிப்போந்து, அச்சுவட்டிலேயே முதிர்ந்துதேர்ந்தது.

† டெஸ்டிமோனாவை; தன்மனங்கொண்டே பிறர்மனமளக்கும் சுபாவத்தால், கற்பிற் கடுகும் நம்பிக்கையில்லாத இப்பாதகன், அவளை யிப்பெயரால் குறிப்பிடுகிறான்.

சுபாவமும் மிக விபரீதமான விளைவுகளில் நம்மைக் கொண்டுவிட்டு விடும்: ஆனால், நமது கொதித்துக் கூத்தாடும் மனச்சலனங்களையும், ஐம்பொறிகளின் விஷக்கொடுக்குக்களையும், கடிவாளமில்லாக் காமவெறிகளையும் அடக்க நமக்கு புத்தி கொடுக்கப்பட்டிருக்கிறது; 'காதல்' என்று நீ கூறுவதும் இவ்வித அவஸ்தைகளில் ஒருதுண்டு அல்லது கிளையென்றே கொள்கிறேன்.*

ராட:—அப்படி யிருக்கமுடியாது.

இயா:—அது* கேவலம் இரத்தக்கொழுப்பே; சித்தத்தின் அநுமதிபெற்றிருப்பதே. போதும், ஆண்தன்மையைக்காட்டு; மூழ்கியிறக்கிறதா! பூனைகளையும் குருட்டு நாய்க்குட்டிகளையுமன்றோ மூழ்கியிறக்கச்செய்வது! நான் உன்பால் சிநேகம்பாராட்டிவிட்டேன்; அதிபலமான நட்புப்பாசங்களால் கட்டுண்டு உனக்குக் கடமைப்பட்டிருக்கிறேனென்று ஒப்புக்கொள்கிறேன். உனக்குதவிசெய்ய இதிலும் நல்ல சமயம் எனக்கு வாய்க்காது; உன் பையில் பணத்தை நிரப்பிக்கொள்; இந்த யுத்தங்களுக்குக்கூடவே வா; ஒரு பொய்த்தாடிதரித்து வேஷம் மாற்றிக்கொள்; என் சொற்படி பணமெடுத்துப் பையில்வைத்துக்கொள்; டெஸ்டிமோனாவுக்கு மோரியன்மேலுள்ள காதல் நீடித்திருக்கமுடியாது, உன் பையிற் பணத்தைப் போட்டுக்கொள்,—அவனுக்கு அவள்மேலுள்ள காதலும் அப்படியே: அது முற்றிலும் சுபாவவிரோதமாய்த் தொடங்கியது; அதற்கேற்க அவர்கள் பிரிவதையும் நீ காண்பாய்;—உன் பையில் பணம்மட்டும் எடுத்துவைத்துக்கொள்;—இந்த மோரியர்கள் திடசித்தமில்லாதவர்கள்;—உன் பையைப் பணத்தினால் நிரப்பிக்கொள்: இப்பொழுது அவனுக்குத் தேன்போலத் தித்திக்கும் உணவு சீக்கிரத்தில் கொம்மட்டிக்காய்போற் கசந்துவிடும். அவளும் மனமாறி யௌவனபுருஷருக்காசையுறுவாள். அவன் (அநுபவம்) தெவிட்டியவுடன், தான் விரும்பிக் கைக்கொண்டது தவறென்றறிவாள்; அவள் மாறவே மாறுவாள், அது நிச்சயமே; ஆகையினால் உன் பையில் பணமெடுத்துவை—சாகவேவேண்டுமென்றெண்ணினால் (மூழ்கியிறப்பதிலும்) வேறு நேர்மையானவிதமாக உயிரைவிடு. உன்னால் சேர்க்கக்கூடியபணம் அவ்வளவும் சேர்த்துக்கொள்; ஒரு நிலையின்றித்திரியும் காட்டான் ஒருத்தனும், உத்தமிபோல் நடிக்கும் வெகு சூதுக்காரியாகிய வெநிஸ்நகரத்தாள் ஒருத்தியும், தங்களுக்குள்

* இப்பேச்சுக்கள் இயாகோவினது மனத்தின் சமநிலையை நன்குணர்த்துகின்றன: புத்திக்கூர்மையும் திடமுமே குடிகொண்ட உள்ளத்தினன் அவன்; காதலின் மெய்க்குணத்தை யூகித்தறியும் சக்தியும் இல்லாதவன்; அதைக் கேவலம் காமக் கொழுப்பாகவே மதித்தொழுகுபவன்.

செய்துகொண்ட ஒரு அற்பப்பிரதிக்ஞையை, என் மதிவலியால் கெடுத்துவிடமுடியுமெனில், உனக்கு அவளைக் கொடுக்கிறேன்; பணமெடுத்துக்கொள். மூழ்கியிறக்கிறதெல்லாம் பாழாயிற்று! அது முற்றிலும் தவறே. அவளை யநுபவியாது மூழ்கியிறப்பதிலும், உன் மனோபீஷ்டத்தை (வலாற்காரமாய்) நிறைவேற்றிக்கொண்டு, அதனால் தூக்கிவிடப்படுவதையேனும் நீ தேடவேண்டும்.

**ராட**:—நான், உன் ஆலோசனைப்படியாகும் பின் விளைவை நம்பினால், நீ என்னைக் கைவிடாது உதவிசெய்வாயா?

**இயா**:—என்னைப்பற்றிக் கவலையேவேண்டாம்:—போ, பணத்தைத்திரட்டு:—எனக்கு அந்த மோரியன்மேற் பகை என்று அடிக்கடி நானுனக்குச் சொல்லியிருக்கிறேன், இப்பொழுதும் வற்புறுத்திச் சொல்லுகிறேன்: அப்பகைமை என்மனத்தில் வேரூன்றியிருக்கிறது; உன் பகைமைக்கும் தக்க காரணமிருக்கிறது. நாமிருவருமாகச் சேர்ந்து அவன்மேற் சலஞ்சாதிப்போம்; நீ யவனுக்குத் தீங்கிழைத்தால் உன்மனம் சந்தோஷமடையும், எனக்கும் அது ஒரு விளையாட்டே. இப்பொழுது காலங்கருவுற்றிருக்கும் அநேக சங்கதிகள் பின்பு வெளிப்படும்; நட, போ, பணத்துக்கேற்பாடுசெய். நாளை இதைப்பற்றி யின்னும் பேசுவோம்; போய்வா.

**ராட**:—காலையில் எங்கே சந்திப்போம்?

**இயா**:—நான் தங்குமிடத்தில்.

**ராட**:—அதிகாலையில் வருகிறேன்.

**இயா**:—சரி: போய்வா. நான் சொல்வது கேட்கிறதா, ராடரிகோ?

**ராட**:—என்ன சொல்லுகிறாய்?

**இயா**:—மூழ்கியிறக்கிற பேச்சு இனிக்கூடாது, கேட்கிறதா?

**ராட**:—நான் மாறிவிட்டேன்; என் பூஸ்திதியையெல்லாம் விற்கப்போகிறேன்.

**இயா**:—சரி; போய்வா; பையில் போதுமான பணமட்டும் எடுத்துக்கொள். [ராடரிகோ **போர்தல்**.]

(தனிமொழி.) இப்படித்தான் எப்பொழுதும் நான் மூடர்களை யென் பணப்பையாக்கிக்கொள்கிறது; ஏனெனின், விளையாட்டாக

வும் இலாபத்தை யுத்தேசித்துமன்றி இவ்வளவு வெள்ளறிவனேடு என் காலத்தை நான் வீண்போக்கினல், நான் சம்பாதித்த உலக அநுபவஞானத்தைப் பாழாக்கியதாகும். நான் மோரியனை வெறுக்கிறேன்; அவன் என் மனைக்கு மோசஞ்செய்துவிட்டானென்று வெளியே பிரஸ்தாபம்;* அது மெய்யோ பொய்யோ அறியேன்; ஆனல் அவ்விதமான வெறுஞ் சந்தேகத்துக்காக அது உண்மையாயிருந்தால் என்ன செய்வேனே அப்படியே செய்வேன். அவனுக்கு என்மேல் நல்லபிப்பிராயமுண்டு; ஆகவே என் காரியம் வெகு நன்றாய்ப்பலிக்கும். காஸியோ நல்ல சுந்தரபுருஷன்: ஆலோசித்துப்பார்க்கட்டும்: அவன் ஸ்தானத்தைப்பெற்று, என் உத்தேசத்தையும் இரட்டிப்பான வஞ்சனையால் நிறைவேற்றிக் கொடிகட்டவேண்டும்.† எப்படி,—எப்படி,— ஆலோசிப்போம்:—சிறிதுகாலம்பொறுத்து, அவன், அவன் பெண்சாதியுடன் மட்டுக்குமிஞ்சி யுறவாடுகிறானென்று ஒதெல்லோ காதில் 'பற்றவைக்கிறது':—அவன் ஆள், ஆகிருதி, நயமான நடவடிக்கைகளைப்பார்த்தால் யாரும் சந்தேகிப்பார்கள். பெண்டிர்களை நெறிதப்பியொழுகச் செய்வதற்கே பிறந்தவன். மோரியனே, மிகவும் கபடமற்ற சுபாவஸ்தன்; யோக்கியர்களாகக் காணப்படுபவர்கள், உண்மையாய் யோக்கியர்களேயென்றெண்ணுகிறான்; குரங்கைப்போல் அவனை யெப்படிவேண்டினும் ஆட்டலாம். அதுதான் யுக்தி:—கருக்கொண்டுவிட்டது:—இந்தக் குரூபமான யுக்திப் பிறவியைக் கொடுமையான வஞ்சகத்தால் இரகசியமாய் முதிரச்செய்து வெளிப்படுத்தவேண்டும்.

[போதல்

---

வானுயர் தோற்றத்தினரேனும், மிகவீனவொழுக்கினரேனும் தன்னெஞ்சறி குற்றமுளராயின், அவர் நெஞ்சம் சுடவேசெய்யும்;—அவ்வாறு, தான் செய்யப்புகும் கொடும்பாதகத்துக்குத்தக்க முகாந்தரமிலையேயெனத் தன்னை யுறுத்தும் தன் மனச்சாக்ஷியை யொருவாறு போலி நியாயங்களால் திருத்தி செய்யவெண்ணியே, இயாகோ, இவ்வாறு ஒதெல்லோவின்மேற் பழிசுமத்துகிறான். சொல்லும் நாவையும் உன்னும் மனத்தையும் தீக்கும் இம்மானக்கேடு தனக்கு நேர்ந்திருப்பதாக இவன் கூறும் மொழிகளும், அவ்விஷயத்திற் காட்டும் உபேக்ஷையும், இவன் சிறிதும் மான உணர்ச்சியேயில்லாத அதமோதமன் என்பதை நன்கு தெரிவிக்கும். இவன் தீச்செயலுக்கு இவன் தீச்சிந்தையின்றி வேறு தக்க காரணமின்றென்க.

யாக்கையுகக்கும் பிணம் என்றாற்போல் இவன் கொடி கட்டுவதெல்லாம் இவ்விதத் தீச்செயல்களினலேயே.

# இரண்டாம் அங்கம்.

## முதற்களம் :—ஸைப்ரஸில் ஒரு துறைமுகப்பட்டணம்: (கடற்கரையருகே) ஒரு தட்டுமேடு.

(காலம் : மாலை.)

[மண்டானோவும், இரண்டு கிரகஸ்தரும் பிரவேசித்தல்.]

**மண்டானோ** :—அந்த முனையிலிருந்துபார்த்தால் கடலில் என்னதெரிகிறது ?

**முதல் கி. ன்** :—ஒன்றுமேதெரியவில்லை: அலைகள் கொந்தளித்தோங்குகின்றன ; வானத்துக்கும் கடலுக்குமிடையே கப்பலொன்றுங் காணப்படவில்லை.

**மண்டா**:—நிலத்திலும காறறு உரத்து வீசயுள்ளதெனவெறணுகிறேன் ; இதிலும் பெருங்காற்று நம்மலங்கத்திலடித்ததேயில்லை ; அப்படியே கடலிலும் அடித்திருந்தால், மலைபோன்ற அலைகள் மேல் விழுந்து மோதப்படுதலினால் எந்த மரக்கலங்கள்தாம் சிதறாது தாங்கக்கூடும் ? இதினிமித்தம் என்ன சமாசாரம் வருமோ ?

**இரண்டாம் கி. ன்**:—துருக்கர் மரக்கலத்தொகுதி பிரிவுபட்டுப் போயிற்றென்பதே : நுரைததும்பும் கரைமேனின்று பார்த்தால், கண்டிக்கப்பட்ட தரங்கங்கள் மேகங்களின்மேற் கல்லெறிவனபோற் காணுகின்றன. காற்றாலலைப்புண்ட வாரிதி,† குரூபமாயோங்கி யெழும் பிடரிமயிராகிய அலைகளினால் எரிந்துகொண்டிருக்கும் சப்தருஷி நக்ஷத்திரங்களின்மேல் நீரைவீசி, அசுவினி நக்ஷத்திரங்களையும் அவிப்பதுபோலிருக்கின்றது. கோபமுற்ற சாகரத்தில் இவ்விதக் கம்பலையை நான் கண்ணுற்றதேயில்லை.

**மண்டா** :—துருக்கர் கப்பற்படை துறைமுகத்துக்குள் ஒதுங்கியிராவிட்டால், அவர்கள் மூழ்கிப்போனவர்களே ; இதைத் தாங்கிப் பிழைக்கமுடியாது.

---

இதுமுதல் கடைசிவரையும் கதை நிகழ்வது ஸைப்ரஸ்தீவில் ஒரு துறைமுகப்பட்டணத்திலேயே.

† அலையொருபோர்க் குதிரையாக உருவகப்படுத்தினர்போலும்.

[மூன்முவது கிரகஸ்தன் ஒருவன் பிரவேசித்தல்.]

**மூன்றம் கி. ன்** :—ஓ இளைஞர்களே! நற்சமாசாரம். நம்முடைய யுத்தங்கள் முடிந்துவிட்டன. இந்தக் கடுமையான சூருவளியால் தாக்குண்டு, துருக்கர் உத்தேசமெல்லாம் தடைப்பட்டு நின்றுவிட்டது: வெநிஸிலிருந்துவந்த ஒரு பெரிய கப்பல் மிகவும் உடைபட்டுப் பெரும்பாகமும் சேதப்பட்டிருக்கிறது.

**மண்டா** :—எப்படி, இது மெய்தானு?

**மூன்றம் கி. ன்** :—அந்தக் கப்பல் இங்கு வந்திருக்கிறது; வெரோஞ நகரத்து வேலே,* அது; யுத்தவீர மோரியர் ஓதெல்லோவின் உபசேஞபதி மிக்கேல்காஸியோ கரையில் வந்திருக்கிருர். இத்தீவுக்குச் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டு, மோரியரும் வருகிருராம்; ஆனல் இன்னும் அவர் கடலிலேயே யிருக்கிருர்.

**மண்டா** :—எனக்கு அது சந்தோஷமாயிற்று. அவர் தக்க தலைவர்; ஆள்கைக்குத்தக்கவர்.

**மூன்றம் கி. ன்** —ஆனல் நான் சொன்ன இந்தக் காஸியோ, துருக்கரடைந்த நஷ்டத்தைப்பற்றி ஆறுதலாய்ப் பேசுகின்ருராயினும், மோரியர் க்ஷேமத்தைப்பற்றி மனங்கவன்று கடவுளைப் பிரார்த்திக்கிருர்; அவர்கள் பிரியும்பொழுது வெகு மும்முரமான கெட்ட சூறைக் காற்று அடித்துக்கொண்டிருந்ததாம்.

**மண்டா** :—அவர் க்ஷேமத்துக்குக் கடவுளைப் பிரார்த்திப்போம்; நான் அவரிடத்தில் சேவித்திருக்கிறேன்; அவர் உத்தமமான யுத்தவீரனைப்போல் இராணுவத்தலைமை நடாத்துகிருர். நாம் கடற்பக்கம்செல்வோம்: வந்திருக்கும் கப்பலையும் பார்க்கலாம், ஓதெல்லோ வீரர் வரவையும், வானமும் வாரிதியும் மயங்கித்தோன்றுமாறு கண்பூக்குமளவும், உறுத்துப்பார்க்கலாம்.

**மூன்றம் கி. ன்** :—வாருங்கள், அப்படியே செய்வோம்; ஒவ்வொரு நிமிஷமும் புதுவரவை யெதிர்பார்க்குஞ் சமயமாயிருக்கிறது.

* வெநிஸ் துரைத்தனத்தாருக்காக வெரோஞ நகரத்தில் செய்யப்பட்ட மரக்கலம்; வெரோஞவில், மரக்கலஞ் சமைப்பதில் கைவல்ல கம்மியர் உளர் போலும்.

[காஸியோ பிரவேசித்தல்.]

**காஸி** :—யுத்த சன்னதமாயிருக்கும் இத்தீவில் வாழும் வீரர்களே! மோரியரை யிவ்வளவு மெய்ச்சுவதற்கு நான் வந்தனமளிக்கின்றேன். நான் அவரை அபாயகரமான கடலில் தவறவிட்டுவந்திருக்கின்றேன்; நீரும் காற்றுமாகச்செய்யும் இவ்வாபத்தினின்றும் கடவுள் அவரைக் காப்பாற்றுவாராக.

**மண்டா** :—அவர் கப்பல் பலமானதா?

**காஸி** :—அவர் நாவாய் திண்ணமான மரத்தாற் செய்யப்பட்டது; அவர் மாலுமியும் பெயர் பெற்ற அதிசமர்த்தன்; ஆதலின் நான் அடிக் கடி மோசம்போய் நம்பிக்கையை இழக்காமல், நல்முடிவைத் தைரிய மா யெதிர்பார்த்திருக்கிறேன்.

[உட்புறத்தில்] ஒரு கப்பல்! ஒரு கப்பல்! ஒருகப்பல்!

[நான்காவது கிரகஸ்தன் ஒருவன் பிரவேசித்தல்.]

**காஸி** :—என்ன கூக்குரல்?

**நான்காம் கி. ன்** :—பட்டணங் காலியாய்விட்டது; ஜனங்களெல் லாரும் கடல்விளிம்பில் வரிசை வரிசையாக நின்றுகொண்டு "ஒரு கப்பல்" என்று கத்துகிறார்கள்.

**காஸி** :—(அக்கப்பலில்) வருபவர் 'கவர்னர்' என்றே நம்புகிறேன்.

[பீரங்கிச் சத்தம் கேட்கப்படுகிறது.]

**இரண்டாம் கி. ன்** :—நல் வரவேற்று மரியாதையாகக் குண்டு சுடுகிறார்கள்: நம்முடைய சிநேகிதர்களென்பது திண்ணம்.

**காஸி** :—ஐயா, தயைசெய்து போய், வந்திருப்பது யாரென்று உண்மை தெரிந்துவந்து சொல்லும்.

**இரண்டாம் கி. ன்** :—ஆகட்டும். (போதல.)

**மண்டா** :—அதிருக்கட்டும், நல்ல உபசேனாபதி, உங்கள் தள கர்த்தருக்குக் கல்யாணமாய்விட்டதா?

**காஸி** :—அதி பாக்கியமாக முடிந்திருக்கிறது: வருணிக்கமுடி யாதவளும், இதுகாறும் பெரும்பேர்பெற்ற அழகையெல்லாம் மிஞ் சினவளுமான ஒரு கந்நிகையை அவரடைந்திருக்கிறார்; அதி சாது

ரியமான கவி வருணனைக்கெல்லாம் பேர்போனவள்; இயற்கையமைப்பிலேயே சகல மேம்பாட்டையும் பெற்றவள்.

[இரண்டாம் கிரகஸ்தன் திரும்பிப் பிரவேசித்தல்.] என்ன சங்கதி? வந்தது யார்?

**இரண்டாம் கி. ன்:**—சேனைபதியின் துவஜதாரி இயாகோ என்றொருவர்.

**காஸி:**—அவன் வெகு நயமும் சுபமுமான வேகத்தோடு வந்திருக்கிறான்: சண்டமாருதங்களும், கொந்தளிக்கும் அலைகளும், ஊளையிடும் ஊதைகளும், குற்றமற்ற மரக்கலங்களைத் தடுக்குந் துரோகிகளாக நீருள் வைக்கப்பட்டிருக்கும் பிளவுபட்ட பாறைகளும், மணற்றிடர்களுங்கூட அழகின் சுவையை யுணர்ந்தனபோன்று, ஆரணங்கன்ன டெஸ்டிமோனு க்ஷேமமாய்ச் செல்லும்படி வழி விட்டுவிட்டன.

**மன்டா:**—அவள் யார்?

**காஸி:**—நான் கூறியவள், நம்முடைய பெரிய தலைவனுக்குந் தலைவி; தைரியசாலியாகிய இயாகோ அவளை அழைத்துவர நியமிக்கப்பட்டிருந்தான். எங்கள் உத்தேசத்துக்கு ஒருவாரத்துக்கு முன்னராகவே இப்பொழுது அவன் இங்கு வேகமாய் வந்து சேர்ந்திருக்கிறான். ஜகதீசா! ஒதெல்லோவைக்காத்து, உனது அதிவேகமான மூச்சையே அவரது கப்பற்பாயிற்றூக்கச்செய்து, அவர் நெடிய நாவாய் இந்தக் குடாக்கடல் வந்தடையவும், டெஸ்டிமோனுவின் தோள்கள் காதல் தழைத்துப் புளகாங்கிதங்கொள்ளவும், அவிந்தோய்ந்த எங்கள் மனவூக்கம் திரும்பவும் சுவாலைகொண்டு கிளர்ந்தோங்கவும், ஸைப்ரஸில் யாவரும் சுபமுறவும் கிருபை செய்வாயாக! ஆ! ஆ! அதோ பாருங்கள்!

[டெஸ்டிமோனுவும், எமிலியாவும் இயாகோவும், ராடரிகோவும், ஏவலரும் பிரவேசித்தல்.]

கப்பலின் செல்வமெல்லாம்* கரைக்கு வந்துவிட்டது! ஸைப்ரஸ் வாசிகளே, அவளை முழந்தாள் பணிந்து வணங்கக்கடவீர்;—சீமாட்

---

டெஸ்டிமோனுவைப்பற்றிப் பேசத்தொடங்கியது முதல், காஸியோவுக்குள்ள குதூகலமும், மனோபாவமும், பின் தெரிகிறவாறு அவன் சிறிது விடனேயாயினும் அவளைப்பற்றிய அவன் மொழிகளின் பரிசுத்தமும், பயபத்தியும், அவள் திவ்யரூபலாவணியத்தை விளக்குவதுடன், அவனது திட்டிடமன்ன கற்பையும், மனத்தூய்மையையும், விநயத்தையும் நன்கு தெரிவிக்கின்றன; அவன் சீலமும் விளங்குகின்றது.

டியே, வாழி! தேவ கிருபை, முன்னும் பின்னும் எப்பக்கமும் தங்களைச் சூழ்வதாக!

**டெஸ்டி:**—காஸியோ வீரரே! உமக்கு வந்தனமளிக்கிறேன். என் னுதரைப்பற்றி யென்ன சமாசாரம் எனக்குச் சொல்லவல்லீர்?

**காஸி:**—அவரின்னும் வந்து சேர்ந்திலர்; நானறிந்தமட்டும் அவர் சௌக்கியமாயிருக்கிறார்; சீக்கிரம் இங்கு வந்து சேர்வார்.

**டெஸ்டி:**—ஓ! ஆனால் எனக்குப் பயமாயிருக்கிறது:—நீங்களெங்ஙனம் இணைபிரிந்தீர்கள்?

**காஸி:**—வானத்துக்கும் வாரிதிக்கும் நடந்த பெரும்போர் எங்களைப் பிரித்துவிட்டது:—[உட்புறத்தில்] "ஒரு கப்பல், ஒரு கப்பல்!" ஆனால், உற்றுக்கேளுங்கள்: ஒரு கப்பல். [பீரங்கிச் சத்தம் **கேட்கப்படுகிறது.**]

**இரண்டாம் கீ. ஷ்:**—கோட்டைக்கு மரியாதையாகக் குண்டு சுடுகிறார்கள்: இதுவும் ஒரு சிநேகிதனே.

**காஸி:**—என்ன சங்கதி பாரும். [ஒரு கிரகஸ்தன் **போதல்.**]

நல்ல துவஜதாரியே! உன் வரவு நன்மையாகுக:—[எமிலியாவை நோக்கி] அம்மா, உன் வரவு நல்லதாகுக:—நல்ல இயாகோ, என் உபசாரத்தை யதிகமாகக் காட்டுகிறேனென்று நீ பொறுமையுறாதே; இவ்வளவு துணிகரமாக நான் மரியாதை காட்டுவதற்கு என் நல்லொழுக்கமே ஆதாரம்.

[எமிலியாவை முத்தமிடுகிறான்.

**இயா:**—ஐயா, அடிக்கடி யென்னிடம் அவள் நாவை நீட்டுமளவு உமக்குத் தன் அதரங்களைக் கொடுத்தால், உமக்கே போதும் போதுமென்றாய் விடும்.

**டெஸ்டி:**—ஐயோ! அவள் வாயாடுகிறதேயில்லையே.

**இயா:**—உண்மையில், மட்டுக்கு மிஞ்சியே பேச்சு; எனக்குத் தூக்கம் வரும்பொழுதெல்லாம் நானதைக் கேட்கிறேன். ஆனால் தங்

---

இம்மாதிரி யுபசரித்தல் இந்த நாட்டாருக்குப் பெரும் விந்தையாகவும், அக்கிரமமாகவும் தோன்றும்; தேசாசாரம், சாதியாசாரம், பலவிதமென்று விடுக்க.

கள் கனத்தின் முன்னிலையில், அவள் நாவைச் சிறிது இருதயத்துளி ழுத்துக்கொண்டு, உள்ளூறவென்னைத் திட்டுகிறாளென்பது உண்மை தான்.

எமிலி :—அப்படி நீர் சொல்லக் காரணமேயில்லை.

இயா :—போதும், போதும்; நீங்களெல்லாம் வெளியே வந்தால் சித்திரப்பதுமைகளே; வீட்டு முன்கட்டில் வெண்கலமணிகள்; சமையல் அறையில் காட்டுப் பூனைகளே. ஏதேனும் தீங்கிழைக்கும்பொழுது பரம சாதுக்களாகவே தோற்றம்; கோபம் வந்துவிட்டாலோ பைசாசங்கள் தான்; கிரக கிருத்தியங்களில் விளையாட்டுத்தனமே; படுக்கையில்தான் குடித்தனச் சுறுசுறுப்பெல்லாம்.

டெஸ்டி :—அடா பழிகாரா! சிறிதும் வெட்கமில்லையா!

இயா :—இல்லை, இது மெய்யே; இல்லாவிட்டால் நான் ஒரு துருக்கனே: விளையாட எழுந்திருக்கிறீர்கள், வேலை செய்யச் சயனித்துக்கொள்கிறீர்கள்.

எமிலி :—என் புகழை நீரெழுதவேண்டாம்.

இயா :—வேண்டாம், என்னை யெழுதச்சொல்லாதே.

டெஸ்டி :—என்னைப் புகழவிரும்பினால், என்னைப்பற்றி யென்ன எழுதுவாய்?

இயா :—அம்மா, அம்மா, என்னைக் கேளாதேயுங்கள்; ஏனெனில், நான் எப்பொழுதும் குற்றங்கூறுவதிலேயே சமர்த்தன்.

டெஸ்டி :—இருக்கட்டும், சொல்லிப்பார்,—துறைமுகத்துக்கு யாராவது போனார்களா?

இயா :—ஆமாம், அம்மா.

டெஸ்டி :—என் மனத்தில் உற்சாகமில்லை, ஆனால் உற்சாகமாயிருப்பதுபோல் நடித்து இப்படித் தோன்றுகிறேன். சொல்லு, என்னையெப்படிப் புகழுவாய்.

இயா :—அதுதான் ஆலோசிக்கிறேன்; ஆனால், என் கவன சக்தி, பிசினிலிருந்து துணியை யெடுப்பதுபோல், என் தலையிலிருந்து 'மூளை கீளை' யெல்லாம் பிடுங்கிக்கொண்டுவருகிறது: ஆயினும் என்

வாகீசை முக்கிமுக்கி யிவ்வாறு பிரசவிக்கிறாள்: 'அழகும் மதியும் அமைந்துள ஆடவள், அழகின் பயனை மதியால் அடைவள்.'

**டெஸ்டி** :—நல்ல புகழ்ச்சி! ஒருத்தி கறுப்பு நிறத்தினளாயும் மதியூகியாயுமிருப்பின் எப்படி?

**இயா** :—கறுத்தவளேனும் மதிவலிகதுவின்
உறுத்ததோர் வெள்ளையைத் தேடியுறுவள்.

**டெஸ்டி** :—வரவர மோசமாயிருக்கிறதே.

**எமிலி** :—அழகு வாய்த்தும் முட்டாளாயிருந்தால் எப்படி?

**இயா** :—மதியிலா தெந்த அழகியும் வாழ்ந்திலள்,
மதியிலாத் தன்மையே மகவொன்றளித்தலான்.

**டெஸ்டி**:—இதெல்லாம் மடையர்களைச் சாராயக்கடையிற் சிரிக்கச்செய்யும் பண்டைநாளை அசத்தியாபாசங்களே. அவலக்ஷணமுள்ளவளாயும் மதியிலியாயு மிருப்பவளை நீ யெவ்வளவு கீழ்க்கடையாக மதிப்பாய்.

**இயா** :—மதியழகேதுமே வாய்த்திலாதவளும்
மதியழகினர்செயும் வம்பெலாம் செய்வள்.

**டெஸ்டி** :—ஓ! என்ன முழு மூடத்தனம்! மிகத் தாழ்ந்ததையே மிகவுயர்த்தி மெய்ச்சுகிறாய், ஆயினும், மெய்யாகவே சற்பாத்திரமாகவும், தன் யோக்கியதா பலத்தால் அலர்தூற்றும் தீயர்களுங்கூடத் தன்னைப் பற்றிக் குறைகூற முடியாதவண்ணமிருப்பவளாயுமுள்ள உத்தமியொருத்தியை, நீ எவ்வாறு புகழ்வாய்.

**இயா** :—ஆரழ கமைந்தும் அகந்தை யிலளாய்,
வாக்கருள் வாய்த்தும் தூக்குசொல்லிலளாய்,
நல்லதோர் செல்வம் நனிமிக நண்ணியும்
பல்லலங்காரப் பணியுடை யிலளாய்,
செய்வலி யெய்தியுஞ் சிந்தை செற்றவளாய்,
கடுஞ்சின முற்றும், படுஞ் சமயத்தில்
நெடும்பகை நீங்கி விடுஞ்சினத் தினளாய்,
கரியின் தலையினும் அரியின் வாலே

பெரிதெனக் கொள்ளும் பேதைமை யிலளாய்,
உள்ளக் கருத்தை யொளிக்க வல்லளாய்,
தன்வயின் அன்பு தழைந்தோர் தொடர்ந்து
பின்வர லறிந்தும் பின்னேக் கிலளாய்,
இத்துணைச் சீரும் பெற்றவளுண்டேல்,

டெஸ்டி :—என்ன செய்வதற்கேற்றவள் ?

இயா :—மூட மகார்க்கு முலைப்பா லூட்டவும்
வீட்டில் தயிர் மோர் விற்றெழுதவுமே.

டெஸ்டி :—ஓ ! இதினும் குறைவான, தகுதியற்ற கடைமுடிவு கேட்டதேயில்லை ! எமிலியா ! உன் கணவனேயெனினும், அவனிடங் கற்றுக்கொள்ளாதே. நீர் என்ன சொல்கிறீர், காஸியோ ? மகா தூஷகனும் மானவீனனுமான போதகனல்லனு அவன் ?

காஸி :—அம்மா ! அவன் தன் மனத்துக்குத் தோன்றியுள்ளபடி பேசுகிறான் ; அவன் கலைஞானத்தினும் யுத்த சாமர்த்தியம் தங்களுக்கு மனோரம்மியமாயிருக்கும்.

இயா :—[தனக்குள்]* அவன் அவள் கையைப் பிடித்துக்கொள்கிறான் : சரி, நன்றாயிற்று ; 'கிசுகிசெனப்' பேசு : இவ்வளவு சிறிய வலையைக்கொண்டே அவ்வளவு பெரிய பூச்சியாகிய காஸியோவைப் பிடித்துவிடுகிறேன். சரி, அவளுடன் சிரி, சிரி ; உன் உபசாரங் களைக்கொண்டே உன் கால்களில் தளையிட்டுவிடுகிறேன். நீ சொல்வது மெய்யே : அது அப்படித்தான் ; சரிதான் : இவைபோன்ற உன் நடக்கைகளைக்கொண்டே உன் உபசேனதிபத்தியத்தை நான் பிடுங்கி விட்டபின்பு, அவளுக்கு மரியாதையாக இவ்வளவு அடிக்கடி உன் கையை முத்தமிட்டு, நாகரீக புருஷனைப்போல் நடிக்காமலிருந்தோமில்லையேயென்று, உனக்கே தோன்றும். மிக நல்லது : நன்றாகவே

* காஸியோவும் டெஸ்டிமோனவும் ஒருபுறமாகச் சம்பாஷித்துக்கொண்டிருக்க, அருகேயுள்ள இயாகோ, அவர்கள் சம்பாஷணையையும் கைச்சைகைகளையும், தேசாசாரப்படி காஸியோ செய்யும் மரியாதைகளையுங் கண்டு, இவற்றாலேயே இருவரையுங் கெடுக்கச் சூழும் தன் மனத்துள் சொல்லிக் கொள்வது.

முத்தமிட்டாய். நீ மரியாதையாய் வணங்கும் விதம் வெகு நேர்த்தியாயிருக்கிறது; அது அப்படித்தான். இன்னுமா கையை முத்தமிட்டுக் கொள்கிறாய்? உன்னன்மையின்பொருட்டே, உன் விரல்கள் சூட்டுக் கோல்களாயிருப்பின் நலமாயிருக்கும்!

[தாரை முழக்கம் கேட்கப்படுகிறது.]

அதோ மோரியர்! அவர் எக்காளத்தொனி யெனக்குத் தெரியும்.

**காஸி:**—அது மெய்யே.

**டெஸ்டி:**—நாம் எதிர்கொண்டுசென்று அவரை வரவேற்போம்.

**காஸி:**—அதோ வருகிறார், பாருங்கள்!

[ஒதெல்லோவும் ஏவலரும் பிரவேசித்தல்.]

**ஒதேல்:**—ஓ, என்னழகிய வீரா!*

**டெஸ்டி:**—பிராணநாதா!† (இருவரும் தழுவிக்கொள்ளுதல்)

**ஒதேல்:**—† எனக்குமுன் நீ இங்கு வந்திருப்பதைக் காண, எனக்கு விசேஷ திருப்தியும் ஆச்சரியமும் உண்டாகின்றது. ஓ, என் ஆத்மாநந்தமே! ஒவ்வொரு சண்டமாருதத்துக்குப் பின்னும் இம்மாதிரியான மனநிறைவும் அமைதியும் நேரிடுமாயின், மாண்டவர் மீண்டெழும்வரையும் வேண்டுமெனினும் காற்றுக்கள் வீசட்டும்; தத்தளிக்கும் மரக்கலங்கள் ஒலிம்பஸ் மலைபோலோங்கிய அலைகளின்மேலேறி, விண்ணுலகுக்கும் நரகத்துக்கும் இடையிலுள்ள அளவு தாழ்ந்து அமிழட்டும்! இந்தத் தறுவாயில் மரணம் சம்பவித்தால் அதுவே பெரும்பாக்கியம்; ஏனெனில், இப்பொழுது சம்பூர்ண ஆநந்தத்தில் மூழ்கியிருக்கும் என் ஆத்மாவுக்கு, இதைப்போன்ற சௌபாக்கியம் இனிவரும் அறிவரிய நாட்களில் ஒருபொழுதுங் கிட்டாதென்றஞ்சுகிறேன்.

---

* யுத்தத்துக்குச் செல்லும்பொழுதும் உடன்வந்ததற்காக மகிழ்ந்து தன் மனைவிக்குரைக்கும் பிரியமொழி.

† தன் அளப்பரிய மனமகிழ்ச்சியை இவ்வொரு மொழியினாலேயே வெளியிட்டு, மேல் நாவெழாது நிற்பது, டெஸ்டிமோனாவின் குணத்திற்கும்; பின் வருமாறு கடல்மடை திறந்தாற்போலத் தன் மகிழ்ச்சியை வெளியிட்டுப் புகழ்வது ஒதெல்லோவின் குணத்திற்கும் அற்புதமாய்ப் பொருந்தியிருக்கின்றன.

டெஸ்டி:—நம் காலஞ் செல்லச்செல்ல நமது காதல்களும் பாக்கியங்களும் வளர்ந்தேறுவதன்றி, மற்றொன்றும் நிகழாது தெய்வம் காக்கட்டும்.

ஒதேல்:—இனிய தேவதைகாள்! அவள் பிரார்த்தனையை ஆசீர்வதியுங்கள்! எனக்குள்ள மனமகிழ்ச்சியைப்பற்றிப் பேசித் திருப்தியாகாது; மட்டுக்கு மிஞ்சிய சந்தோஷத்தால் இங்கு தடையுண்டு நாவெழவில்லை. இதுவும், இதுவுமே [அவளை முத்தமிட்டுக்கொண்டு] நமக்குள் நேரிடும் பெரும் பிணக்குக்களாயிருக்கட்டும்.

இயா:—[தனக்குள்] ஓ! இப்பொழுது நன்றாய் இசைந்திருக்கிறீர்கள்; ஆயினும் நான் இயாகோவானால், இவ்விதமான சுரகானத்தைத் தரும் பிரடைகளை நெகிழ்த்திவிடுகிறேன்.

ஒதேல்:—வா, நாம் கோட்டைக்குச் செல்வோம்.—சிநேகிதர்காள், சமாசாரங் கேளுங்கள்! நம் யுத்தங்கள் முடிந்துவிட்டன, துருக்கர்கள் மூழ்கி மடிந்துபோனார்கள். இத்தீவிலுள்ள என் பழைய நேசர்களெல்லாம் சுகமாயிருக்கிறீர்களா?—தேனே! ஸைப்ரஸில் எல்லாரும் உன்மேற் பிரியமாயிருப்பார்கள்; நான் அவர்களிடத்தில் மிக்க அன்பைப் பெற்றிருக்கிறேன். ஓ என் கரும்பே! நான் ஏறுமாறாகப் பிதற்றி எனக்குரிய சௌக்கியங்களைப்பற்றியே எண்ணுகின்றேன்.—நல்ல இயாகோ, தயைசெய்து கடற்கரைக்குச்சென்று, என் சாமான்களையெல்லாமிறக்கு. கப்பல் தலைவனைக் கோட்டைக்கு அழைத்துவா; அவன் நல்ல சமர்த்தன்; அவன் யோக்கியதைக்கு ஏற்க அதிக மரியாதை செய்யல்வேண்டும்.—வா, டெஸ்டிமோனா, ஸைப்ரஸில் மறுபடியுங் கூடியது வெகு நன்றாயிற்று.

[ஒதெல்லோவும் டெஸ்டிமோனாவும்
பரிசனங்களும் போதல்.]

இயா:—என்னையுடனே துறைமுகத்தில் வந்து சந்தி. இங்குவா. காதல் வயப்பட்டபொழுது, மக்கட்பதடிகளும்† தங்களுக்கியல்பாயமை

---

இயாகோவையும் ராடரிகோவையும் தவிர்த்து, எல்லாரும் போய்விடுகிறார்கள்.

† பிறர் சொல்லை யெளிதில் நம்பும் ராடரிகோவின் மதியின்மையும் கீழ்மையும், தன் மதியூகமும் மேட்டிமையும் நிலைத்த வுறுதிகளாகக்கொண்டே அவனிடம் பேசித் தன் மனப்படியவனை யொழுகச்செய்து எத்தும் இயாகோ மானிட சுபாவத்தை நன்கறிந்த சமர்த்தனே.

யாத பெருந்தன்மையை வெளியிடுவோர்களென்று சொல்லுகிறபடி உனக்கும் தைரியமுண்டானால், நான் சொல்வதைக் கவனித்துக் கேள். இன்றிரவு உபசேனுபதி காவற்கூடத்திற் காவலிருப்பான் :—ஆனால் முதலில் உனக்கிது சொல்லவேண்டும்—டெஸ்டிமோனு அவன்மேற் கனமோகமாயிருக்கிறாள்.

ராட:—அவன் மேலா! என்ன, அது நடக்கக்கூடியதில்லையே.

இயா:—உன் ஆத்மா அறிவுறும்படி, விரலை யிப்படிவைத்துக் கொண்டு கேள்.* வீண் டம்பம் பேசி மனத்துக்குத் தோன்றிய பொய்களையெல்லாஞ் சொன்னதற்காக, அவள், முதலில் மோரியன்மேல் எவ்வளவு இயற்கை விரோதமான மோகங்கொண்டாளென்பதைக் கவனி: வீண் பிதற்றலுக்காக இன்னும் அவனை யிச்சித்துக்கொண்டேயிருப்பளா? விநயமுள்ள நீ, அப்படி நினையாதே. அவள் கண்களுக்குப் போஷணைவேண்டும்; பிசாசைப் பார்த்துக்கொண்டிருப்பதில் அவளுக்கென்ன ஆநந்தமுண்டாகக்கூடும்? இரத்தக்கொழுப்பு மட்டப்பட்டவுடன், மறுபடியும் காமவனலைக்கிளப்ப, சௌந்தரியம், ஏற்ற பிராயம், நயமான நடவடிக்கைகள், மற்ற நயங்கள் எல்லாமிருத்தல் வேண்டும்; மோரியனோ இவையெல்லாவற்றிலும் குறைந்தவன்: சரி, அவசியமாய் வேண்டிய இந்தச் சௌகரியங்களில்லாமையால் அவள் நொய்மையான மென்றன்மை கெட்டு நொந்து, மனந்திகட்டி, மோரியன்மேலுள்ள சுவை மாறி, அவனை முற்றும் வெறுக்கத்தொடங்குவாள்; அவள் அவ்வாறு மனந்திருகி நிச்சயமாக வேறொருவன்மேல் ஆசைகொள்வது தான் சுபாவ நிகழ்ச்சி. புத்தி யுத்தியநுபவத்துக்கு வெகு பொருத்தமாயும், தானாகவே விளங்குகின்றதுமான நான் கூறிய இவ்வளவும் சரியானால், பின்பு நீயே சொல்லப்பா, இந்தப்பாக்கியத்தையடைதற்குக் காஸியோவினும் வாய்ப்பாயுள்ளவர்கள் வேறு யாரிருக்கிறார்கள்? அந்தத் திருட்டுப் பயலோ, மகாவாசாலகன்: தன் மனத்துட் பொதிந்து மறைத்துவைத்திருக்கும் தன் காமதுரமான துராசையை நிறைவேற்றிக் கொள்ளும்பொருட்டே நல்ல யோக்கியனைப்போற் பாசாங்கு செய்ய வல்லவன்; அவனுக்கு வேறுவித மனச்சாக்ஷி கிடையாது; அவனைவிட

* உன்னிலும் மதிவல்லான்பேசும்பொழுது, கையால் வாயை மூடிக் கொண்டு, கவனித்துக்கேளென்பது கருத்து.

வேறொருவருமில்லை; வேறொருவருமில்லை: வெகு சூதுள்ள கள்ளப் பயல்; பிடிகொடுக்கமாட்டான்; நல்ல சமயங்களையறிந்துகொள்வான்; உண்மையாக நல்ல சௌகரியம் வாய்க்காவிடினுங்கூட, திருட்டுத்தனமாய்ச் சௌகரியங்களை உண்டுபண்ணிக்கொள்ள வல்லவன். தவிரவும், அந்தப்பயல் கண்ணுக்கழகனுகவும், இளம் ப்ராயத்தனுகவும், அநுபவமில்லாத பேதை மனங்கள் விரும்பிநோக்கும் நயங்களெல்லாம் பொருந்தியவனுகவுமிருக்கிறுன்; சகல விதத்திலும் பொருந்திய ஒரு பாழ்ந் திருட்டுப்பயல்; அவளும் அவனைக் கண்டெடுத்துக் கொண்டாய் விட்டது.

ராட:—அவள் விஷயத்தில் நானப்படி நம்பமாட்டேன். அவள் உத்தமமான சத்துவகுணங்கள் நிறைந்தவள்.*

இயா:—சத்துவத்தெருப்புழுதி! அவள் குடிக்கும் மது திராக்ஷ ரசந்தானே: அவளிடம் சத்துவகுணமிருந்தால் ஒருபொழுதும் மோரியனைக் காதலித்திருக்கமாட்டாள்: சத்துவக்கொழுக்கட்டை! அவன் அகங்கையை அவள் நெருடுவதை நீ பார்க்கவில்லையா? அதை நீ கவனிக்கவில்லையா?

ராட:—ஆம், பார்த்தேன்; அது சும்மா, உபசாரமே.

இயா:—விடத்தனமென்று வலக்கைபோடுகிறேன்; கெட்ட எண்ணங்களின் சரித்திரத்துக்கு அது ஒரு அட்டவணையும், மறைபொருள் கொண்ட முகவுரையுமே. அவர்கள் மூச்சுக்கள் ஒன்றையொன்று தழுவிக்கொண்டன, அவ்வளவு சமீபமாக அவர்கள் அதரங்கள் நெருங்கின. எண்ணங்களெல்லாம் மோசம்! ராடரிகோ! இந்த ஐக்கிய பத்தியங்கள் வழிகாட்ட, உடனே தொடர்ந்து வந்துவிடும்—சீ! ஆனல், அப்பா, என் சொற்படி நட: நானுன்னை வெளியிலிருந்து அழைத்து வந்திருக்கிறேன். நீ யின்றிரவு காவலிரு; அதற்குவேண்டிய கட்டளை நானுனக்குக் கொடுக்கிறேன்; காஸியோவுக்கு உன்னைத்தெரியாது:—நான் உன் சமீபத்திலேயே இருக்கிறேன்: அதிகமாய் உரத்துப் பேசி

* பிறனைப்பற்றிப் பேசும்போது தானிவ்வாறு நம்பியும், தான், அவளைப் பணத்தினுலும் நகைகளினுலும் அடைந்துவிடலாமென்று நம்பி, இலவு காத்த கிளியொத்த ராடரிகோ இவன். என்னே மனிதர் மடமை!

யாவது, அல்லது அவன் அதிகாரமுறையைப் பழித்தாவது, அல்லது சமயத்துக்குத்தக்கபடி வேறு ஏதேனும் செய்தாவது, காஸியோவைக் கோபமூட்டு.

ராட :—அப்புறம்?

இயா :—அப்பா, அவன் மூர்க்கன், வெகு முற்கோபி, ஒரு வேளை உன்னையடிப்பான்: அப்படியவன் செய்யும்படி கோபமூட்டு; ஏனெனின், அதைக்கொண்டே இந்த ஸைப்ரஸ்வாசிகள் மீறிக் கலகஞ்செய்யும்படி பண்ணிவிடுகிறேன்; ஆகவே, உண்மையாக அவர்கள் மனஸ்தாபந்தீரக் காஸியோவை வேலையைவிட்டு நீக்கவேண்டியதாய்விடும். பின்பு நான் செய்யக்கூடிய உதவிகளினால் உன் உத்தேசங்களை நீ விரைவில் நிறைவேற்றிக்கொள்ளலாம். நாம் சித்தியடைய இப்பொழுது பெருந்தடையாயிருப்பது, இவ்வாறு வெகு சௌகரியமாக நீங்கிவிடும்.

ராட :—ஏதாயினும் பிரயோசனமுண்டானால் நானிவ்வண்ணஞ் செய்கிறேன்.

இயா : அதற்கு நான் உத்தரவாதி. சற்றுப் பொறுத்துவந்து கோட்டையில் என்னைச்சந்தி: நான் போய் அவன்* சாமான்களைக் கரைக்குக் கொண்டுவரவேண்டும். போய்வா.

ராட :—போய்வருகிறேன். [போதல்.]

இயா :—[தனிமொழி] காஸியோவுக்கு அவள்மேல் மோகமுண்டென்று நான் நன்று நம்புகிறேன்; அவள் அவனை யிச்சிப்பதும், பொருத்தமாயும் மிக நம்பத்தக்கதாயுமேயிருக்கிறது. மோரியன்—எனக்கு அவனை நினைக்கச் சிறிதும் பொறுக்கமுடியவில்லையாயினும்—திடசித்தமுள்ளவன், வாஞ்சையுள்ளவன், உத்தமசீலன்; அவன் டெஸ்டிமோனாவுக்கு மிகவுரிமையுள்ள நாயகனாகவே நடந்துகொள்வான். சரி, எனக்கும் அவள்மேல் மோகந்தான்; அடங்காக் காமவெறிகொள்

பெயர், அந்தஸ்து குறிப்பிடாமல் ஒதெல்லோவைப்பற்றி யிவ்வாறு அசட்டையாய்ப் பேசுவதும்கூடத் தனக்கு அவன்மேற் பகையென்பதை ராடரிகோ நன்று நம்பும்படியே.

ளாவிடினும்—ஒரு வேளை யவ்விதப் பெரும்பாவத்துக்கு* உள்ளாயிருக்கின்றேனோவென்று சந்தேகமுமுண்டு—நான் மோரியனைச் சந்தேகிக்கிறபடியால், பழிவாங்கவேண்டுமென்ற எண்ணம் தூண்டுகின்றது: அதை நினைக்கும்பொழுது, பாஷாணமுண்டாற்போல் என் வயிறு பற்றியெரிகின்றது; பெண்சாதிக்குப் பெண்சாதி கைப்பற்றியவனிடம் பழிவாங்கும்வரையும் என் மனம் திருப்தியடையாது, நானும் அதைத் திருப்தியடையவிடேன்; அல்லது, அது முடியாவிடினும், ஒருவித ஆலோசனையினாலும் நிவிர்த்தியாகாத சந்தேகத்தை மோரியனுக்கு (அவன் மனைவி விஷயத்தில்) உண்டாக்கிவிட்டால்தான் எனக்குத் திருப்தியாகும். அதைச்செய்ய,—(டெஸ்டிமோனாவை விரும்பும்) வேட்டையிலுள்ள வேகத்தையடக்கிவிட்டுப்பிடிக்கும் பதராகிய இந்த வெனிஸ் நாய் (ராடரிகோ), நான் (காஸியோவுடன் சண்டைசெய்ய) ஏவியபடி கௌவினால், நம்முடைய மிக்கேல் காஸியோவைப் பின்பு இஷ்டப்படியாட்டிவைக்கலாம்; மோரியனிடத்தில் அவனைப்பற்றிப் பச்சைபச்சையாய்க் கோட் சொல்லவேண்டும்,—ஏனெனின், காஸியோவும் என் படுக்கையுடையைத் தரித்துக்கொள்ளுகிறானென்று சந்தேகிக்கிறேன்; ஆகவே, தன்னையொரு முழுக் கழுதையாக்கித் தன் மனவமைதியைப் பைத்தியம்பிடிக்கும் அளவு குலைத்ததற்காக, மோரியன் எனக்கு வந்தனமளித்து, பக்ஷம் பாராட்டி, எனக்கு வெகுமதியுங் கொடுக்கும்படி செய்வேன். எல்லாம் இங்கே (மூளையில்) யிருக்கிறது; ஆனால் சிறிது குழப்பமாயிருக்கிறது: வஞ்சனையின் சூதுகள் நடத்தும்பொழுதுதான் வெளிப்படையாக முற்றிலும் தெரியும்.†

[போதல்.]

---

* பிறன்மனைவிழைதல் பெரும்பாவம் என்பதன்று இவன் கருத்து; காதலின்பொருட்டு மதிமயங்கித் தன்வயமழிதல் பெரும்பாவம் என்பதே யிவன் கொண்டு கூறியது.

† தன் தீக்குணத்தைச் சிறிதும் நாணமின்றி யொப்புக்கொண்டு, தன்திறத்தை மெய்ச்சி மகிழ்தல், நல்லொழுக்கத்தினும் புத்திக் கூர்மையே சிறந்ததெனக் கொண்டவன் இயற்கையாதலின், இயாகோ, தன்னிடம் நற்குணமின்மையுமன்றி, பிறர் நற்குணத்தில் தான் நம்பிக்கைகொள்ளாது, ஏதோ விருப்பதாகத்தான் ஒப்புக்கொள்ளவேண்டி வருவதையும் அழித்துவிட முயல்பவனென்று தெரிகின்றது. புத்திவலியுடன் ஒப்பிடுங்கால், அன்புடைமையும், சீலமும், ஏனைய நல்லொழுக்கங்களும் அறத்தாழ்ந்தனவென்று மதிப்பவன், தனக்கு ஒரு தீங்குமே செய்யாத காஸியோவை, உத்தியோக அழுக்காறு நிமித்தமும், தன் மனச்சாக்ஷியைத் திருத்திசெய்யுமாறு தானாகவேற்படுத்திக்கொள்ளும் சந்தேகத்தினிமித்தமும் கெடுத்தழிக்கச் சூழ்கின்றான். கபடமற்ற சீலர்கள் இத்தனை பெயரைத் தன் மதிவலியால் நசுக்கியழிக்கும் கர்வமும் களிப்புமே அவனைத் தூண்டிநிற்கின்றன.

## இரண்டாங்களம்:—ஓர் வீதி.

(காலம்: மாலை.)

[பறையறைவோன் ஒருவன் ஓரறிக்கைப்பத்திரத்துடன் பிரவேசித்தல்; ஜனங்கள் பின்றொடர்ந்து வருதல்.

**பறையறைவோன்:**—நம்முடைய அதிகௌரவ பராக்ரம சேனாபதியாகிய ஒதெல்லோ களிகூர்ந்து பிரசித்தப்படுத்துவதென்னவென்றால், துருக்கர் கடற்படை முற்றும் அழிந்துபோனதாக இப்பொழுது சமாசாரங் கிடைத்திருக்கிறபடியால், ஒவ்வொருவரும் விழாவணி கொள்ளல்வேண்டும்; சிலர் கூத்தாடியும், சிலர் வாணவேடிக்கைகள் செய்தும், ஒவ்வொருவரும் தம்மிஷ்டப்படி திருவிழாக் கொண்டாடிக் களித்தல்வேண்டும். ஏனெனின், இந்தச் சுபசமாசாரம் கிடைத்திருப்பதுந்தவிர, இன்று அவர் விவாகபூர்த்தி மஹோத்ஸவதினம்.* இவ்வாறு பறையறையும்படியவர் ஆஞ்ஞாபித்தார். கோட்டையில் போஜனசாலைகளெல்லாம் திறந்துவைக்கப்பட்டிருக்கின்றன. இப்பொழுதைந்து மணி முதல் பதினொரு மணியடிக்கும் வரையும், யாவரும் தடையின்றி விருந்தாடிக் களிக்கலாம். ஸைப்ரஸ் தீவையும் நமது கௌரவ சேனாபதி ஒதெல்லோவையும் கடவுள் ஆசீர்வதிப்பாராக.

[யாவரும் போதல்.

## மூன்றாங்களம்: அரண்மனையிலோர் கூடம்.

(காலம்: முன்னிரவு.)

[ஒதெல்லோவும் டெஸ்டிமோனாவும் காஸியோவும் ஏவலாளரும் பிரவேசித்தல்.]

* முதல் அங்கம் ஞாபகத்திலிருந்தால், இரவில் முடிந்த கல்யாணம் கர்ப்பாதானமாகி நிறைவேறாது தடைப்பட்டதும், மறுபடியும், இன்றே வதூவரர் கூடியதும் விளங்கும்.

**ஒதெல்லோ** :—நல்ல மிக்கேல்,* இன்றிராக்காவலை நீயே மேற்பார். மட்டுக்குமிஞ்சாதபடி கௌரவமான மிதபோகமே நாம் நுகரத் தகும். *

**காஸி** :—செய்யவேண்டியதெல்லாம் இயாகோவுக்குச் சொல்லி யிருக்கிறேன். ஆயினுங்கூட, நானே நேரில் மேற்பார்க்கிறேன்.

**ஒதெல்** :— இயாகோ நல்ல யோக்கியன். மிக்கேல்,* இவ்விரவு னக்கு நன்மையாகுக: நாளையெழுந்தவுடன் என்னைவந்துபார். [டெஸ்டிமோனாவை நோக்கி] பிரியசகி, வா, யாவர்க்கும் நல்லிரவாகட்டும்.

[ஒதெல்லோவும் டெஸ்டிமோனாவும்
ஏவலாளரும் போதல்.]

[இயாகோ பிரவேசித்தல்.]

**காஸி** :—இயாகோ, உன் வரவை நன்கு ஏற்கின்றேன்; நாம் காவற்கூடத்துக்குப் போகவேண்டும்.

**இயா** :—இப்பொழுதே யென்ன உபசேனாபதி; இன்னும் பத்து மணிகூட ஆகவில்லையே. தமது டெஸ்டிமோனாவின்மேலுள்ள ஆசையால் நம் சேனாபதி நம்மை யிவ்வளவு சீக்கிரமனுப்பிவிட்டார்; அதனால் அவர்மேற் குற்றங்கூறலாகாது.

* கிறிஸ்தவர்களுக்குள் ஒவ்வொருவருக்கும் இரண்டுபெயருக்குக் குறையாமலிருக்கும்: (1) ஞானஸ்நானகாலத்திற் சூட்டப்பட்ட சொந்தப் பெயர், அல்லது பெயர்கள் (8-ம் பக்கத்தைப் பார்க்க). (2) குடும்பப்பெயர். உரிய நண்பரும் உறவினருமே சொந்தப்பெயராலழைக்குஞ் சுதந்தரமுள்ளவர்; ஏனையர் யாவரும் பட்டப் பெயராலேயே அழைப்பார்கள். இப்பொழுது காஸியோவை 'மிக்கேல்' என்ற சொந்தப்பெயரால் ஒதெல்லோ அழைப்பது, அவர்களுக்குள் உள்ள அந்தரங்க நட்பையும் உரிமையையும், அவன்மாட்டு மோரியன் வைத்திருக்கும் நம்பிக்கையையும் நன்கு தெரிக்கின்றது. அன்றியும், அமிதமாய் உண்டாடிக்களியாது, காவலைத்தானே நேரிற்பார்க்கும்படி உபசேனாபதி பெற்றவாணை, அவன் பின்பு தவறியபொழுது, சேனாபதி கொண்ட கடுங்கோபம் தக்கதேயென்று விளக்குகின்றது. சாதாரணமாயுள்ள அற்ப வார்த்தைகளிலும் இக்கவி சமத்தும் கருத்துப் பெரும் வியப்பே.

**காஸி**:—* அவள் வெகு சிறந்த சீமாட்டி.

**இயா**:—அவள் கண்களின் அழகை யென்ன சொல்ல! (மன்மத) கலகத்துக்கழைப்பதுபோல் தோன்றுகின்றன!

**காஸி**:—வசிகரமான நோக்கமே; ஆயினும் தக்க நாணம் பொருந்தியிருக்கின்றது.

**இயா**:—வாய் திறந்துவிட்டாலோ, அவள் குரல் மன்மதனை யழைக்கும் முரசுபோலிருக்கின்றதன்றோ?

**காஸி**:—மெய்யாகவே, அவள் சர்வபரிபூரணியே.

**இயா**:—சரி, அவர்கள் சேர்க்கை மங்களமாகட்டும்! * வாரும், உபசேனாபதி, என்னிடம் ஒரு ஜாடி திராக்ஷமது விருக்கிறது; கரிய ஒதெல்லோவின் க்ஷேமத்தின்பொருட்டுக் குடிக்க விரும்பும் † ஸைப்ரஸ் விடலைகளிருவர் இதோ வெளியே யிருக்கிறார்கள்.

**காஸி**:—இன்றிரவு வேண்டாம், நல்ல இயாகோ; குடித்தால் வெகு சீக்கிரத்தில் மூளை கலங்கிவிடும் துர்ப்பாக்கியன் நான்: குடிப்பதாலன்றி, மரியாதையையும் பக்ஷத்தையுங் காட்ட வேறொரு வழக்கம் ஏற்படுமாயின் நன்றாயிருக்கும்.

**இயா**:—ஓ! அவர்கள் நம் சிநேகிதர்கள்; ஒரேயொரு கிண்ணந்தான்; உமக்காக நான் குடிக்கிறேன்.

* இச்சம்பாஷணையை நன்கு கவனிக்க; இது இவ்விருவர் குணங்களையும், டெஸ்டிமோனாவைப்பற்றி யிவர்கள் கொண்டிருக்கும் அபிப்பிராயங்களையும் வெகு நுண்மையாய் விளக்குகின்றது.

† கலியாணம் முதலிய மங்கள தினங்களிலும், எவர்க்கேனும் மரியாதையாகச்செய்யும் விருந்துகளிலும், பொதுவிழாக்கள் கொண்டாடுகையிலும், அவ்வவ்வமயங்களுக்குரிய முக்கிய ஸ்திரீ புருஷர் க்ஷேமத்தைப் பிரார்த்தித்து விருந்தாடுவாரனைவரும் ஒருமித்து மதுபானஞ்செய்தல் ஐரோப்பிய வழக்கம். சடங்குக்குரியாரையும், அரச வம்சத்தையுங்குறித்துக் குடித்தானபின்பு, விருந்துக்கு வந்திருப்பவருள் முக்கியர்களையும், மனத்துக்குத் தோன்றிய ஏனைய சிலரையும் குறித்துக் குடிப்பதும் வழக்கமாதலின், இவ்வித விருந்துகளில் ஒவ்வொருவர் குடியாண்மையும் விளங்கிக், குடித்தனம் முதிர்ந்து வெறித்தனந் தோன்றிவிடலும் சாதாரணமே.

**காஸி**:—இன்றிரவு நான் ஒரேயொரு கிண்ணந்தான் குடித்திருக்கிறேன்; அதுவுங்கூடப் பிறரறியாமல் தண்ணீர்விட்டுப் பெருக்கியது; அப்படியிருந்தும், இங்கேயது என்ன புரட்டுப்புரட்டுகிறது பார்: இவ்விஷயத்தில் பலக்குறைவு என் துர்ப்பாக்கியமே; ஆகவே என் பலவீனத்தை யின்னுமதிகமாகச் சிரமப்படுத்தலாகாது.

**இயா**:—என்னப்பா! இது விருந்தாடிக் களிக்கும் இரவில்லையா? அந்த விடலைகளும் அதிக ஆவலாயிருக்கிறார்கள்.

**காஸி**:—அவர்களெங்கே?

**இயா**:—இதோ வாசலிலிருக்கிறார்கள்; தயைசெய்து உள்ளே கூப்பிடும்.

**காஸி**:—ஆகட்டும்; ஆனால் அது எனக்குப் பிடிக்கவில்லை.

[வெளிப் போதல்.]

**இயா**:—[தனி மொழி.] இன்றிரவு இதற்குமுன் குடித்திருப்பது தவிர, இன்னும் ஒரே கிண்ணம் குடிக்கும்படி செய்துவிட்டேனென்றால், அவன் ஒரு யௌவன சீமாட்டியின் செல்வமாய் வளர்க்கப்பட்ட நாயைப்போல், எதற்கும் கோபமுறவும் சண்டைசெய்யவும் தொடங்கிவிடுவான். இப்பொழுது காமவிரக நோயால் கால் தலை தெரியாமல் திரியும் மூடனாகிய ராடரிகோ, டெஸ்டிமோனாவின் க்ஷேமத்தைப் பிரார்த்தித்து இன்றிரவு குடங்குடமாய்க் குடித்திருக்கிறான்; அவனும் காவலிருக்கப்போகிறான்; ஸைப்ரஸ் இளைஞர்களில் மூவர்,—தற்செருக்கு மதம்பிடித்த அகந்தையாளர், தங்கள் மானத்தையொருவரும் எதிர்த்து அணுகாது ஜாக்கிரதையாய்க் காப்பவர், போர்ப்பிரியமுள்ள இத்தீவில் நீரும் நெருப்பும்போற் படபடப்புள்ளவர்,—அவர்களையும் நிரம்பக் குடிக்கச்செய்து கலக்கிவைத்திருக்கின்றேன்; அவர்களும் காவலிருக்கப்போகிறார்கள். இப்பொழுது இந்தக் குடிகார மந்தைக்குள், இத்தீவிலுள்ளார் கோபமுறும்படியான ஏதாவதொன்று செய்யும்படி நம்முடைய காஸியோவை விடப்போகிறேன்:—இதோ அவர்கள் வருகிறார்கள். பின் விளைவு என் சூழ்ச்சி சரியானதென்று காட்டிவிட்டால், காற்றிலும் நீரோட்டத்திலும் என் ஓடம் தடையின்றிச்செல்லும்.

---

காஸியோ, எடுப்பார் கைப்பிள்ளை; திடசித்தமில்லாதவன்

[காஸியோ திரும்பிப் பிரவேசித்தல், அவனுடன் மண்டாநோவும் கிரகஸ்தரும் வருதல். வேலைக்காரன் திராக்ஷமதுவுடன் பின் வருதல்.]

**காஸி** :—சத்தியமாகவே, அதற்குள்ளேயே என்னை நன்றாகுடிக்கும்படி யிவர்கள் செய்துவிட்டார்கள்.

**மண்டா** :—உண்மையில், மிகச்சிறிதே: நான் யுத்தவீரனென்பது மெய்யெனில், காற்படிக்குமேலிராது.

**இயா** :—ஓ! சிறிது திராக்ஷமது!

[பாடுகிறான்.]

குவளையை நான் கொட்டுவேன், கொட்டுவேன்;
குவளையை நான் கொட்டுவேன்:
யுத்தவீரனும் ஓர் நரன் தானே:
உலகவாழ்க்கையும், என்ன, ஓர் சாணே;
பின்னை யென்ன, அவன் குடிக்கட்டும்.

அடேபயல்களா, சிறிது திராக்ஷமது!

**காஸி** :—கடவுளாணை, ஒரு 'பேஷான' பாட்டு!

**இயா** :—அது நான் இங்கிலாந்தில் கற்றுக்கொண்டேன்; அங்கே தான் குடிக்கிறதில் அதிவல்லவர்களிருக்கிறார்கள்: உங்க டேனியர்,* உங்க ஜெர்மானியர், உங்க தொந்திவயிற்று ஹாலண்டார்,* இவர்களெல்லாம்—, குடியுங்களடோ—அங்கிலேயருக்கு உறையிடவுங் காணமாட்டார்கள்.

**காஸி**:-உங்க இங்கிலீஷ்காரன் குடிப்பதில் அவ்வளவு சமர்த்தனா?

**இயா** :—என்னபோம், உங்க டேனியன் பிணம்போல் விழும்வரையும் அவன் வெகு சுளுவாய்க்குடிக்கிறான்; உங்க ஆல்மேனியனைக் குடியில் தூக்கி யெறிந்து ஜெயங்கொள்வதில், அவனுக்கு வியர்வையுண்டாகிறதில்லை; ஒரே குவளையில் உங்க ஹாலண்டானை எக்களித்து வாந்தியெடுக்கும்படி செய்துவிடுகிறான்.

* ஐரோப்பாவில் பலதேயத்தார்; இவர்களுக்குள் ஆங்கிலேயர் அதிகக் குடிகாரர் என்று பெயர்போலும்.

**காஸி** :—நம் சேனுபதியின் க்ஷேமத்துக்காக !*

**மண்டா** :—உபசேனுபதி! எனக்கு அது பிரியமே: (**உமக்குப் பின்வாங்காது**) ஏற்றபடி குடிப்பேன்.

**இயா** :—ஓ! இனிய இங்கிலாந்தே! (**பாடுகிறன்.**)

*ஸ்டீபன் மஹாராஜன்† கனவானே;—அவன்—காலுறை விலை ரூபா இரண்டரைதானே;*

*அதிலுமோர் கால் ரூபா அதிகம்—என்றே—தைத்திட்டவனைத் தப்பிலியென்று வைதானே;*

*புகழ்பெற்றவன் அம்மன்னவன்தானே—நீயோ—இகழும் நிலையி லிருப்பவன்தானே;*

*கர்வமே நாட்டைக் கெடுக்கும்—அப்பால்—பழைய உடையைத் தரித்துக்கொள் போடா.*

*ஓ! கொஞ்சம் திராக்ஷமது!*

**காஸி**:—என்ன, இது முன்னதிலும் வெகு நேர்த்தியான பாட்டாயிருக்கிறதே.

**இயா** :—திரும்பவும் சொல்கிறேன், கேட்கிறீரா ?

**காஸி** :—வேண்டாம்; ஏனெனில்,‡ அந்தமாதிரியான சங்கதிகள் செய்பவன், தன் அந்தஸ்துக்குத்தக்கவனில்லையென்பது என் கொள்கை. சரி,—எல்லாருக்கும்மேல் ஒரு கடவுளிருக்கிறார்; அன்றியும், சில ஆத்மாக்கள் மோக்ஷமடையும், சில ஆத்மாக்கள் மோக்ஷமடைய மாட்டா.

**இயா** :—நல்ல உபசேனுபதி, அது வாஸ்தவந்தான்.

**காஸி** :—என் பக்ஷத்துக்கு,-சேனுபதிக்காவது வேறு எந்தப்பிரபுவுக்காவது அவமரியாதையாக நான் சொல்லவரவில்லை-நான் மோக்ஷமடைவேனென்று நம்புகிறேன்.

**இயா**:—நானும் அப்படியே, உபசேனுபதி.

---

* கையில் கிண்ணியை யெடுத்துக்கொண்டு தன்னுடன் மற்றவரைக் குடிக்கவழைக்கிறன்.

† அங்கிலேய அரசரில் ஒருவன்.

‡ குடித்தனமிஞ்சி வெறித்தனம்வந்துவிட்டது.

**காஸி:**—ஆம், ஆனல், எனக்குமுன் நீ (மோக்ஷமடைய) முடியாதென்று ஒப்புக்கொள்ளவேண்டும்; துவஜதாரிக்கு முந்தி உபசேனபதி ரக்ஷிக்கப்படுவான். இந்தப் பேச்செல்லாம் போதும்; நாம் நம்முடைய வேலையிற் புகுவோம்.*—நம் பாவங்கள் மன்னிக்கப்படுவனவாக;* தனவான்களே, நான் குடிவெறியாயிருக்கிறேனென்று எண்ணுதேயுங்கள்; இவன்தான் என் துவஜதாரி,—இது என் வலதுகை, இது என் இடதுகை;—எனக்கிப்பொழுது குடிவெறியில்லை; நான் நன்றாய் நிற்கவுங்கூடும்; நன்றாய்ப் பேசவுங்கூடும்.

**எல்லாரும்:**—வெகு நன்றாகவே.

**காஸி:** பின்னையென்ன மிகவும் சரி; பின்னை, நீங்கள் நான் குடிவெறியிலிருக்கிறேனென்று எண்ணக்கூடாது.

[வெளிப் போதல்.]

**மண்டா:**—எல்லாரும் தட்டுமேட்டுக்குப் போவோம் வாருங்கள், காவல் நியமிப்போம்.

**இயா:**—இதோ முன்னல் போனனே, இந்தப் பயலைப் பாருங்கள்: ஸீஸர்† பக்கத்தில் நின்று (அவனுக்கிணையாக) அதிகாரஞ்செய்ய வல்ல யுத்தவீரன் அவன்; அவன் துர்க்குணத்தையும் பாருங்கள், அவன் நற்குணத்துக்கு நேர் சமமாய், அது எவ்வளவு பெரிதோ அவ்வளவு பெரிதாயிருக்கின்றது; அது அவன்விஷயத்தில் பரிதபிக்கத் தக்கதே. ஒதெல்லோ அவனிடத்தில் வைத்திருக்கும் நம்பிக்கையினிமித்தம், அவன் துர்க்குணம் துலங்கும் யாதானும் ஒரு சந்தர்ப்பத்தில், இந்தத் தீவு கலங்கிவிடுமென்று அஞ்சுகிறேன்.

---

என்று சொல்லி யெழுகிறான்; உடனே வெறிமயக்கால் கீழே விழுந்து விடுகிறான்; முழங்கால்கள் தறையில் தாக்குண்டு அதனல் உண்டான வலியால், ஒரு நிமிஷத்துக்குப் புத்திவருகிறது; தான் முழங்காற்படிந்திருப்பதையறிந்து, பிறர் வெறியென்றுகொண்டு நகையாவண்ணம், பிரார்த்தனை செய்ய முழந்தாள் படிந்தான்போல நடித்து, ஒரு சிறு பிரார்த்தனை மொழிகூறி யெழுகிறான்; அதற்குள் மறுபடியும் களிமயக்கு மேற்பட்டு விடுகிறது.

† ஜூலியஸ் ஸீஸர் என்பவர் இற்றைக்கு 2,000 வருஷங்களுக்குமுன்னிருந்து, மஹா கியாதிபெற்று ரோமராச்சியத்தையாண்ட யுத்தவீரர். அவரைத் தலைவராகக்கொண்டு, ஷேக்ஸ்பியர் ஒரு சிரேஷ்டமான துன்பியல் நாடகம் இயற்றியிருக்கிறார். தன் காரியத்துக்கு வேண்டியபடி காஸியோவை இகழ்ந்தும் புகழ்ந்தும் இயாகோ பேசுவது கவனிக்கத்தக்கது

மண்டா :—ஆனாலவன் இவ்விதம் அடிக்கடியிருக்கிறதுண்டா?

இயா :—எப்பொழுதுமே, அவன் நித்திரைபோகுமுன் இது நடந்துதீரும். குடியினால் அவன் தொட்டில் ஆட்டப்படாவிட்டால், இராப் பகல் விழித்துக்கொண்டேயிருப்பான்.

மண்டா :—ஆனால் இதைச் சேனாபதிக்கு ஞாபகப்படுத்துவது நலமாயிருக்கும். ஒருவேளையவருக்கிது தெரியாமலிருக்கும்; அல்லது அவர் தம் நற்குணத்தால் காஸியோவினிடத்திற் காணப்படும் நன்மையையே மதித்து, அவன் குற்றங்களைப் பாராமலிருக்கலாம்: இது உண்மையில்லையா?

[ராடரிகோ பிரவேசித்தல்.]

இயா :—[அவனிடத்தில் தனிமையாக] என்ன இப்பொழுது, ராடரிகோ! தயைசெய்து உபசேனாபதியைப் பின்பற்று; போ.

[ராடரிகோ வெளிப்போதல்.]

மண்டா :—இவ்வாறு வேரூன்றிய துர்க்குணத்தையுடைய ஒருவனை, அதிசீலராகிய மோரியர், தமக்கு நேராக அடுத்த ஸ்தானத்தில் வைத்துப்பார்ப்பது மிகவும் விசனப்படத்தக்கதே. மோரியரிடத்தில் இதைச்சொல்வதே யோக்கியம்.

இயா :—இவ்வழகிய தீவு முழுமையுங் கிடைக்கிறதாயிருப்பினும் நான் சொல்லமாட்டேன்; காஸியோவின்மேல் எனக்குப் பக்ஷமதிகம்; என்னசெய்தாயினும் அவனிடமுள்ள இத்தீக்குணத்தை நிவர்த்திக்கவே பார்ப்பேன்—ஆனால், உற்றுக்கேளுங்கள்! என்ன சத்தம் அது? [உட்புறமாகக் கூக்குரல்]:—ஐயோ! ஐயோ!

[ராடரிகோவைத் துரத்திக்கொண்டு காஸியோ திரும்பிப் பிரவேசித்தல்.]

காஸி :—அயோக்கியப்பயலே! போக்கிலிப்பயலே!

மண்டா :—என்ன சங்கதி, உபசேனாபதி?

காஸி :—ஒரு திருட்டுப்பயல்!—என் கடமையெனக்குக் கற்பிக்கிறதா! அந்தத் திருட்டுப்பயல் உடம்பு ஒரு மலார்க் கூடைபோலாகும்வரையும் அடிக்கிறேன்.

ராட:—அடிப்பையா என்னை!

காஸி:—பிதற்றுகிருயா, அயோக்கியப்பயலே?

[ராடரிகோவை அடிக்கிருன்.]

மண்டா:—[அவனைத்தடுத்து] வேண்டாம், நல்ல உபசேனுபதி; ஐயா, தயைசெய்யும், அடியாதேயும்.

காஸி:—விடும், ஐயா, என்னை; இல்லாவிட்டால் உம் 'தவடையைப்' பேர்த்துவிடுவேன்.

மண்டா:—போதும், போதும், நீர் குடிவெறியாயிருக்கிறீர்.

காஸி:—குடிவெறியா!

[அவர்கள் சண்டையிடுகிருர்கள்.]

இயா:—[ராடரிகோவிடத்தில் தனிமையாக] ஓடிப்போ என்கிறேனே, வெளியேபோய்க் கலகமென்று கூக்குரலிடு.

[ராடரிகோ வெளிப்போதல்.]

வேண்டாம், நல்ல உபசேனுபதி,—ஐயோ! கனவான்களே;—விலக்குங்கள், ஓ!—உபசேனுபதி,—ஐயா,—மண்டானே,—ஐயா,—எல்லாரும் விலக்குங்கள்;—இங்கே காவல் வெகு நன்ருயிருக்கிறது!

[மணி கிலுக்கப்படுகிறது.]

யார் மணியைக் கிலுக்குகிருர்கள்? ஐயோ நாசமே! பட்டணங் கிளம்பிவிடுமே: உபசேனுபதி, கடவுள்மேலாணை, நிறுத்தும்; நீர் தீராத அவமானத்தையடைவீர்.

[ஒதெல்லோவும் ஏவலரும் திரும்பவும் பிரவேசித்தல்.]

ஒதெல்:—என்ன விசேஷமிங்கே?

மண்டா:—சத்தியமாகவே, இரத்தம் பெருகிக்கொண்டேயிருக்கிறது; நான் பிழைக்கமாட்டேன்.

ஒதெல்:—உங்களுக்கு உயிரின்மேல் ஆசையிருந்தால், நிறுத்துங்கள்.

இயா:—நிறுத்தும், நிறுத்தும், உபசேனுபதி!—ஐயா, மண்டானே—கனவான்களே;—இன்ன இடமிது, உங்கள் கடமையிது என்ப

தை முழுதும் மறந்துவிட்டீர்களா? நிறுத்துங்கள்; சேனபதி உங்களிடத்தில் பேசுகிறாரே: மானத்தை நோக்கி நிறுத்துங்கள்.

ஒதேல்:—என்ன, என்ன இது! எதிலிருந்து இது உண்டாயிற்று? துருக்கர் நமக்குச் செய்யாது கடவுள் தடுத்ததை நாமே யொருவருக்கொருவர் செய்ய, நாம் துருக்கராகிவிட்டோமா? கிறிஸ்தவர்களுக்குரிய மானத்தை நினைத்து, இந்தக்காட்டுத்தனமான 'சச்சரவை' நிறுத்துங்கள்: தன் கோபத்தையே பாராட்டி யினிவெட்டக் கத்தியை ஓங்குபவன், தன் உயிரை அற்பமாக வெண்ணினவனாவான்; அசைந்தால் கொன்றுவிடுவேன்.—அந்தப் பயங்கரமான மணிமுழக்கத்தை நிறுத்து! இந்தத்தீவை யொழுங்கு பிறழும்படி, அது பயமுறுத்துகின்றது.—ஐயன்மீர்! என்ன விசேஷம்? விசனத்தால் இறந்தவனைப் போலக்காணும் நாணயமுள்ள இயாகோ! சொல், யார் இதைத் தொடங்கினார்கள்? உன் விசுவாசத்தின்மேலாணை.

இயா:—எனக்குத் தெரியாது. சற்றுமுன், இப்பொழுதுதான் காவலிடத்தில் சிநேகமாயிருந்தார்கள்; படுக்கைக்குப் போகும் புதுப் பெண்ணும் மாப்பிள்ளையும்போல் பிரியமாயிருந்தார்கள்; பின்பு, உடனே, ஏதோ கிரகசாரத்தால் மதிமயங்கினாற்போல, வாளையுருவுகிறதும் கொடும்பகையோடு ஒருவர் நெஞ்சில் ஒருவர் குத்துகிறதுமாய் விட்டது. இந்த அசங்கியமான 'சச்சரவுக்கு' எது ஆரம்பமென்று என்னாற் சொல்லமுடியவில்லை; இதிற் கலக்கும்படி யென்னை யிங்கு கொண்டுவந்துவிட்ட என் கால்களைக், கீர்த்திபெற்ற யுத்தகளத்தில் இழந்திருந்தேனில்லையே என்று வருந்துகிறேன்.

ஒதேல்:—மிக்கேல்!* நீ யிவ்வாறு தன்னைமறந்து நடந்ததென்ன?

காஸி:—தயைசெய்து 'மன்னியுங்கள்,' என்னாற் பேசமுடியவில்லை.

ஒதேல்:—மண்டானோ! நீர் நல்லயோக்கியரும் மரியாதைக்காரருமாயிற்றே; உம் இளம்பிராயத்தின் பெருந்தன்மையையும் சாந்தத்தையும் உலகம் அறிந்து, மஹாமேதாவிகளும் உம் பெயரைச் சிறந்ததாக மதிக்கின்றனர்; அங்ஙனமாக, உம் கீர்த்தியை நீர் இவ்வாறு

* இதுதான் கடைசி முறை, காஸியோவை அவன் கிறிஸ்தவப் பெயரால் ஒதெல்லோ அழைப்பது.

சீர்குலைத்து, நீரடைந்திருக்கும் சிறந்த நற்பெயரையழித்து. இராக்காலத்தில் 'சச்சரவு' செய்து திரிவோனென்ற பெயருறும்படி, நீரொழுகும் விதம் என்ன? என் கேள்விக்குப் பதிலுரையும்.

மண்டா :—ஒதெல்லோ மஹாராஜனே, நான் பிராணாபாயமான காயமடைந்திருக்கிறேன்: தங்கள் உத்தியோகஸ்தர் இயாகோவே எனக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லக்கூடும்; பேசினால் எனக்குச் சிறிது இப்பொழுது நோகிறது; தவிரவும், தற்காப்புச் சில வேளைகளில் துர்க்குணமாயும், மூர்க்கர்களெதிர்த்துத் தாக்கியபொழுது தன்னைக் காத்துக்கொள்ளுதல் பாவமாயுமிருந்தாலன்றி, நான் இன்றிரவு தவறுதலாகவொன்றும் பேசவுமில்லை, செய்யவுமில்லை.

ஒதெல் :—கடவுளாணை, இப்பொழுது, எனக்கும் நிதானவமைதியும் பதபாகமுங்குன்றிக் கோபங் கிளர்கின்றது. விவேகத்தின் முகத்திற் கரியைத் தீற்றி மங்கச்செய்துவிட்டுத், தாபம் தானே வழிகாட்ட முயல்கின்றது. நான் ஒருகால் கிளம்பினால், அல்லது இக்கையைமட்டுந் தூக்கினால், உங்களுட் சிறந்தவனும் என் தண்டனைக்கீழ் ஆழ்வீர்கள். இந்தக் கெட்ட 'சச்சரவு' எங்ஙனமுண்டாயிற்று? யார் முதலில் தொடங்கினார்களென்று எனக்குச் சொல்லுங்கள்; இக்குற்றம் எவன் மேல் ருசுவாகிறதோ அவன் ஒரே பிறப்பில் என்னுடன் இரட்டையாகப் பிறந்தவனேயாயினும், என்னையிழப்பான். —என்ன! யுத்தசந்நதமாயும் இன்னும் குழப்பமாயுமுள்ள பட்டணத்தில், குடிகள் மனமெல்லாம் இன்னும் பயந்ததும்பி வழிந்துகொண்டிருக்கையிலே, இராக்காலத்திலே, காவற்கூடத்திலேயே, ஒருவருக்கொருவருள்ள சொந்த மனஸ்தாபங்களையும் வீட்டுச்சண்டைகளையும் நடத்துகிறதா! இது பெருங்குற்றமே! இயாகோ, இதைத்தொடங்கியது யார்?

மண்டா :—நட்புக்காகவேனும், உடன் உத்தியோகஸ்தனென்றெண்ணியேனும், பக்ஷபாதமாக, உண்மையைக் கூட்டிக்குறைத்துக் கூறின், நீ யுத்தவீரனல்ல.

இயா :—அப்படி நெருங்காதேயும்: மிக்கேல் காஸியோவுக்குத் தீங்கிழைப்பதினும் இந்த நாவை அறுத்துவிடுவதே எனக்கிஷ்டம்; ஆயினும், உண்மையை யுரைப்பதில் அவருக்கொரு தீங்கும் விளையாதென்றே நம்புகிறேன். —சேனாபதி! நடந்தவாறு இதுதான்: நானும்

மண்டாஞேவும் பேசிக்கொண்டிருக்கையில், அபயக் கூக்குர பெயர் கொண்டு ஒரு பயல் ஓடிவந்தான் ; அவனைத்தீர்த்துவிடத்துணிந்வில்லை. தியுங் கையுமாய்க் காஸியோவுந் தொடர்ந்து வந்தார். ஐயா, இந்ஙனி கிரகஸ்தர் காஸியோ முன்சென்று பொறுத்துக்கொள்ளும்படி அவரை வேண்டினர் ; இப்பொழுது நிகழ்ந்துவிட்டபடி, அவன் கூக்குரலால் பட்டணந் திகிலடையாவண்ணம், பெருங்கூச்சலிடும் அந்தப் பயலை நான் தொடர்ந்து சென்றேன் ; வேகமாய் ஓடுபவஞகையால், அவன், என்னெண்ணம் நிறைவேறுதபடி, தப்பியோடிவிட்டான் ; கத்திகள் உரசிச் சப்திப்பதையும், ஒன்றின்மேலொன்று விழுவதையும், காஸியோ கோபமாய் வசை கூறுவதையுஞ்* செவிக்கொண்டு, நான் விரைவில் திரும்பிவந்தேன் ; இன்றிரவுக்கு முன் காஸியோ அவ்விதம் வசை கூறுவதை நான் கேட்டதேயில்லை. நான் திரும்பிவரும்பொழுது —எல்லாம் வெகுசீக்கிரத்தில்தான் —அவர்கள் நெருங்கிக்கலந்து, குத்தும் அடியுமாயிருந்தார்கள் ; தாங்கள் மறுபடியும் விலக்கும்பொழுது எவ்வாறிருந்தார்களோ அப்படியே. இதைத்தவிர நான் சொல்லக்கூடியதொன்றுமில்லை :—ஆஞல், மனிதர்கள் மனிதர்களே ; சர்வோத்தமர்களும் சில வேளைகளில் தங்களை மறந்துவிடுகிருர்கள் :—கோபவசப்பட்டவர்கள் தங்களுக்கு நன்மையை மிகச் சூழ்பவர்களையே யடித்துவிடுவதுபோல, காஸியோ அவனுக்கு ஏதோ சிறிது தீங்குசெய்தாலும், ஓடிப்போனவன், பொறுக்கரிய அவமரியாதை யேதோ செய்து, காஸியோவைக் கோபமூட்டியிருப்பானென்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்.

ஒதெல் :—இயாகோ, எனக்குத் தெரியும் ; உன் நற்குணத்தாலும், காஸியோமேலுள்ள பக்ஷத்தாலும், இந்தச் சங்கதியைச் சிறிது இலேசாக்கி, அவன்மேல் அதிகக் குற்றஞ் சுமத்தாமற் சொல்லுகிருய்.—காஸியோ, உன்மேலெனக்குப் பிரியமே ; ஆஞல் இனியொருபொழுதும் நீ என் உத்தியோகஸ்தஞயிருக்கவேண்டாம்.

இது முழுப்பொய்யே ; இந்த விருத்தாந்தத்தின் சாதுரியமும், மெய்போன்ற பொய்மையும், ‘பொய்யுடையொருவன் சொல்வன்மையிஞல் மெய்போலும்’ என்ற மூதுரையை நினைவூட்டுகின்றன.

சிர்குலேத்தி மோனு சில ஏவலருடன் திரும்பிப் பிரவேசித்தல்.
லத்திபார், என் இனிய காதலி யெழுந்து வந்துவிட்டாள்!—

[காஸியோவை நோக்கி.] காஸியோ, உன்னையொரு உதாரண மாக்குவேன்.

டெஸ்டி:—விசேஷமென்ன?

ஒதெல்:—என் கரும்பே! இப்பொழுதெல்லாம் சரியாய் விட்டது; படுக்கைக்குப் போவோம் வா.

[மண்டானோவை நோக்கி.] ஐயா, உம் காயங்களுக்கு நானே ரணவைத்தியஞ்செய்கிறேன்; அவரை யழைத்துப்போங்கள்.

[மண்டானோவை நடத்திச் செல்கிறார்கள்.]

இயாகோ, பட்டணத்தைக் கவலையாய்ச் சுற்றிப்பார்; இந்தக் கெட்ட சச்சரவால் கலக்கமுற்றவர்களையெல்லாஞ் சமாதானப்படுத்து.— வா, டெஸ்டிமோனு: தங்களினிய நித்திரையினின்றும் கலகங்களால் எழுப்பப்படுவது, யுத்தவீரர் வாழ்க்கைக்குரியதே.

[இயாகோவும் காஸியோவும் தவிர அனைவரும் வெளிப்போகுதல்.]

இயா:—என்ன! உமக்குக் காயமுண்டா உபசேனாபதி?

காஸி:—ஆம், எந்த ரணவைத்தியத்தாலும் ஆற்றமுடியாது.

இயா:—ஐயோ! கடவுள் விலக்கட்டும்!

காஸி:—நற்பெயர்! நற்பெயர்! நற்பெயர்! ஓ! என் நற்பெயரை யிழந்துவிட்டேனே! என்னில் அழியாப் பகுதியை யிழந்துவிட்டேன்; எஞ்சி யிருப்பது மிருகத்தன்மையதே.—என் நற்பெயர், இயாகோ, என் நற்பெயர்!

இயா:—உண்மையாகச் சொல்கிறேன், உம்முடைய உடம்பிலெங்காவது காயமுண்டென்றே நினைத்தேன், நற்பெயரினும் அதே சேதமுறக்கூடியது. நற்பெயரென்பது, ஒரு வீணை, முழுப் பொய்யான மேல்வேஷமே; அடிக்கடி, யோக்கியதையில்லாமலே வருகிறது, தக்க

காரணமின்றியே போய்விடுகிறது: அதையிழந்தவராக நீரே பெயர் வைத்துக்கொண்டாலன்றி, நீர் ஒரு நற்பெயரையுமே யிழக்கவில்லை. என்காணும்! சேனுபதியின் பிரியத்தைத் திரும்பியடைய வழிகளி ருக்கின்றன : இப்பொழுது அவர் உம்மையொரு ஆவேசத்தில் நீக்கி யிருக்கிறார் ; அதுவும் மனத்திலுள்ள பகைமையாலில்லை, விவகார முறையின்பொருட்டே ; இராஜ கம்பீரமான ஒரு சிம்மத்தைப் பய முறுத்தும்பொருட்டு, ஒரு குற்றமுஞ் செய்யாத நாயொன்றை யொருவ னடிப்பதுபோலவே, அந்தத் தண்டனை விதித்திருக்கிறார் ; நீர் போய்த் திரும்பவும் வேண்டிக்கொண்டால் உம்மவராய்விடுவார்.

காஸி :—அவ்வளவு நல்ல தளகர்த்தரை, இவ்வளவு அற்பமான குடிவெறிகொண்ட அஜாக்கிரதையுள்ள உத்தியோகஸ்தனுயிருந்தே மாற்றவேண்டிக்கொள்வதினும், என்னை முற்றிலும் இகழும்படியே னும் வேண்டிக்கொள்வேன். குடிவெறி கொள்கிறது? வாய்க்குவந்த படியுளறுகிறது? கலகஞ்செய்கிறது? வீம்பு பேசுகிறது? வசை கூறுகி றது? தன்னிழலுடனேயே தாறுமாருய் வாதாடுகிறது?—ஓ! திராட்ச மதுவின் கண்ணுக்குப் புலப்படாத ஆவியே! உனக்கு வேறு பெயரி ல்லையெனின், உன்னைப் 'பிசாசு' என்றழைக்கலாம்!

இயா :—நீர் கத்தியுங்கையுமாய்ப் பின்றொடர்ந்தவன் யாவன்? அவனுமக்கு என்னசெய்தான்?

காஸி :—நானறியேன்.

இயா :—மெய்தானுவிது?

காஸி :—எத்தனையோ சங்கதிகள் ஞாபகமிருக்கின்றன, ஆனு லொன்றும் தெளிவாயில்லை ; ஒரு சண்டை நடந்தது, ஆனுல் அதன் காரணமொன்றுந் தெரியவில்லை. அந்தோ! தங்கள் மூளைகளைத் திரு டிச்செல்லும்படி மனிதர்கள் தங்கள் வாய்களில் ஒரு பகைவனை விட்டுக்கொள்கிறார்களே! சந்தோஷத்துடனும், மகிழ்ச்சியுடனும், விழாவயர்ச்சியுடனும், புகழ்ச்சியுடனும், நாம் நம்மை மிருகங்களாக்கிக் கொள்கின்றோமே!

இயா :— என்ன, இப்பொழுதெல்லாம் சரியாயிருக்கின்றீரே. இப்படி யெவ்வாறு சரியாய்விட்டீர்?

காஸி:—குடிவெறிப் பிசாசு தயைகூர்ந்து கோபப் பிசாசுக்கிடங்கொடுத்திருக்கிறது. நானே யென்னை உண்மையில் வெறுக்கும்படி, ஒரு குறை மற்றொரு குறையை வெளியிடுகிறது.

இயா:—போதும், நீர் நீதி கூறுவது மிகக் கண்டிப்பாயிருக்கிறது: காலம், இடம், தேசநிலைமை இவைகளை யுத்தேசித்து இவ்வாறு நிகழாமலிருந்தால் மிகவும் நலமென்றெண்ணுகிறேன்; ஆனால் நடந்தது நடந்தாய்விட்டபடியால், அதையுமக்கு நன்மை பயக்கும்படி திருத்திக்கொள்ளும்.

காஸி:—என் உத்தியோகத்தைத் திரும்பக் கொடுமென்று அவரிடம் போய்க் கேட்கிறேன்; நான் குடிகாரனென்று அவர் பதில் சொல்லட்டும்! ஆதிசேஷனத்தனை வாய்கள் எனக்கிருப்பினும், அம்மறுமொழியெல்லாவற்றையும் அடைத்துவிடும். இப்பொழுதொரு புத்திசாலியாயிருக்கிறது, சற்றுப் பொறுத்து ஒரு மூடன் ஆகிறது, உடனே ஒரு மிருகமாய்விடுகிறது! ஓ என்ன புதுமை! மட்டுமிஞ்சிய ஒவ்வொரு கிண்ணியும் சாபத்தீடே; அதன் உட்சரக்குப் பிசாசே.

இயா:—போதும், போதும்; நல்ல திராக்ஷமது, சரியாயுபயோகித்தால், ஒரு நல்ல பழகத்தக்க வஸ்துவே; இன்னும் அதைப் பழிக்க வேண்டாம். இதுநிற்க: நல்ல உபசேனாபதி! என்னை உம்மேற் பக்ஷமுள்ளவனாக மதிக்கிறீரென்று எண்ணுகிறேன்.

காஸி:—அதை நான் நன்கறிவேன், ஐயா; நான் குடிவெறி கொண்டேனா!

இயா:—என்ன ஐயா, நீரில்லை, வேறெந்த மனிதனும்தானென்ன, சிலவேளை குடித்திருக்கக்கூடும். நீர் செய்யவேண்டியதைச் சொல்கிறேன் கேளும். நமது சேனாபதியின் மனையாட்டிதான் இப்பொழுது சேனாபதியாயிருக்கிறாள்;—அவள் குணாதிசயங்களையும் அழகுகளையும் தெரிந்து கவனித்துத் தியானஞ்செய்யும்பொருட்டே, அவர் தம்மை அர்ப்பணஞ்செய்துவிட்டபடியால், நானிப்படிச் சொல்லுதல் பொருந்தும். அவளிடத்தில் ஒளிப்பின்றி யாவற்றையுஞ் சொல்லிவிடும்; அவளையலட்டி வேண்டிக்கொள்ளும்; உமது ஸ்தானத்தில் உம்மைத் திரும்பவும் வைக்க அவளுதவிசெய்வாள். ஒருவர் தன்னை வேண்டியதினும் அதிகமாக உதவிபுரியாமை, தன் நற்குணத்துக்குக் குறை

வென்றெண்ணுமளவு, அவள் உதாரமும், தயையும், தகுதியும், சத்துவகுணமும் பொருந்தியவள். உமக்கும் அவள் கணவனுக்குமுள்ள இசைவு நீங்கியிருப்பதைப் பொருத்திச் சீராக்கும்படியவளைப் பிரார்த்தித்துக்கொள்ளும். ஆகவே, இப்பொழுது பிளவுண்டிருக்கும் உங்கள் நட்பு, முன்னிலும் அதிக உறுதியாகிவிடுமென்று நான் தக்க பந்தயம் என்னவேண்டினும் வைக்கிறேன்.

காஸி:—நீ தக்க யுக்தியே சொல்கின்றனை.

இயா:—சத்தியமாகவே, உண்மையான பக்ஷத்தாலும் நல்லெண்ணத்தோடுமே பேசுகிறேன்.

காஸி:—நானும் அதைச் சரியாகவே நினைக்கிறேன்; அதிகாலையிற் சென்று, கற்பரசியாகிய டெஸ்டிமோனாவை எனக்காக வேண்டிப் பேசும்படி பிரார்த்திப்பேன்; இவ்வளவிலேயே தடைப்பட்டுப்போனால், என் கதி யென்னாகுமென்று மிகவும் ஏக்கமாயிருக்கிறது.

இயா:—நீர் சொல்வது சரிதான். உமக்கு நல்லிரவாகுக, உபசேனாபதி: நான் காவலுக்குச் செல்லவேண்டும்.

காஸி:—நாணயமான இயாகோ, நல்லிரவாகுக.

[வெளிப் போதல்

இயா:—(தனிமொழி) ஆகவே, யான்செய்வது அயோக்கியத்தனமென்று எவன் சொல்கிறவன்? இந்த ஆலோசனை, உண்மையாகவே நல்லெண்ணமுடையார் உரைக்கத்தக்கதாயும், யோக்கியமானதாயும், யுத்திபுத்திக்குப் பொருந்தினதாயும் இருக்கின்றது; நானும் அதைச்சொல்லிக்கொடுக்கின்றேன்; மோரியன் பிரியத்தைத் திரும்பப் பெறுதற்கு வழியும் இதுவே. ஏனெனின், வரம்பற்ற பூதியப்பொருள்களைப்போல் உதாரமான சுபாவத்தையுடையவளும், விநயமுள்ளவளுமான டெஸ்டிமோனாவின் உதவியை, யோக்கியமான எவ்விஷயத்திலும் வெகு சுளுவாயடையலாம்; பின்பு அவள் மோரியனை யிணங்கச் செய்வதற்கோ, அவன் தன் ஞானஸ்நானத்தை மறுத்துத்துறந்து, தன் பாவவிமோசன பதவியைக்குறிக்கும் சின்னங்களையெல்லாம் ஒழித்துவிடவேண்டுமெனினும், அவன் ஆன்மா அவள் பாசத்தால் தளையுண்டிருப்பதால், அவள் மனத்துக்குத் தோன்றியவண்ணமெல்லாம்,

அவனது திடமில்லாத மனநிலையை ஆக்கவோ, அழிக்கவோ, இஷ்டப் படிசெய்யவோ, ஒரு தடையுமில்லை. ஆகவே, அவன் நன்மைக்கு நேர் வழியாகிய இந்த யுத்தியைக் காஸியோவுக்குப் போதிப்பதில், நான் எவ்வாறு துரோகியாகிறேன்? ஆ! இதுதான் நரகத்தின் வேதாகமம்! பைசாசங்கள், அதிகொரோமான பாதகங்களைத் தூண்டும்பொழுது, நான் இப்பொழுது செய்வதுபோல், தெய்வீகமான புண்ணியத்தோற் றங்களை முதலிற்காட்டி, மனத்தைக் கவர்கின்றன: எங்ஙனமெனின், இந்த நாணயமான மூடன் தன் துர்ப்பாக்கியங்களைச் சீராக்கும்படி டெஸ்டிமோனையைலட்டி வேண்ட, அவள் அவனுக்காக மோரியனி டத்தில் பலமாய்ச் 'சிபார்சு' செய்கையில், தன் தூர்த்தவியாபாரத் தின்பொருட்டே அவனை வேலையில் திரும்பவுமிருத்த வேண்டுகிறு ளென்ற விஷத்தை, நான் மோரியன் காதிலூற்றுவேன்; ஆகவே, அவள் அவனுக்கு நன்மைசெய்ய எவ்வளவு மன்றுடுகின்றனளோ, அவ்வளவு மோரியன் தன்மேற்கொண்டிருக்கும் மதிப்பையும் நம்பிக் கையையும் இழப்பாள். இவ்விதமாக அவள் நற்குணத்தைக் கரியா க்கி, அவள் சத்துவகுணத்தைக்கொண்டே அவர்களனைவரையும் சிக் கச்செய்யும் வலையை உண்டுபண்ணிவிடுகிறேன்.

[ராடரிகோ பிரவேசித்தல்.]

என்ன சங்கதி, ராடரிகோ!

**ராட:**—இந்த வேட்டையில், நான், சத்தத்தை நிரப்பக் கூடக் குரைத்துச்செல்லும் நாயாகவிருக்கின்றேனேயன்றி, வேட்டைபிடிக் கும் நாயாகவில்லை. என் பணம் அநேகமாய்ச் செலவாய்விட்டது; இன்றிரவு வெகு நன்றுய்த் தடிக்கம்புச் சாத்துங்கிடைத்தது; முடி வில் என் சிரமத்துக்குப் பிரதிபலன், கிடைத்த அநுபவத்தைத்தவிர வேறிராதென்றெண்ணுகிறேன்; ஆகவே, கையிற்காசேதுமேயின்றி, முன்னிலுஞ் சிறிததிகப்பட்ட விவேகத்தோடு, வெநிசுக்குத் திரும் பிப்போகவேண்டியதுதான்.

**இயா:**—பொறுமையில்லாதார் எத்துணையேழைகள்! காலக்கிர மத்தாலன்றி எந்தக் காயந்தான் ஆறினதுண்டு? நாம் மதிகொண்டு வேலைசெய்கின்றோமேயன்றி மந்திரங்கொண்டன்றென்பது உனக்குத் தெரியுமே; மதியோ மந்தமாகச் செல்லும் காலத்தைப்பொறுத்தது.

என்ன, ஒன்றும் செவ்வையாகவில்லையா? காஷியோ வுன்னை யடித்தான்: அச்சிறுதீங்கால் நீ காஷியோவை வீட்டுக்கனுப்பிவிட்டாய். மற்ற மரங்களும் சூரியனைநோக்கி நன்றாய் வளர்ந்துவரினும், முதலிற் பூத்ததுதான் முதலிற்பழுக்கும்.* சற்றுப் பொறுத்துக்கொள்.—சத்தியமாகவே, பொழுதுவிடிந்துவிட்டது. விளையாட்டும் வினையும் கால நிகழ்ச்சியைச் சுருக்கிக்காட்டுகின்றன. படுக்கப்போ; நீ தங்குமிடம் செல்; போ, என்கிறேனே; பிற்பாடு மேற்சங்கதி சொல்லுகிறேன்: நில்லாதே, போய்விடு.

[ராடரிகோ வெளிப்போதல்.]

இரண்டு காரியங்கள் செய்யவேண்டும்,—என் மனைவி, காஷியோவுக்காகத் தன் எஜமானியிடம் சிபார்சுசெய்யவேண்டும்; அவளை யதற்குத் தூண்டிவிடுகிறேன்; அது நடக்க, மோரியனை நான் வேறாக வழைத்துச்சென்று, காஷியோ அவன் மனைவியை வேண்டிக்கொண்டிருக்குந்தருணத்தில் அவன் காணும்படி கொண்டுவிடவேண்டும்:—ஆம் அதுதான்வழி: ஆலோசனையை அசட்டுத்தன்மையாலும் ஆலசியத்தாலும் மந்தப்படுத்தலாகாது.

வெளிப்போதல்.

* நமது மற்ற ஆலோசனைகள் காலக்கிரமத்திற் பலன்பெறும்; முதற்சூழ்ந்த ஆலோசனையாகிய காஷியோவின் உத்தியோக நீக்கம், முதலிற் சித்தி பெற்றது என்பது கருத்து.

# மூன்றும் அங்கம்

## முதற்களம் :—அரண்மனை முற்றம்.

(காலம் : அதிகாலை.)

[காஸியோவும் சில சங்கீத வித்வான்களும் பிரவேசித்தல்

காஸி :—வாத்தியக்காரரே, இங்கு வாசியுங்கள்,—உங்கள் சிரமத்துக்குத்தக்க பிரயோசனஞ் செய்வேன்,—ஏதாவது சுருக்கமானதாக வாசித்து, சேனுபதிக்கு நற்பொழுதாகவென்று வந்தனஞ் செய்யுங்கள்.* [சங்கீதம்.]

[விதூஷகன் பிரவேசித்தல்.]

விதூ :—என்ன ஓ! உங்கள் வாத்தியங்கள் நேப்பிள்ஸிலிருந்து† வந்தனவோ, இவ்வாறு மூக்கால் பேசுகின்றனவே.

முதல் சங்கீ :—என்ன, ஐயா, என்ன!

விதூ :—இவையென்ன, ஊது கருவிகளா?

முதல் சங்கீ :—ஆமாம், ஐயா, அவைதான்.

விதூ :—ஓ! அது வேறு கதை. ஓ! இதோ உங்களுக்குப் பணங்கொடுக்கிறேன்; உங்கள் சங்கீதத்தைச் சேனுபதி மிகவும் விரும்புவதால், காதற்பொருட்டு, இனியிந்தக் கூப்பாட்டை நிறுத்தும்படி சொன்னூர்.

முதல் சங்கீ :—நல்லது, ஐயா, அப்படியே.

விதூ :—செவிக்குப் புலப்படாத சங்கீதமேதாவது உங்களிடமிருந்தால், அதை வாசியுங்கள்; ஆனுல், எல்லாருங் கூறுகிறபடி, சங்கீதங் கேட்பதில் சேனுபதிக்கு அவ்வளவு பிரியமில்லை.

---

* மணமகனையும் மணமகளையும், மங்கலவாத்தியத்தால், அவர்கள் சயனத்தினின்றும் மறுநாட் காலையில் நண்பர்கள் எழுப்புவது வழக்கம். நம் தேசத்திலுஞ் சில ஜாதியாருள் இவ்வாறு நடக்கின்றது. ஆகவே இவ்வங்கம் ஒதெல்லோ முதலாயினர் ஸைப்ரஸ் வந்தடைந்த தினத்துக்கு மறுதினத்தில் தொடக்கமாகின்றது.

† இத்தலியில் ஓர் நகரம்; இத்தேயத்தில் மலையாளத்தைப்போல், அந்நகரவாசிகள் மூக்கால் பேசுபவர் என்ற பெயர்பெற்றதுபோலும்.

முதல் சங்கீ:—அப்படிப்பட்ட சங்கீதம் எங்களிடமில்லை, ஐயா.

விதூ:—ஆனால் குழல்களைப் பைக்குட்போட்டுக்கொள்ளுங்கள் நான் போகிறேன்: போங்கள், ஆகாசத்தில் மறைந்துவிடுங்கள்; எடு ஓட்டம்.

[சங்கீத வித்வான்கள் வெளிப்போதல்.

காஸி:—என் யோக்கியமுள்ள சிநேகிதா, சொல்வது கேட்கின்றதா?

விதூ:—இல்லை, உம்முடைய யோக்கியமுள்ள சிநேகிதர் சொல்வது கேட்கவில்லை; நீர் சொல்வதுதான் கேட்கின்றது.

காஸி:—தயைசெய்து உன் விகடத்தை நிறுத்து. இதோ இந்தப் பொற்காசை வைத்துக்கொள்: சேனைபதி மனையாட்டியார்சேடி யெழுந்தாய்விட்டால், காஸியோ என்றொருவன் சிறிது பேசவேண்டுகிறானென்று சொல்: இது செய்வாயா?

விதூ:—ஐயா, அவள் எழுந்துவிட்டாள்; இங்கு நோக்கி அவள் எழுகிறதாயிருந்தால், அவளுக்குத் தெரிவிப்பான்போற் காணுவேன்.

காஸி:—அப்படியே செய், என் நல்ல நண்பனே.

[விதூஷகன் வெளிப்போதல்.]

[இயாகோ பிரவேசித்தல்.]

நல்ல சமயத்தில் வந்தாய், இயாகோ.

இயா:—ஆனால் நீர் படுத்துக்கொள்ளவேயில்லையா?

காஸி:—இல்லை; நாம் பிரியுமுன் பொழுது புலர்ந்துவிட்டதே. இயாகோ, நானாகவே துணிந்து உன் மனைவிக்குச் சொல்லியனுப்பியிருக்கிறேன்: சற்குணவதியாகிய டெஸ்டிமோனையை எவ்விதமாவது நான் கண்டு பேசும்படி, அவள் சௌகரியம் செய்ய வேண்டிக்கொள்ளும்பொருட்டே.

இயா:—நானவளையுமடைய இதோ அனுப்புகிறேன்: அன்றியும் உங்கள் சம்பாஷணையும் காரியமும் தடையின்றி நடத்தற்கு மோரியர் இடையூறாகாதபடி, அவரை ஏதாவது யுத்திசெய்து வேறிடம் அழைத்துச் செல்கிறேன்.

**காஸி** :—அதற்காக நான் மிகவும் வந்தனமளிக்கின்றேன்.

[இயாகோ வெளிப்போதல்.]

இவனிலும் அதிக உண்மையும் உரிமையும், ப்ளாரன்ஸ் நகரத்தாரிற்கூட,* ஒருவனும் எனக்குக் காட்டியதில்லை.

[எமிலியா பிரவேசித்தல்.]

**எமிலி** :—நல்ல உபசேனாபதி, உமக்கு நற்பொழுதாகுக: நீர் அப்பிரியத்துக்குள்ளாயிருப்பதற்காக நான் மனம் வருந்துகிறேன்; ஆனால் எல்லாஞ் சீக்கிரத்தில் சரியாகிவிடும். சேனாபதியும் அவர் மனைவியாரும் அதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறார்கள்; அவளுமக்காகப் பலமாய்ப் பேசுகிறாள்: நீர் காயப்படுத்தினவர் ஸைப்ரஸில் பெரும்பேர் பெற்றவரென்றும், உயர் குடும்பத்தினரென்றும், உம்மை யேற்றுக்கொள்ளாது மறுப்பதே தகுதியென்றும், மோரியர் பதிற் சொல்லுகிறார்; ஆனால் உம்மேல் தமக்கு வாஞ்சையுண்டென்றும், உம்மைத் திரும்பவும் அற்றம்நோக்கி வேலையிலமர்த்த, தமக்குள்ள பிரியமே போதுமென்றும், வேறு 'சிபார்சு' வேண்டாமென்றும் வற்புறுத்திக் கூறுகிறார்.

**காஸி** :—ஆயினும், யான் டெஸ்டிமோனாவுடன் தனித்துச் சிறிது பேசுவது தகாததன்றென்றும் சாத்தியமானதென்றும் உனக்குத் தோன்றினால், அவ்வாறு பேசுவதற்குச் சௌகரியஞ்செய்து கொடுக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

**எமிலி** :—தயைசெய்து உள்ளே வாரும்: நீர் உம்முடைய மனத்திலுள்ளதைத் தடையின்றி வெளியிடும்படியான இடத்திற் கொண்டுவிடுகிறேன்.

**காஸி** :—நானுனக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

[போதல்.]

---

* இயாகோ வெநிஸ் நகரத்தான், காஸியோ ப்ளாரன்ஸ் நகரத்தான் ஆகவே, தன் சொந்தவூரான் எவனுங்கூட இவ்வளவு நட்புப் பாராட்டவில்லையென்பது கருத்து.

## இரண்டாங் களம் :—அரண்மனையிலோரறை.

(காலம் : காலை.)

[ஒதெலலோவும், இயாகோவும், சில கிரகஸ்தரும் பிரவேசித்தல்.]

ஒதெல் :—இயாகோ, இந்த நிருபங்களை மாலுமியிடம் கொடு; நான் துரைத்தனச் சங்கத்துக்கு வந்தனை செய்வதாக அவன் மூலமாகச் சொல்லியனுப்பு : அதாயினவுடன், நான் வேலைத்தலத்தில் உலாவிக் கொண்டிருப்பேன் ; அங்கு வந்து சேர்.

இயா :—நல்லது, ப்ரபோ, அப்படியே செய்கிறேன்.

ஒதெல் :—கனவான்களே, நாம் சென்று இந்தக் கோட்டையைப் பார்ப்போமா ?

கிரக :—ப்ரபோ, தங்கள் சித்தம்.

[போதல்.]

## மூன்றுங்களம் :—அரண்மனை முன்னிலை.

(காலம் : காலை.)

[டெஸ்டிமோனாவும், காஸியோவும், எமிலியாவும் பிரவேசித்தல்.]

டெஸ்டி :—நற்குணக் காஸியோ, உமக்காக என்னாலியன்றதெல்லாஞ் செய்வேனென்று நிச்சயமாய் வைத்துக்கொள்ளும்.

எமிலி :—நல்ல சீமாட்டியே, செய்யுங்கள் : இது தமக்கு நேர்ந்தாற்போல் என் புருஷர் வருந்துகிறாரென்று, உறுதியாகச் சொல்லுவேன்.

டெஸ்டி :—ஓ, அவன் யோக்கியன்.* காஸியோ, நீரும் என்னாதரும் முன்போலவே இஷ்டமாயிருக்கும்படி செய்வேனென்பதை நம்பும்.

காஸி :—உதாரகுண அம்மணி, மிக்கேல் காஸியோவின் கதியென்னவாயினும், அவனெப்பொழுதும் தங்கள் உண்மையூழியனேயொழிய வேறில்லை.

டெஸ்டி :—அதையறிவேன்.—உமக்கு வந்தனம். நீர் என்னாதர்மேல் பக்ஷமுள்ளவர் : அவரை வெகுகாலமாயறிவீர் ; வெளிப்பார்

வைக்குச் சிறிது வேண்டிய அளவுக்குமேல், அவரும்மை விலக்கா ரென்று உறுதியாய் நினையும்.

**காஸி:**—ஆம், அம்மா; ஆனால், வெளிப்பார்வைக்காகச் செய்யும் அந்தப் பாவனை அதிகமாக நீடித்தேனும், எதிர்பாராத அற்பசங்கதிகளால் பலப்பட்டேனும், அகஸ்மாத்தாய் அதிகப்பட்டேனும், நான் கண்ணெதிரிலிராமலும், என் ஸ்தானத்தில் வேறொருவனமர்ந்தும், என் தலைவர் என் பக்ஷத்தையும் நான் செய்திருக்கும் ஊழியத்தையும் மறந்துவிடக்கூடும்.

**டெஸ்டி:**—அப்படி அஞ்சவேண்டாம்; இதோ எமிலியா முன்னிலையில் உம்முடைய உத்தியோகத்தை யுமக்குத் திரும்பி கொடுப்பதாக நான் வாக்களிக்கின்றேன்: நான் நட்புப்பாராட்டிவிட்டால், முடிவுவரையும் அதைநிறைவேற்றுவேனென்று உறுதியாயெண்ணும்: என்னுதரை யிடையறாது அலட்டுவேன்; அவர் படியும்வரையும் தூங்கவிடாது,* பொறுக்கமுடியாமல் இணங்கும்வரையும் வாதாடுவேன்; அவர் சயனத்தை யொருபள்ளிக்கூடம் போலவும், ஊண் 'மேஜையை,' பாவத்தையொப்புக்கொள்ளுங் குருபீடம்போலவும் ஆக்குவேன்; அவர் செய்கைகள் ஒவ்வொன்றிலும், காஸியோவின் முறையீட்டைக் கலப்பேன்: ஆகையால், காஸியோ, நீர் சந்தோஷமாயிரும் உம்முடைய 'வக்கீல்' உம்முடைய கட்சியையிழப்பதினும், தான் சாகவேனுஞ்செய்வாள்.

**எமிலி:**—அம்மா, இதோ எஜமானர் வருகிறார்.

**காஸி:**—அம்மா நான் விடைபெற்றுக்கொள்கிறேன்.

**டெஸ்டி:**—ஏன், நான் பேசுவதை யிருந்து கேளும்.

**காஸி:**—அம்மா, இப்பொழுது வேண்டாம், எனக்கு மனசு சரியாயில்லை; என் காரியாநுகூலத்துக்கு நானிப்பொழுது ஏற்ற நிலைமையிலில்லை.

**டெஸ்டி:**—நல்லது, உம்முடைய யுக்தம்போற் செய்யும்.

[காஸியோ வெளிப்போதல்.]

---

* இராஜாளிப்பக்ஷியைப் பழக்கும் விதத்தைக் குறிக்கின்றது. தனக்குச் சம்பந்தமில்லாத இராணுவ விஷயத்தில் இவ்வாறு தலையிட்டு, மட்டுக்கு மிஞ்சித் தன் கணவனை டெஸ்டிமோனா அலட்டியது, எவ்வாறும் தவறே; ஏனைய ஸ்திரீகளும், இதையும், பின் வினையையும் கவனித்து ஒழுகக்கடவர்.

[ஒதெல்லோவும் இயாகோவும் வருதல்.]

**இயா** :—ஆ! அது நன்றாயில்லையே.

**ஒதேல்** :—என்ன சொல்கிறாய்?

**இயா** : — ஒன்றுமில்லை, ப்ரபோ; எதோ, — இன்னதென்று தெரியவில்லை.

**ஒதேல்** :—அதோ என் மனைவியைவிட்டுப் பிரிந்து சென்றது காஸியோவல்லவா?

**இயா** :—காஸியோவா, ப்ரபோ! இல்லை, நிச்சயமாகவே, தாங்கள் வருவதைக் கண்டு கள்ளன்போல் இம்மாதிரியாக அவர் நழுவுவாரென்று எனக்குத் தோன்றவில்லை.

**ஒதேல்** :—அவனென்றே யெண்ணுகிறேன்.

**டெஸ்டி** :- என்ன, பிராணநாதா! தங்கள் அப்பிரியத்தால் மனம் வாடும் ஒரு 'மனு' தாரனோடு இங்கே பேசிக்கொண்டிருந்தேன்.

**ஒதேல்** :—யாரைச் சொல்கிறாய்? †

**டெஸ்டி** :—ஏன், தங்கள் உபசேனாபதி காஸியோவே. பிராணநாதா! தங்களுக்கு என்மேல் கிருபையிருப்பின், இப்பொழுதே அவர் சமாதானத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்; ஏனெனின், யோக்கியதையை முகக்குறிகளினால் மதித்தறியும் சக்தி யெனக்கிருப்பது மெய்யானால், அவர் தங்கள்மேல் அந்தரங்க வாஞ்சையுள்ளவரென்பதும், அறியாமையாலன்றித் தெரிந்திருந்தும் பிழை செய்பவரில்லையென்பதும் நிச்சயமே: அவரைத் திரும்ப அழைக்க வேண்டுகிறேன்.

**ஒதேல்** :—அவனிப்பொழுது இங்கிருந்து போயினனா?

**டெஸ்டி** :—ஆமாம்; அவரடைந்த மனச் சிறுமையினால், யானும் அவருடன் மனம் வருந்தும்படி, தம் துயரத்திலொரு பகுதி யிங்கு விட்டுப்போனார். என் இனிய காதலரே! அவரைத் திரும்பவழையுங்கள்.

---

இதுகாறும் ஒதெல்லோவும் இயாகோவும் சிறிதுதூரத்தில் வந்ததாகவும், இப்பொழுதுதான் டெஸ்டிமோனாவின் அருகு வந்ததாகவும் கொள்க.

† தெரிந்திருந்தும் தெரியாமையைக் காட்டும் இக்கேள்வி, சினக்குறியே.

**ஒதேல்:**—இப்பொழுது வேண்டாம், என் இனிய டெஸ்டி மோனு; வேறொரு சமயமாகட்டும்.

**டெஸ்டி:**—ஆனால் சீக்கிரத்திலாகுமோ?

**ஒதேல்:**—என் கரும்பே, உனக்காகவே சீக்கிரத்தில் செய்கிறேன்.

**டெஸ்டி:**—இன்றிரவு போஜன காலத்திலாகட்டுமோ?

**ஒதேல்:**—இல்லை, இன்றிரவு வேண்டாம்.

**டெஸ்டி:**—பின்னை, நாளைப் பகல் போஜனத்திலோ?

**ஒதேல்:**—நாளை நான் வீட்டிற் சாப்பிடமாட்டேன்; கோட்டையில் தளகர்த்தர்களைச் சந்திக்கவேண்டும்.

**டெஸ்டி:**—என்ன, பின்னை, நாளையிரவிலா; அல்லது செவ்வாய்க்கிழமை * காலையிலா; செவ்வாய்க்கிழமை பகலிலா, இரவிலா; புதன்கிழமை காலையிலா:—தயைசெய்து காலத்தைக் குறிப்பிடுங்கள்; ஆனால் மூன்று நாட்களுக்குமேற் போகவேண்டாம்; உண்மையாகவே, அவர் தம் குற்றத்துக்கு மனம் நொந்து வருந்துகிறார்; ஆயினும், அவர் தவறோ, சிறந்தவர்களையே யுத்த விஷயங்களில் உதாரணங்களாக்கல் வேண்டுமென்று கூறுவதைத் தவிர்த்து, நாம் சாதாரணமாக ஆலோசித்துப்பார்த்தால், இவ்வித விசேஷ தண்டனை பெறும் படியான ஒரு குற்றமாகாது. அவரெப்பொழுது வரலாம்? சொல்லுங்கள், நாதரே: நான் மறுக்கும்படியாவது, அல்லது இவ்வாறு திகைத்துத் தியங்கும்படியாவது, நீங்கள் என்னிடம் எதைக் கேட்கக் கூடுமென்றெண்ணி ஆச்சரியப்படுகிறேன். என்ன! தாங்கள் என் கை விழைந்துவந்தபொழுது தங்களுடன் வந்த மிக்கேல் காஸியோ, தங்களைப்பற்றி யெத்தனையோதடவை நான் குறைவாகப் பேசிய காலங்களில், † தங்கள் கட்சியை எடுத்துப் பேசியவர்;

* ஆகவே, இக்களம் நிகழும் தினம் ஞாயிற்றுக்கிழமையாகின்றது; தேவதியானத்துக்கும் பஜனத்துக்குமென்று கிறிஸ்தவர்களால் தேவாஜ்ஞைப்படி ஓய்வுநாளாக அநுஷ்டிக்கப்பட்டுவரும் புனிததினத்திற்றான், கிறிஸ்தவனாகிய இயாகோ, பின் வரும் சர்ப்பனை சாதிக்கிறான்!

† நம் கவி, பெண்களுக்கியல்பான இவ்விதத் தந்திரங்களையும் 'மாய் மாலங்களையும்,' நன்குணர்ந்தவர்.

அவரைத் திரும்பக் கொண்டுவர இவ்வளவு பாடா! பொய்யில்லை, நானெனனின்,—

ஒதேல் :—போதும், தயைசெய்து நிறுத்து; அவனுக்கிஷ்டமானபோது வரட்டும்; உனக்கொன்றுமே மறுக்கேன்—

டெஸ்டி :—என்ன, இது ஒரு வரமில்லையே; தங்களைக் கையுறையணிந்துகொள்ளவாவது, சத்துள்ள போஜன பதார்த்தங்களைப் புசிக்கவாவது, சரீர உஷ்ணத்தை மிதப்படுத்திக்கொள்ளவாவது, தங்கள் சரீர சுகத்துக்கடுத்த எதாவது நற்காரியமொன்றைச் செய்யவாவது தங்களைப் பிரார்த்திப்பதுபோன்றதே யிது: இல்லை, தங்கள் காதலையுண்மையிற் சோதிக்கும்படியான ஒரு வரம் கேட்கும்பொழுது, அது ஆழ்ந்து ஆலோசிக்கவேண்டியதாயும், கொடுத்தால் அபாயகரமானதாகவுமிருக்கும்.

ஒதேல் :—நீ யென்ன கேட்கினும் இல்லையென்று சொல்லேன்: அதற்குப் பதிலாக, நான் சிறிதுநேரம் தனித்திருக்கும்படி, நீ செல்லவேண்டுகிறேன்.

டெஸ்டி :—நான் மாட்டேனென்று சொல்லட்டுமோ? வேண்டாம்: போய் வருகிறேன், நாதரே.

ஒதேல் :—போய்வா, என் டெஸ்டிமோனு: இதோ நேராக உன்னிடம் வருகிறேன்.

டெஸ்டி :—வா எமிலியா,—தங்களிஷ்டம்போலிருங்கள்; தாங்களெப்படியிருப்பினும், நான் சொற்படி நடப்பவளே.

[எமிலியாவுடன் வெளிப்போதல்.]

ஒதேல் :—“பேஷான” குட்டி! உன்னை உண்மையில் இல்லாவிட்டால், என் ஆத்மா நரகத்திலாழட்டும்! தவிரவும், உன்னையொழிந்தபின் உலகமெல்லாம் பாழ்ங் குழப்பமே

இயா :—கௌரவப்ரபோ—

ஊழிபெயருமளவும் அக்காதல் மாறாதெனவேனும், அக்காதல் சிதைபுறின் பின்பு அவனுக்குண்டாகும் மனக்குழப்பத்தால் உலகமே வெறும் பாழ்ங் குழப்பமாகத் தோன்றுமென்றேனும் கொள்ளலாம்

ஒதெல் :—என்ன சொல்கிறாய், இயாகோ?

இயா :—தாங்கள் என் எஜமானியை வேட்டுச் சென்றபொழுது, மிக்கேல் காஸியோவுக்குத் தங்கள் காதல் விஷயம் தெரியுமோ?

ஒதெல் :—அவனுக்கு ஆதியோடந்தம் தெரியும்; என்னத்திற்காகக் கேட்கிறாய்?

இயா :—ஏதோ என் மனத்திருப்திக்கே; வேறு கெடுதல் ஒன்றுமில்லை.

ஒதெல் :—மனத்திருப்திக்கென்றாயே, அதேன், இயாகோ?

இயா :—அம்மையவர்களை* அவருக்குத் தெரியுமென்று நானெண்ணவில்லை.

ஒதெல் :—ஓ: நன்றாய்த் தெரியும்; அடிக்கடி யெங்களிடையே தூது சென்றான்.

இயா :—அப்படியா!

ஒதெல் :—அப்படியா! ஆம்! அப்படித்தான்: அதிலெதாவது விசேஷம் தட்டுப்படுகிறதா வுனக்கு? அவன் யோக்கியனில்லையா?

இயா :—யோக்கியதையா, ப்ரபோ!

ஒதெல் :—யோக்கியதை, ஆம், யோக்கியதையே?

இயா :—ப்ரபோ, எனக்குத் தெரிந்தமட்டிலும் (யோக்கியரே).

ஒதெல் :—நீ யென்ன நினைக்கிறாய்?

இயா :—நினைக்கிறதா, ப்ரபோ!

ஒதெல் :—நினைக்கிறதா, ப்ரபோ! கடவுளாணை, வெளிக்காட்டத்தகாதவண்ணங் குரூபமான கொடியவெண்ணம் ஏதோ மனத்திலிருப்பதுபோல், நான் சொல்வதை யெதிரொலிக்கிறான்.—உன் நடக்கை ஏதோ விசேஷத்தைக்குறிக்கிறது; இப்பொழுதுதான், காஸியோ என் மனைவியைவிட்டுப் போனபொழுது, 'அது நன்றாகவில்லை' யென்று நீ சொன்னது காதில் விழுந்தது: எது நன்றாகவில்லை? என் காதல் வேட்கை நிகழ்ச்சியில் நடந்த யாவற்றிலும்,

---

*டெஸ்டிமோனாவை.

அவன் எனக்கு உடந்தையாயிருந்தானென்று சொன்னபொழுது, "அப்படியா!" என்று ஆச்சரியப்பட்டு, ஏதோ மிகக் கொடிய சந்தேகத்தை உன் மூளையில் அடக்கிவைத்திருந்தாற்போல, உன் புருவங்களை நெருக்கிச் சுருக்கினாய்: உனக்கென்மேல் பக்ஷமுண்டானால், உன் நினைவை என்னிடம் வெளியிடு.

இயா:—ப்ரபோ! நான் தங்கள்மேல் அந்தரங்க விசுவாசமுள்ளவனென்பது தங்களுக்கே தெரியும்.

ஒதேல்:—நான் அப்படியே எண்ணுகிறேன்; அதுவுமன்றி, நீ மெய்யன்பும் யோக்கியதையும் நிறைந்தவனென்றும், வாய் திறக்குமுன் வார்த்தைகளை நிறுத்துப்பார்த்துப் பின்பே பேசுகிறவனென்றும் எனக்குத் தெரியும்; ஆகையினால்தான், இவ்விதமான உன் தியக்கங்கள் எனக்கு அதிக பயத்தையுண்டாக்குகின்றன: ஒரு பொய்யனை வஞ்சகனிடத்தில், இம்மாதிரியான நடக்கைகள் வழக்கத்தால் ஏற்பட்ட புரட்டுக்களாகும்; ஆனால், ஒரு யோக்கியனிடத்திலோ, ஆக்கிரகமடங்காது பொங்கும் மனத்திலிருந்து தாமாகவே வெளிவரும் மறைவான குற்றச்சாட்டுக்களாம்.

இயா:—மிக்கேல் காஸியோ விஷயத்தில், சத்தியமாகவே, அவர் யோக்கியரென்றேபடுகிறது.

ஒதேல்:—நானும் அப்படியே எண்ணுகிறேன்.

இயா:—வெளித் தோற்றம்போலவே மனிதர் உண்மையிலுமிருக்கல் வேண்டும்; அப்படியில்லாதார், ஒருவிதமாகவும் தோன்றாதிருத்தலே நலம்.

ஒதேல்:—நிச்சயமாகவே, மனிதர் வெளிக்குத் தோன்றுவதுபோலத்தான் உண்மையிலும் இருத்தல் வேண்டும்.

இயா:—பின்னை என்ன, காஸியோ யோக்கியரென்றே தோன்றுகிறது.

ஒதேல்:—இல்லை, இதில் இன்னும் ஏதோ விசேஷமிருக்கிறது: சற்று உன் நினைவுகளையுள்ளபடி விவரமாய்ச்சொல்; எவ்வளவு கெட்ட எண்ணங்களாயிருப்பினும், எவ்வளவு கெட்ட மொழிகளில் வேண்டுமாயினும், வெளியிடு.

**இயா** :—ப்ரபோ, 'மன்னி'யுங்கள் : என் கடமைக்குரிய எதைச் செய்யவும் நான் கட்டுப்பட்டவனாயினும், சகல அடிமைகளுங் கூட சுதந்தரமாயநுபவிக்கும் விஷயத்தில் நான் கட்டுப்பட்டவனல்ல. என்னினைவுகளையா கூறவேண்டும்? ஏன், அவை கெட்டவைகளும், பொய்யானவைகளுமென்றே வைத்துக்கொள்வோம்,—கெட்ட வஸ்துக்கள் சில சமயங்களில் உட்புகாத (அவ்வளவு பரிசுத்தமான) அரமனை யெங்கிருக்கின்றது? கிரமமான சித்த விருத்திகளுடன் துன்மார்க்கமான சில சந்தேகங்களும், (பிறரை மதிப்பதற்கு) அளவளாவி யிருக்கப்பெறாத அவ்வளவு பரிசுத்தமான இருதயம் எவனுக்குண்டு?

**ஒதேல்** :—இயாகோ, உன் சிநேகிதனுக்கு ஒரு தீங்கு செய்யப்பட்டிருப்பதாகவெண்ணியும், உன் மனதிலிருப்பதை அவனுக்கு நீ சொல்லாவிட்டால், நீயும் கூடித் தீங்கிழைப்பவனேயாகிறாய்.

**இயா** :—நான் தங்களை வேண்டிக்கொள்கிறேன்.—இல்லாத குற்றங்களை யிருப்பனவாக என் சமுசய குணம் உருப்படுத்துவதும், கெடுதிகளையே யுற்றுநோக்கிக் கண்டுபிடிப்பதும், என்னைப் பீடிக்கும் துர்க்குணம் என்பது எனக்குத் தெரியும்; ஆகவே, என் சந்தேகம் ஒருவேளை கெட்டவிதமாயிருப்பினும், நிதான விவேகமுள்ள தாங்கள், அதைப் பொருட்டாகவெண்ணி, இவ்வளவு அரைகுறையான ஆலோசனையையுடையவன் நிச்சயமாகவும் தீர்மானமாகவுமின்றிக் கண்டனவற்றிலிருந்து, தங்களுக்கொரு வருத்தத்தை உண்டு பண்ணிக்கொள்ள வேண்டாம். தங்கள் மன நிறைவுக்கேனும், நன்மைக்கேனும், என் ஆண்மைக்கேனும், யோக்கியதைக்கேனும், விவேகத்துக்கேனும், என் நினைவுகளைத் தங்களுக்குத் தெரியப்படுத்துவது தகுதியன்று.

**ஒதேல்** :—உன் கருத்தென்ன?

**இயா** :—என் பக்ஷமுள்ள ப்ரபோ! புருஷருக்கும் மகளிருக்கும் நற்பெயரே உரிமையான ஆத்ம பூஷணம்: ஒரு பணப்பையைத் திருடுகிறவன் ஒரு துரும்பையே திருடுகிறான்; அது அற்பமானது, ஒன்றுமேயில்லை; என்னுடையதாயிருந்தது, அவனதாயிருக்கிறது, அதேவிதமாக எத்தனையோ ஆயிரம்பேர்களுக்கு அடிமையாயிருந்திருக்

கிறது; ஆனால், என் நற்பெயரைத் திருடுகிறவனோ, தன் செல்வத்தையும் அதிகப்படுத்தாது, என்னையும் வெறும் ஏழையாக்கி விடுகிறான்.

ஒதேல்:—சுவாமி சத்தியமாக, உன் எண்ணங்களை யறிந்தே தீர்வேன்.

இயா:—என் இருதயம் தங்கள் கையிலிருந்தாலுமே யது முடியாதே; அது என் வசமிருக்க, நான் ஒருபொழுதும் இணங்கேன்.

ஒதேல்:—ஹா!

இயா:—ஐயோ! ப்ரபோ! சமுசயத்துக்கிடங்கொடாதேயுங்கள்; தனக்கிடங்கொடுத்துத் தன்னைப் போஷிப்பவர்களைப் புதிது புதிதான பொய்த் தோற்றங்களால் மயக்கிப் பழிவாங்கும் பைங்கட் பைசாசம் அது. தன் மனைவி வியபிசாரத்தை உறுதியாயறிந்து, அவள் மேற் காதலேயில்லாதவன் இன்பமாகவே வாழ்கிறான்; ஆனால், பெருங் காதலுடன் சமுசயத்தையும், சந்தேகத்துடன் பலமான ஆசையையும் உடையவன், ஒவ்வொரு நிமிஷத்திலும், அந்தோ! என்ன நரகவேதனைக்குள்ளாகிறான்!

ஒதேல்:—ஐயோ, கொடுந்துன்பம்!

இயா:—எளியவனுக்குத் திருப்தியிருந்தால், அவன் தனவான், போதுமான செல்வமுள்ளவனே; ஆனால் அளவு கடந்த செல்வமிருந்தும், ஏழையாய்விடலாமென்ற பயம் எப்பொழுதுமிருந்தால், அவன் வெறும் ஏழையே;—என் இனத்தார் ஒருவருமே சமுசயகுணமுறாதபடி கடவுள் கிருபைசெய்து காக்க!

ஒதேல்:—ஏன், ஏனிப்படி? புதிய புதிய சந்தேகங்களுடன், கலைமாறுஞ் சந்திரனைப்போல், நானும் மாறிமாறிச் சமுசயத்திலேயே என் வாழ்நாளைக் கழிப்பேனென்று எண்ணுகின்றனையா நீ? இல்லை; சமுசயமுற்றால் உடனே யுண்மையறிந்து தெளிவுறுவேன்; நீ ஆலோசிக்கிறபடி, தோன்றியவாறெல்லாம், வெறுஞ் சமுசயங்களை என் ஆத்மார்த்தமான வேலையாக்கிக்கொண்டால், நீ யென்னை யொரு ஆடென்றே* மதிக்கலாம். என் மனைவி அழகாயிருக்கிறாள், நன்றாய்ச் சாப்பி

---

* நிலையின்றி யொன்றுவிட்டொன்றாகப் பலபூண்டுகளிலும் வாய் வைத்து மேயும் பிராணி.

டுகிறாள், பலருடன் பழக விரும்புகிறாள், தடையின்றிப்பேசுகிறாள், நன்றாய்ப் பாடுகிறாள், வாத்தியம் வாசிக்கிறாள், நிர்த்தனஞ்செய்கிறாள், என்று சொல்வதெல்லாம் எனக்குச் சமுசயத்தை யுண்டுபண்ணாது. கற்பிருக்குமிடத்தில் இவையெல்லாம் மேலான நற்குணங்களே: அன்றியும், என் யோக்கியதைகள் சொற்பமானவை யென்பதை நினைந்து, நான் அணுவளவு பயத்தையாவது, அவள் வரம்புகடந்து நடப்பாளென்ற சமுசயத்தையாவது அடையமாட்டேன்; ஏனெனின், அவள் தன் கண்களாற் பார்த்தே யென்னை விரும்பிக்கொண்டாள். இல்லை, இயாகோ; நான் பார்த்தே சமுசயமுறுவேன்; சமுசயமுற்றால் பரீக்ஷை பார்ப்பேன்; பின்பு, ருஜுவின்பேரில் ஒரே துணிவுதான்,—காதலோ அல்லது சமுசயமோ உடனே தீரவேண்டியதே.

இயா:—எனக்கிது சந்தோஷமே; ஏனெனின், தங்கள்மேலுள்ள விசுவாசத்தையும், என் கடமையையும், இப்போது ஒளிப்பின்றிக்காட்ட ஏதுவுண்டு; ஆதலின், என் கடமையைச் செலுத்துகிறேன், தாங்கள் இதைக் கேளுங்கள்:—நான் ருஜுவைப்பற்றியதற்குட் பேசவில்லை. தங்கள் மனைவியாரைக் கவனியுங்கள்; காஷியோவினிடம் அவர்கள் நடந்துகொள்வதையுற்றுப்பாருங்கள்; தங்கள் நோக்கம் இப்படியிருக்கட்டும், சமுசயமும் வேண்டாம், திடமான நம்பிக்கையும் வேண்டாம்: தங்கள் நிஷ்களங்கமான பெருந்தன்மை, கபடமற்ற தங்கள் உதார குணத்தினாலேயே கேடுறுவது எனக்குச் சம்மதமில்லை; நன்று கவனியுங்கள்; எங்கள் தேசகுணம் எனக்கு நன்றாகத்தெரியும்; வெநிஸ் நகரத்தில் (பெண் பிள்ளைகள்) கடவுளறிய எவ்வளவோ துர் விளையாட்டுக்கள் செய்வதுண்டு; தங்கள் புருஷர் காணாது மறைப்பதுமட்டுமே யொரு கவலை; அவர்கள் சிறந்த மனச்சாக்ஷியெல்லாம், வெளிக்குத் தெரியாது மறைக்கவேண்டுமென்பதேதவிரச் செய்யலாகாதென்பதல்ல.

ஒதெல்:—அப்படியா சொல்கிறாய்?

இயா:—தங்களை மணம்புரிவதில் தன் தகப்பனையே அவர்கள் வஞ்சித்தார்கள்; தங்கள் ரூபத்தைக் கண்டு பயந்து நடுங்குவதுபோல் நடிக்கும்பொழுதே, அவர்கள் அதை மிகவும் காதலித்தார்கள்.

ஒதேல்:—ஆம், அப்படியே செய்தாள்.*

இயா:—பின்னை யென்ன, பாருங்கள்; இவ்வளவு இளமையி லேயே, தன் தகப்பனை மந்திரவாதமென்றெண்ணும்படி, சுவர் வைத் தாற்போல் அவர் கண்ணைமுழுதும் மறைத்து மேலுக்கு நடிக்கவல்ல வள்,—ஆனால் இதெல்லாம் நான் சொல்வது சரியல்ல; தங்கள்மேலு ள்ள மிக்கவாஞ்சையாற் பேசியதைத் தயைசெய்து பொறுத்தருளப் பிரார்த்திக்கிறேன்.

ஒதேல்:—என் வாழ்நாள் முழுதும் நானுனக்குக் கடமைப்பட்ட வனே.

இயா:—இது தங்கள் மனவுற்சாகத்தைச் சிறிது கலக்கிவிட்டதா கத் தோன்றுகிறதே.

ஒதேல்:—துளிகூடவில்லை; துளிகூடவில்லை.

இயா:—மெய்யாகவே, அப்படிக் கலக்கிவிட்டதென்றே அஞ்சு கிறேன். நான் பேசியது, தங்கள் மேலுள்ள பக்ஷத்தைப்பொறுத்த தாகக் கொள்வீர்களென்று நம்புகிறேன்;—ஆனால், இது தங்கள் மன த்தை யிளக்கிவிட்டதாகவே தெரிகிறது;—நான் சொன்ன வார்த்தைக ளால் சமுசயப்பட்டதோடுமட்டும் நின்றுகொள்ளும்படிக்கும், அதற்கு மேல் விசேஷமாக ஏதாவது கற்பித்துப் பிரமாதமாக்காதபடிக்கும், நான் தங்களைப் பிரார்த்தித்துக்கொள்ளவேண்டும்.

ஒதேல்:—அப்படிச் செய்யமாட்டேன்.

* இம்மூன்று சிறிய சொற்களே டெஸ்டிமோனாவின் தலையிலெழுதிய விதியாயின; இயாகோ குறிப்பாய்ச் சுட்டிய வஞ்சனை பொய்யென்று ஒதெல் லோவால் மறுக்கமுடியவில்லை. தன் நாணத்தாலும், தந்தை யெவ்வாறு கொள்வரோவென்றஞ்சியும், டெஸ்டிமோனா, மோரியன்மேலுள்ள காதலைத் தன் தந்தையறியாவண்ணம் நடித்து மறைத்திருந்தாள்; கரவான இவ்வொ ழுக்கமே, அவளை யொருபாதகன் கெடுத்தற்கு இப்பொழுது துணைக்கருவியா யிற்று. தினைத்துணைக்குற்றம் பனைத்துணையாய் விளைந்துவிட்டது; ஆழ்ந்து நோக்கின், பொய்ம்மையே மிகக் கொடிது.

**இயா** :—ப்ரபோ, தாங்கள் அப்படிச் செய்துவிட்டால், நான் சிறிதும் கருதாத தீப்பயனை என்பேச்சு விளைவிக்கும். காஸியோ என் உற்ற நண்பர் :—ப்ரபோ, தாங்கள் மனந் தியங்குகிறீர்களே.*

**ஒதெல்** :—இல்லை, அதிக வருத்தமில்லை :*—டெஸ்டிமோனு கற்புடையாளென்றே யெண்ணுகின்றேன்.

**இயா** :—அவ்வாறேயவர்கள் நீடூழிவாழட்டும்; தாங்களும் அவ்வெண்ணத்தோடே நீடூழிவாழ்வீர்களாக!

**ஒதெல்** :—ஆயினும், இயற்கை யெப்படித் தன் சுபாவத்தினின்றே மாறி,—

**இயா** :—ஆ, அதுதான் குறி :—தங்களிடம் துணிந்துதான் சொல்கிறேனே,—இயற்கையில் எல்லாப் பிராணிகளும் (இனமறிந்து சேர்வது)போலன்றி, ஜநநபூமி, மேனி, அந்தஸ்து, இவையெல்லாம் பொருந்திய பலவரன்களையும் வெறுத்துத்தள்ளி,—சீ! அப்படிப்பட்டவளிடத்தில் அதிவிகாரமான சித்தவிருத்தியும், கேவலம் தாரதம்மியமில்லாமையும், சுபாவ விரோதமான நினைவுகளுமிருக்குமென்று யூகிக்கலாம் :—ஆனால் என்னை 'மன்னி' யுங்கள்; அவள் மனம்பிறந்திய நிதான அறிவின் வழிப்பட்டுத் தங்களைத் தன் தேசத்து மற்ற ரூபவான்களுடன் ஒப்பிட்டுப்பார்த்து, ஒருவேளை கிலேசமுறக்கூடுமென்று பயப்படக் காரணமிருப்பினும், இப்பொழுது நான் சொன்னதெல்லாம் அவளையே குறிப்பிட்டுப் பேசியதாகக் கொள்ளவேண்டாம்.

**ஒதெல்** :—சரி, நீ போய்வா; இன்னும் விசேஷமாக ஏதாவது கண்டால் எனக்குத் தெரிவி: குறிப்பாகக் கவனிக்கும்படி உன் பெண்சாதியை நியமி. † நீ போ, இயாகோ.

* அநுதாபப்பட்டிரங்குவதுபோற் கூறுமொழிகளால், பின்னும் பின்னும் ஆழமாகப்பாயக்குத்தித், தான் உண்டுபண்ணும் மனப்புண்களின் கொடிய வேதனையை, (இதழ் நக்கி ருசிபார்த்துக், குற்றுயிரொடு துடிக்கும் இடப ஏற்றின் இரத்தத்தை உறிஞ்சிப் பருகுங் கொடும்புலியின் மனமகிழ்ச்சி போன்ற மனமகிழ்ச்சியுடன்) இப்பாதகன் அதிகப்படுத்தும் சாதுரியமும், காம்பீரிய திரனை மோரியன், தன் மனோவியாகுலத்தை மறைக்கப் படும் கஷ்டமும், எவ்வளவு பொருத்தமாய்க் காட்டப்பட்டிருக்கின்றன!

† ஒதெல்லோவின் சுபாவமான பெருந்தன்மையும், சமுசய குணத்தாலுண்டாகும் இழிதன்மையும், ஒருங்கு வெளியாகின்றன: தன் பத்தினியைப்பற்றி இயாகோ அவதூறாகப் பேசுவதைக்கேட்க அருவருத்து, அவனைப் போய்விடச்சொல்லுகிறான்; ஆயினும், சமுசய விஷத்தீட்டால் அவள்மேல் ஒற்று நியமிக்கும் இழிசெயலை விரும்புகிறான்

இயா :—[போய்க்கொண்டே] ப்ரபோ, விடைபெற்றுக்கொள்கிறேன்.

ஒதேல் :—நான் ஏன் கல்யாணஞ் செய்துகொண்டேன்?—யோக்கியனுன இவன், தான் வெளிப்படுத்துவதைவிட எவ்வளவோ அதிகமாகப்பார்த்தும் அறிந்துமிருக்கிருனென்பதிற் சந்தேகமில்லை.

இயா :—[திரும்பிவந்து] ப்ரபோ, இந்த விஷயத்தில் தாங்களிதற்குமேல் இன்னும் ஊன்றிப்பார்க்கவேண்டாமென்று பிரார்த்திக்கிறேன்; நாளடைவில்தானே தெரியும்: காஸியோவைத் திரும்பவும் உத்தியோகத்தில் வைப்பது தகுதியே; ஏனெனில் அவர் வெகு சமர்த்தராகவே, வேலை பார்க்கிருரென்பது நிச்சயமே:* ஆயினும், தாங்கள் மட்டும் அவருக்கு வேலையை யுடனே கொடுக்காது, சிறிது ஆலஸ்யம் செய்யின், அதனுல் அவர் நடையையும், அவர் (வேலையைப் பெறச் செய்யும்) உபாயங்களையும் அறிந்துகொள்ளலாம்: அவர் உத்தியோக நியமன விஷயத்தில், தங்கள் மனைவியார் விசேஷ ஆவலுடன் மன்றுடுகிருர்களா என்பதைக் கவனியுங்கள்: அதில் நிரம்பவும் அறிந்துகொள்ளலாம். இதன் மத்தியில், போதுமான காரணங்களின்றியே நான் சமுசயப்பட்டதாகவிருக்கட்டும்;—அப்படி யொருவேளையிருக்கலாமென்றெண்ணவும், தக்க ஏதுவிருக்கிறது,—ஆகவே தங்கள் மனைவியாரைக் குற்றமற்றவராகவே பாவிக்கத் தங்கள் மேலான கனத்தைப் பிரார்த்திக்கிறேன்.

ஒதேல் :—என்னடக்கையால் ஏதாவது வெளியாய்விடுமென்று நீ அஞ்சாதே.

இயா :—நான் மறுபடியும் விடைபெற்றுக்கொள்கிறேன்.

[வெளிப்போதல்.]

ஒதேல் :—இந்தப் பயல் மிகவும் நம்பத்தக்கவன்; மனிதர் நடபடிக்கைகளையெல்லாம் அநுபவத்தில் நன்கறிந்தவன். அவள் மீறிய நடக்கைமட்டும் உறுதியாய்த் தெரிந்துவிட்டால், அவளை அடக்கியாளும்

---

* இப்பொழுது காஸியோவை மெய்ச்சிப்பேசினுல், மோரியனுக்கு அவன்மேல் அதிக வெறுப்பும் கோபமும் உண்டாகுமாதலாலும், அவன் உபசேனுபதி வேலை 'காலி' யாயிருப்பதை ஞாபகமூட்டித் (பின் நேருகிறபடி) தானடையவெண்ணியும், இவ்வாறு பேசுகிருன். ஆ! ஆ! என்ன சாதுரியம்!

கைக்கயிறுகள்* என்னின்னுயிர்ப்பாசங்களாகவே யிருப்பினும், எக்கேடுகெட்டாலுமே சரியென்று அவள் ஆசையை உதறிவிடுவேன். ஒரு வேளை, நான் கறுப்பாயிருப்பதினாலோ, விடபுருஷர்களிடத்திலுள்ள வாக்கு நயமும் சாதுரியமும் என்னிடத்தில்லாமையினாலோ, அல்லது சிறிது வயது தளர்ந்தவனாயிருத்தலினாலோ,—ஆனால் வயது அவ்வளவு ஆகிவிடவுமில்லை—அவள் கை தவறிவிட்டாள்; என் மானம் அழிந்துவிட்டது; இனி எனக்கு அவளை வெறுப்பதைத் தவிர வேறு போக்கில்லை. அந்தோ! இந்த மெல்லியலார்களை நமக்குச் சொந்தமாகவழைக்கும் பாத்தியதையைமட்டும் விவாகத்தால் அடைகின்றோமேயன்றி, அவர்கள் ஆசாபாசங்களும் நமக்குரியனவேயென்று, உறுதியாய்க்கூற முடியாமலிருப்பது ஒரு சாபத்தீடே! நான் காதலிக்கும் பொருளில், பிறர் உபயோகங்களுக்காக ஒரு சிறு பாகமும் விட்டிருப்பதினும், பாழறையில் நீராவியையுண்டுவாழும் ஒரு தேரையாகவேனும் இருப்பதே மேல். ஆயினும், இது உயர்ந்த பதவியிலிருக்கும் யாவர்க்குமுள்ள ஒரு தொத்து நோய்; இவ்விஷயத்தில் அவர்கள் தங்களில் தாழ்ந்தோரினும் சுதந்தரங் குறைந்தவர்களே; இதுவும் சாவைப்போல் விலக்க முடியாத ஒரு விதிவசம்: கர்ப்பசலன காலத்திலேயே, இந்த இருகிளை நோயும்† நமக்கு விதிக்கப்படுகிறது.—டெஸ்டிமோனா வருகிறாள்:—அவளே மோசக்காரியானாற் பின்பு தெய்வம் தன்னையே பரிகசித்ததாகும்;‡ நான் அதை நம்பவேமாட்டேன்.

[டெஸ்டிமோனாவும் எமிலியாவும் திரும்பிப் பிரவேசித்தல்.]

**டெஸ்டி**:—என்ன, பிராணநாதா! தங்கள் போஜனமும், தங்களால் அழைக்கப்பட்ட இத்தீவினராகிய உயர்குல விருந்தினரும், தங்கள் வரவை நோக்கி காத்திருக்கின்றனரே.

**ஒதேல்**:—என்மேல் பிசகே.

* இவ்வுவமானம் இராஜாளி வேட்டையைத் தழுவியது.

† வியபிசாரியான மனைவியையுடையவன்.

‡ அழகுள்ள விடத்திற் சீலமும் அமைந்திருக்குமென்ற நியாயம் தவறுதலால்.

டெஸ்டி:—ஏன் அவ்வளவு சடைவாய்ப் பேசுகிறீர்கள்?* உடம்பு சரியாயில்லையா?

ஒதெல்:—என் நெற்றியில் இங்கு கொஞ்சம் வலிக்கிறது. †

டெஸ்டி:—நிச்சயமாகவே, அது கண் விழித்ததினால்தான்; அது மறுபடியும் போய்விடும்: என் கைதுவட்டியால் பலமாய்க் கட்டுகிறேன், ஒருமணி நேரத்துக்குள்ளேயே அது சொஸ்தமாய்விடும்.

ஒதெல்:—உன் துவாலை மிகச்சிறிது, போதாது; [அவன் கைக்குட்டையைத் தள்ளுகிறான்; அது கீழே விழுந்துவிடுகிறது.†] அது சும்மாவிருக்கட்டும்; வா, நாம் உள்ளே செல்வோம்.

[ஒதெல்லோவும் டெஸ்டிமோனாவும் போதல்.]

எமிலி:—(தனிமொழி) இந்தத் துவாலையகப்பட்டது எனக்குச் சந்தோஷமே: காதற்சின்னமாக அவளுக்கு மோரியர், முதல் முதல் கொடுத்தது: மனமுரணுள்ள என் புருஷர் இதைத் திருடித்தரும்படி நூறுதரம்‡ என்னைப் பரிந்து கேட்டிருக்கிறார்; ஆனால் எப்பொழுதும் தவறவிடாது வைத்திருக்கும்படி அவளிடத்திற் பிரமாணம் வாங்கி, அவர் அதைக் கொடுத்திருப்பதினால், அவளுக்கு அதன்மேல் எவ்வளவோ பிரியம்; அதை முத்தமிட்டு அதோடு கொஞ்சிப் பேசும்படி யெப்பொழுதும் அதைத் தன் கையிலேயே வைத்துக்கொண்டிருக்கிறாள். இந்த வேலையைப்போல் ஒரு பிரதிசெய்துகொண்டு, இயாகோவுக்குக் கொடுப்பேன்; அவர் அதை யென்ன செய்வாரோ அது சுவாமிக்குத்தான் தெரியும், நானறியேன்; அவர் மனோபீஷ்டத்தைத் திருப்திசெய்யும்பொருட்டே நானிப்படிச் செய்கிறேன்.

* மகா வீரனான ஒதெல்லோவின் குரலையும் தாழ்த்தும்படி அவன் மனத்தில் நிகழும் வியாகுலத்தின் கடுமையையும், தன் கணவன் குரல் சிறிது தளர்ந்திருப்பதையும் கவனித்து விசாரமுறும் டெஸ்டிமோனாவின் அன்பையும் ஆதரவையும், இது நன்கு விளக்குகின்றது.

† உண்மையை யுரையாது இவ்வாறு ஒரு சிறு பொய்கூற, அது காரணமாகக் கைக்குட்டை தவற, அதனால் பெரிய ஆபத்து விளையும்படி நேர்ந்தது.

‡ நெடுங்கால நிகழ்ச்சியைக் குறிக்கின்றது.

[இயாகோ திரும்பிப் பிரவேசித்தல்.]

இயா :—என்ன, இங்கே தனியே என்ன செய்கிறாய் ?

எமிலி :—அதட்டாதேயுங்கள் : உங்களுக்கு ஒன்று வைத்திருக்கிறேன்.*

இயா :—எனக்கு ஒன்று! அது சாதாரணமானதே—

எமிலி :—ஆ!

இயா :—பெண்டாட்டி மூட்டாளாயிருத்தல்.

எமிலி :—ஓ, இவ்வளவுதானா ? அந்தக் கைக்குட்டையைத் தந்தால் இப்பொழுது எனக்கு என்ன தருவீர்கள் ?

இயா :—எந்தக் கைக்குட்டை ?

எமிலி :—எந்தக் கைக்குட்டையா ! என், மோரியர் முதலில் டெஸ்டிமோனாவுக்குக் கொடுத்ததே ; நீங்கள் எத்தனையோ † முறை திருடும்படி சொன்னதே.

இயா :—அவளிடமிருந்து திருடிவிட்டாயா என்ன ?

எமிலி :—இல்லை ; அவள் அஜாக்கிரதையால் கீழே தவறி விழுந்தது ; நானும் அந்தச் சமயத்தில் இங்கிருந்தேன், எடுத்துக்கொண்டேன். இதோ இருக்கிறது பாருங்கள்.

இயா :—நல்ல குட்டி ; என் கையில் கொடு.

எமிலி :—அதைத் திருடிக்கொடுக்கும்படி யிவ்வளவு விருப்பமாய்க் கேட்டீர்களே : அதை யென்ன செய்யப்போகிறீர்கள் ?

இயா :—[அதைப் பிடுங்கிக்கொண்டு] என் அது என்னவானாலும் உனக்கென்ன ?

---

* கைக்குட்டையைப்போல் பிரதிசெய்து தன் கணவனுக்குக் கொடுப்பது பிரதம உத்தேசம் ; ஆனால் உடனே அவன் வந்துவிடவே, அவன் வெடுவெடுப்பை மாற்றவெண்ணி, அதையே கொடுத்துவிடத் துணிகிறாள். இவ்வற்பவிஷயத்திலும், அவள் சித்தத்தின் திடமின்மையையும், சமயத்துக்கேற்ப எளிதில் மாறுந் தன்மையையும் கவி காட்டியிருக்கிறார்.

† நெடுங்காலக் குறி.

எமிலி :—ஏதாவது முக்கியமான விஷயத்துக்கில்லாவிடின், அதைத் திரும்பத் தந்துவிடுங்கள். ஐயோ பாவம்! அது காணுமற்போனது தெரிந்தவுடன், அந்த அம்மாளுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்.

இயா :—நீ அறியாதவள்போலிருந்துவிடு ; எனக்கு அது ஒரு காரியத்துக்கு வேண்டியிருக்கிறது. போ, என்கூட இராதே. [எமிலியா வெளிப்போதல்] (தனிமொழி) காஸியோ கண்டெடுக்கும்படியிந்தக் கைக்குட்டையை அவன் தங்குமிடத்தில் தவறவிடுவேன். காற்றைப்போல் இலேசான அற்ப சங்கதிகளுங்கூட, சமுசயமுற்ற நெஞ்சத்தார்க்கு, வேதவாக்கிய அத்தாட்சிகளைப்போல் பலமான ருஜுக்களாகின்றன : இதுவும் ஏதாவது சிறிது செய்யக்கூடும். இதற்குள்ளேயே மோரியன் என் விஷத்தால் மனந்திரிகின்றான் :—மோசகரமான சித்தவிருத்திகள், விஷத்தின் சுபாவத்தையே யுடையன ; பெரும்பாலும் முதலில் அவைகளின் அரோசிகம் தெரியாது ; ஆனால் இரத்தத்தில் சிறிது உறைத்துவிட்டால், கந்தகச்சுரங்களைப்போல் பற்றியெரியும்.—இப்படிச் சொன்னேனல்லவா :—(திருஷ்டாந்தமாக) பார், அதோ அவன் வருகிறதை! கசகசாவில்லை, மயக்கமருந்தில்லை, உலகத்துள்ள வேறெந்த மதுவுமேயில்லை, நேற்று உன்னதாயிருந்த இனிய நித்திரையை, ஒன்றுமே உனக்கினி யொருபொழுதும் கொடுக்கமாட்டாது.

[ஒதெல்லோ திரும்பிப் பிரவேசித்தல்.]

ஒதேல்:—ஹா ! ஹா ! என்னை மோசஞ் செய்தாளா ?

இயா :—ஏன், என்ன சங்கதி சேனாபதி ! அந்த நினைவை விட்டுவிடுங்கள்.

ஒதேல் :—என் கண்முன்னில்லாதே! ஒழி! என்னைச் சித்திரவதைக்குள்ளாக்கிவிட்டாய் :—சிறிதே தெரிந்திருப்பதினும், அதிகமாய் அவமானமடைந்திருத்தலே மிகத் திறமென்பது சத்தியம்.

இயா :—ப்ரபோ, இப்பொழுதென்ன !

ஒதேல்:—அவள் இரகசியமாய் அநுபவித்த காமாநுபோகங்களைப்பற்றி எனக்கு ஏதேனும் தெரியுமா ? நான் காணவுமில்லை,

நினைக்கவுமில்லை, அதனால் எனக்கு வருத்தமுமில்லை, மற்றை யிரவு* உல்லாசமாய்க் களித்துச் சுகமாய்த் தூங்கினேன்; அவள் அதரங்களில் காஸியோவிட்ட முத்தங்களை நான் காணவில்லை: கொள்ளை போனதை யும், கொள்ளைபோன பொருளின்மையையும் அறியானாயின், கொள்ளை கொடுத்தவனும் கொள்ளை கொடுத்தவனோ?

இயா:—இதைக்கேட்க எனக்கு வருத்தமாயிருக்கிறது.

ஒதேல்:—மிகத் தாழ்வுற்ற போர்ச்சேவகர் உள்பட, பொது வாய் இராணுவம் முழுவதுமே அவள் இனிய சரீரத்தை அனுபவித்திரு ப்பினும், எனக்குமட்டும் ஒன்றுந் தெரியாதிருந்தால் நான் சந்தோஷ மாகவே இருந்திருப்பேன். இப்பொழுதோ, அந்தோ! மனச் சமாதா னமே, மீளாவிடைகொள்! மனநிறைவே, விடைகொள்! தலைச்சீராவில் தோகைகளணிந்த துரகவீரர்காள், பேராசையையும் ஓர் அறமாக்கும் பெரிய யுத்தங்களே, விடைபெறுங்கள்! அந்தோ! போமின்! கனைக் கும் பரியே, விடைகொள்! சில்லென்றொலிக்கும் எக்காளமே, உற்சா கத்தை எழுப்பும் நகராவே, செவியைத் துளைக்கும் கொம்பே, இராஜ ரிகமான விருதுக்கொடியே, மகத்துவ யுத்த சம்பந்தமான காம் பீரம் ஆடம்பரமுதலிய உபகுணங்களே, எல்லீரும் விடைபெறுங்கள்! அந்தோ! என்றுமுள்ள ஜோவ்† தேவரின் பயங்கரமான இடிமுழக் கத்தைப்போல் கதறும் வன்றொண்டைகளையுடைய மரணத்தை விளைக் கும் பீரங்கி யந்திரங்களே, விடைபெறுங்கள்! ஒதெல்லோவின் உத்தி யோகம் போய்விட்டது.‡

இயா:—இது தகுமோ, ப்ரபோ?

ஒதேல்:—அட பாதக! என் காதலி வியபிசாரி யென்பதை நிச்ச யமாய் ருஜுப்படுத்தவேண்டும்,—இது உறுதியாயிருக்கவேண்டும்; என க்குப் பிரத்தியக்ஷமாய்க் காட்டு.

[அவன் முன் கழுத்தைப் பிடித்துக்கொண்டு]

* பல்லிரவு கழிந்தாற்போல் நெடுங்காலத்தைக் குறிக்கின்றது.

† ரோமஜாதியாரின் முக்கிய கடவுளின் பெயர்.

‡ இத்துணை மானக்கேடு நேர்ந்தபின்பு உயிர்வாழ்க்கையே அரியதாக, முன்போல் உத்தியோகத்திலிருத்தல் சிறிதும் முடியாதென்பது கருத்து.

இல்லாவிட்டால், என் நித்தியமான ஆத்மாவின்மேல் ஆணை, கிளர்ந்தெழும் என் கோபத்துக்கெதிராவதினும், ஒரு நாயாகவேனும் நீ பிறந்திருப்பின் நலமாயிருந்திருக்கும்!

இயா:—இவ்வளவுக்கு வந்துவிட்டதா

ஒதேல்:—என் கண்ணுக்குக் காட்டு; அல்லது அற்ப சந்தேகத்துக்கும் சிறிதும் இடையில்லாதபடி, அவ்வளவு திடமாக ருசுப்படுத்த வேணும் செய்; இல்லாவிடின், உன்னுயிருக்கு முடிவே!

இயா:—கௌரவப்ரபோ,—

ஒதேல்:—அவளையும் பழிசார்த்தி, என்னையும் வதைக்கிறதாயிருப்பின், தேவாராதனையை முற்றிலும் நிறுத்திவிடலாம்; செய்த பாவங்களுக்கிரங்கி வருந்துவதை முழுவதும் துறந்துவிடலாம்; பாதகத்தின் மேற்பாதகமாகச் செய்து சுமத்தலாம்; விண்ணுலகு கண்ணீர் பெருக்கவும், மண்ணுலகு பிரமித்து மலைக்கவும் தகுமான கிருத்தியங்களைச் செய்யலாம்; ஏனெனின், உன்னை நரகத்திலாழ்த்த, அதினும் (அவளைப் பழிசார்த்தி யென்னை வதைப்பதினும்) கொடிதாக நீ யொன்றுமே செய்யமுடியாது.

இயா:—ஐயோ தருமமே! ஐயோ தெய்வமே, பொறுத்தருள்! நீயும் ஒரு மனிதனோ? உனக்கும் ஒரு ஆத்மாவாவது புத்தியாவது இருக்கிறதா? உன்னைக் கடவுள்தான் காப்பாற்றவேண்டும்! என் வேலையை வாங்கிக்கொள்.—என் யோக்கியதையையே ஒரு துர்க்குணமாக்கிவிட்டேனே, நான் ஒரு துர்ப்பாக்கிய மூடனே!—ஐயோ, பாழான மூடனே நான்! ஓ உலகமே! தெரிந்துகொள்; தெரிந்துகொள்; நெறியாகவும் நாணயமாகவும் ஒழுகுவது ஆபத்துக்கிடமே.—இந்த நற்புத்தி போதித்ததற்காக உனக்கு வந்தனம்; உண்மையான அன்பு இப்படிப்பட்ட தீங்கை விளைப்பதால், இனிமேல் ஒரு நண்பனையுமே நேசிக்கமாட்டேன்.

ஒதேல்:—இல்லை, நில்லு;—நீ யோக்கியனாகவே இருக்கவேண்டும்.

இயா:—நான் புத்திசாலியாகவன்றோ இருக்கவேண்டும்; ஏனெனின், யோக்கியதையோ ஒரு மூடன், தான் எதன்பொருட்டு உழைக்கின்றதோ அக்காரியத்தையே இழந்துவிடுகிறது.

**ஒதேல் :**—உண்மையாகவே, என் மனைவி கற்புடையவளாயிருக்கலாமென்றெண்ணுகிறேன்; அப்படி யில்லையென்றும் எண்ணுகிறேன்; நீ யோக்கியனென்றே எண்ணுகிறேன், அப்படி யில்லையென்றும் எண்ணுகிறேன். எனக்கு ஏதாவது ருஜு வேண்டும். சந்திரமண்டலத்தைப்போல் பிரகாசமாயிருந்த அவள் பெயர், இப்பொழுது என் முகமேபோல் மாசடைந்து கறுத்திருக்கின்றது.—கயிறுகளோ, கத்திகளோ, விஷமோ, நெருப்போ, (ஆழ்ந்தால்) மூச்சை யிறுக்கும் நீரோடைகளோ, ஏதாயினுமிருக்க, நானிதைச் சகித்திரேன்.—உண்மை தெரிய வேண்டுமே!

**இயா :**—தெரிகிறது, ஐயா, தாங்கள் தாபத்தால் விழுங்கப்பட்டிருக்கிறீர்கள்: தங்களுக்கிதையேன் சொன்னேனென்று மனம் வருந்துகிறேன். உண்மையா தெரியவேண்டும்?

**ஒதேல் :**—தெரியவேண்டுமா! இல்லை, தெரிந்தே தீருவேன்.

**இயா :**—தெரிந்துகொள்ளலாம்: ஆனால் எப்படி? எப்படித் தங்கள் மனம் திருப்தியடையவேண்டும், ப்ரபோ? தாங்களே நேரில் பிரத்தியக்ஷமாய் மேற்பார்க்க விரும்புகிறீர்களா?

**ஒதேல் :**—ஓ!

**இயா :**—அப்படிப் பார்க்கும்படி அவர்களைக் கொண்டுவருவது, சிரமமும் கஷ்டமுமான வேலையென்றெண்ணுகிறேன். பின்னையென்ன? பின்னையெப்படி? நான் என்ன சொல்லட்டும்? எவ்வாறு சந்தேகம் தெளியும்? வெள்ளாடுகளைப்போலத் துணிகரமுடையவர்களாயும், குடிவெறிகொண்ட மூடர்களைப்போல மானமற்ற தூர்த்தர்களாயும் அவர்களிருப்பினுங்கூட, இதைத் தாங்கள் நேரிற் பார்ப்பது முடியாது. ஆயினும், நான் சொல்வது, அநுமான சங்கைகளும், உண்மை யின்னதென்று தெளிவாய்ச் சுட்டிக்காட்டும் பலத்த நம்பற்குரிய அநுசரணையான விஷயங்களும் தங்களுக்குப் போதுமாயின், ருஜுச்செய்யலாம்.

**ஒதேல் :**—அவள் கற்பிழந்ததற்கு என் மனத்திற் பதிந்தூன்றக்கூடிய ஒரு காரணம் காட்டு.

**இயா :**—அது என் மனத்துக்கிசைந்த வேலையல்ல; ஆயினும் முட்டாள்த்தனமாய், என் மெய்ம்மையினாலும் தங்கள்மேலுள்ள பக்ஷத்தினாலுந் தூண்டப்பட்டு. இந்தவிஷயத்தில் நான் இவ்வளவுதூரம் தலையிட்

டுக்கொண்டபடியால், குறையும் முடிக்கிறேன். சில நாட்களுக்குமுன்* நான் காஷியோவுடன் படுத்திருந்தேன்; கொடிய பல்வலியால் நோவுண்டு, எனக்குத் தூக்கம் வரவில்லை. நித்திரைக்காலத்தில் தங்கள் சமாசாரங்களையெல்லாம் வெளிவிட்டுப் புலம்பும்படி, அவ்வளவு நெகிழ்ச்சியான சித்தத்தையுடையவர்கள் சிலபேருண்டு: இப்படிப்பட்டவர்களிலொருவர் காஷியோ: தூக்கத்தில் "இனிய டெஸ்டிமோனு, நாம் எச்சரிக்கையாயிருப்போம்; நம் காதலை மறைத்து வைத்திருப்போம்" என்று அவர் சொல்வது என் காதில் விழுந்தது; பின்பு, ஐயா, அவர் என் கையை வலுவாய்ப் பிடித்துக்குலுக்கி, "ஓ! அமிழ்தினும் இனியாளே" என்று சொல்லி, என் அதரங்களில் முத்தங்களை வேருடன் பிடுங்குவதுபோல, என்னையழுந்த முத்தமிட்டார்; பின்பு பெருமூச்செறிந்து, "ஐயோ பாழான விதி உன்னை மோரியனுக்குக் கொடுத்ததே" என்று கூறினார்.

ஒதேல்:—ஓ! அநியாயமே! அநியாயமே!

இயா:—என்ன, இது அவர் கனவுதானே.

ஒதேல்:—ஆயினும், இது, அதற்கு முன்னடந்த முடிவொன்றைக் குறித்தது; அது கனவேயாயினும், சமுசயத்துக்கு ஒரு பலமான ஆஸ்பதமே.

இயா:—ஆகவே, இது, சொற்பமான மற்ற ருஜுக்களைப் பலப்படுத்தக்கூடும்.

ஒதேல்:—அவளைத் துரும்பு துரும்பாய்க் கிழித்துவிடுகிறேன்.

இயா:—இல்லை, ஆயினும் ஆலோசித்துச் செய்யுங்கள்; இன்னும் ஒன்றையும் நாம் நேராகப்பார்க்கவில்லையே; அவளின்னும் கற்புடையவளாகவேயிருக்கலாம். இதைமட்டுஞ் சொல்லுங்கள்,—பூஞ்செடிபோலச் சித்திரவேலைசெய்துள்ள ஒரு கைக்குட்டையைத் தங்கள் மனைவியார் கையில் தாங்கள் சில சமயங்களிற் பார்த்ததில்லையா?

ஒதேல்:—அப்படிப்பட்டதொன்று நான் அவளுக்குக் கொடுத்தேன்; அதுதான் நான் முதல்முதல் கொடுத்த காதல் முத்திரை.

இயா:—அதெனக்குத் தெரியாது; ஆனால் அப்படிப்பட்ட கைக்குட்டையொன்று, [தங்கள் மனைவியாருடையதென்பது நிச்சயந்தான்.]

---

* நெடுங்காலகுறி.

இன்று காஸியோ (கையில் வைத்துக்கொண்டு) தாடி துடைப்பதை நான் பார்த்தேன்.

**ஒதேல்** :—அதாயிருந்தால்,—

**இயா** :—அதாயிருந்தாலும், அல்லது அவள் கைக்குட்டைகளில் வேறெதாயிருந்தாலும், அது மற்ற ருஜுக்களுடன் அவளுக்கு விரோதமான சாக்ஷியமாகிறது.

**ஒதேல்** :—அந்த அடிமைக்காரப் பயலுக்கு நாற்பதினாயிரம் பிராணன்களில்லையே! நான் பழிவாங்குதற்கு ஒரு ஜீவன் மிகவும் எளிமையே, மிகச்சொற்பமே! இப்பொழுதுதான் அது உண்மையென்று தெரிகிறது.—இதோபார், இயாகோ; என் ஆசையருமைகளையெல்லாம் இதோ ஆகாசத்திற் பறத்திவிட்டேன்; எல்லாம் ஒழிந்தது.—கறுத்த மனவன்மையே, நீ கிடக்கும் ஆழமான நரகக்குழியினின்றும் பழிவாங்குதற்பொருட்டு எழுவாயாக! ஓ, காதலே, என் இருதயத்தில் நீ புனைந்திருந்த கிரீடத்தையும், வீற்றிருந்த சிம்மாசனத்தையும் நீ துறந்து, கொடூரமான பகைமைக்குக் கொடுத்துவிடு; நெஞ்சமே, விஷப்பாம்புகளின் நாவுகளால் நிறைந்துள்ள நீ, வெம்பிப்பொங்குவாயாக.

**இயா** :—தயைசெய்து, சிறிது பொறுமைசெய்யுங்கள்.

**ஒதேல்** :—ஓ! இரத்தப்பழி, இயாகோ, இரத்தப்பழி!

**இயா** :—பொறுங்கள், என்கிறேனே; ஒருவேளை, தங்கள் மனம் மாறலாம்.

**ஒதேல்** :—ஒருகாலுமில்லை, இயாகோ; கருங்கடலின் சில்லென்ற நீரோட்டம், சிறிதும் பின்னிடாது மேன்மேலும் ஒரே முகமாகச் சென்று, புரோபாண்டிச், ஹெல்லெஸ்பாண்டென்னும் கடலையடைவது போலவே, இரத்தப்பழியை விரும்பும் என் ஆலோசனைகளும், அதிக வேகத்தோடு ஒருபொழுதும் திரும்பவேனும் இரக்கமுள்ள காதற்புறமாகப் பின்னுறவேனுஞ் செய்யாது, தக்க அளவு பெரிதான ஒரு எதிர்ப்பழியால் விழுங்கப்படும்வரையும், மேற்சென்றுகொண்டேயிருக்கும்.—[முழந்தாட் பணிந்து] இப்பொழுது, அதோ பளிங்குபோலத் தோன்றும் விண்ணுலகின்மேலாணைவைத்து, நான் கூறிய மொழிகளைத், தக்க பக்தியோடு புனிதமான பிரதிக்ஞைசெய்து, வற்புறுத்துகிறேன்.

இயா:—அதற்குள் எழுந்திராதேயுங்கள். [முழந்தாட் பணிந்து] எப்பொழுதும் உம்பர்க்கண் சுவாலிக்கும் ஜோதிகாள், எம்மைச்சுற்றி யுள்ள பூதியங்காள், நீவிரே சாக்ஷி,—தீங்குற்றிருக்கும் ஒதெல்லோ பிரபுவின் ஊழியத்துக்கு, இயாகோவாகிய நான், இப்பொழுது, என் மனோ வாக்குக் காயங்களின் பிரவர்த்தியை முற்றிலும் அர்ப்பணஞ்செய்வதைப் பார்த்துக்கொள்ளுங்கள்! அவர் கட்டளையிடட்டும், எவ்விதக் கொடுஞ்செயலாயிருப்பினும், கீழ்ப்படிந்து இயற்றுவதுதான் அவர் தீங்குகளுக்காக நான் என் பரிதாபத்தைக் காட்டுவதாகும்.

[அவர்கள் எழுகிறார்கள்.]

ஒதேல்:—வீணான வந்தனங்களாலன்றி, மனப்பூர்வமாக உன் நட்பை நான் தடையின்றி யேற்றுக்கொள்கிறேன்: இந்த நிமிஷத்திலேயே பணிவிடையும் நியமித்துவிடுகிறேன்: இன்னும் மூன்று நாட்களுக்குள், காஸியோ உயிரோடில்லையென்று நீ சொல்வதை நான் கேட்கவேண்டும்.

இயா:—என் நண்பர் இறந்துவிட்டார்; தங்கள் வேண்டுகோளின் பேரில் அது செய்யப்பட்டது; ஆனால் அவள் உயிரோடிருக்கட்டும்.

ஒதேல்:—அவளா! வா, என்னுடன் ஒரு தனியிடத்திற்கு வா; அந்த அழகிய பிசாசை விரைவிற் கொல்லும் வழி சிறிது ஆலோசித்துத் தேடிக்கொள்கிறேன். இப்பொழுது நீயே என் உபசேனாபதி.

இயா:—எப்பொழுதும் நான் தங்களவனே.

[வெளிப்போதல்.]

நாலாங்களம்:—முதற்களம் நிகழ்ந்தவிடமே.

(காலம்: பகல்.)

[டெஸ்டிமோனாவும், எமிலியாவும், விதூஷகனும் பிரவேசித்தல்.]

டெஸ்டிமோனா:—எடா! உபசேனாபதி காஸியோ தாழ்வலம்* அறிவாயா

---

* தங்குமிடம்.

**விதூஷ :**—அவர் எங்காயினும் தாழ்வலமுடையரெனச் சொல்லத் துணியேன்.

**டேஸ்டி :**—ஏன் ஏட ?

**விதூஷ :**—அவரோ யுத்தவீரர் : ஒரு யுத்த வீரர் தாழ்வலமுடையரெனச் சொல்லின், குத்துப்பழியே.

**டேஸ்டி :**—போட : அவர் கோள்வாய்* எங்கே?

**விதூஷ :**—அவர் கோள்வாயைத் தங்களுக்குச் சொல்லப்புகின், என் கோள்வாயைக்† கூறியதாகும்.

**டேஸ்டி :**—இதற்கேதாவது அர்த்தமுண்டா ?

**விதூஷ :**—அவர் தங்குமிடம் எனக்குத் தெரியாது : ஆகவே, நானாக ஓரிடத்தைக் கற்பித்துக்கொண்டு, அவர் கோள்வாயங்கிருக்கிறது என்று கூறினால், என் கோள்வாயையே நன்கு வெளிப்படுத்தினவனாவேன்.

**டேஸ்டி :**—அவரிருக்குமிடத்தை விசாரித்துத் தெரிந்துகொள்ளவல்லையோ ?

**விதூஷ :**—அவர்பொருட்டு உலகெலாம் பரிசோதிப்பேன் ; அதாவது வினவுவேன் ; மறுமொழியைத் தெரியப்படுத்துவேன்.

**டேஸ்டி :**—அவரைத் தேடிப்பிடித்து இங்குவரச்சொல் ; அவர் விஷயமாக என்னாதரை மனமிசையச் செய்திருக்கிறேனென்றும்,‡ எல்லாம் சீராய்விடுமென்று நம்புகிறேனென்றும் அவருக்குத் தெரியப்படுத்து.

**விதூஷ :**—இக்காரியம் மனிதன் புத்திக்கெட்டியதே ; ஆதலின் நானதைச் செய்ய முயலுவேன்.

[வெளிப்போதல்.]

**டேஸ்டி :**—அந்தக் கைக்குட்டை எங்கே தவறியிருக்கும் எமிலியா ?

---

*(தங்குதற்குக்) கொண்ட இடம். † பொய்கூறும்வாய்.

‡ ஆகவே, முந்திய களத்தின் துவக்கத்தில் டெஸ்டிமோனா மோரியனிடம் 'சிபார்சு' செய்ததின் தொடர்ச்சியாகிக் குறுங்காலத்தைக்குறித்து நின்றது.

எமிலி :—நானறியேன், அம்மா.

டெஸ்டி :—பொய்யல்ல, அதை யிழந்ததினும் தங்க நாணயங்கள் நிறைந்த என் பணப்பையை இழந்திருப்பின் அவ்வளவு பொருட்டா யிருந்திராது. உத்தம சீலராகிய என் மோரியர், நம்பும் சுபாவத்தினரா யும், சமுசயகுணத்தினருக்குள்ள இழிதன்மையொன்றுமே அமையாத வராகவும் மட்டும் இல்லாவிடின், அவர் மனத்திற் கெட்ட சந்தேகங்களை யுண்டுபண்ண இதுவே போதுமானதாயிருக்கும்.

எமிலி :—அவருக்குச் சமுசயகுணமில்லையா?

டெஸ்டி :—யார், அவருக்கா? அவர் பிறந்தவிடத்திலேயே அப்ப டியுள்ள துர்நீர்களையெல்லாம் சூரியன் அவரிடமிருந்தும் உறிஞ்சிவிட் டானென்று எண்ணுகிறேன்.

எமிலி :—பாருங்கள், அதோ வருகிறார்.

டெஸ்டி :—காஸியோவை அவர் திரும்பி யழைத்துக்கொள்ளும் வரையும், இப்பொழுது அவரை நான் விடமாட்டேன்.

[ஒதெல்லோ பிரவேசித்தல்.]

பிராணநாதரே! தங்கள் உடம்பு எப்படியிருக்கிறது?

ஒதேல் :—துரைப்பெண்ணே! சுகமே. [தனக்குள்ளேயே] ஓ! பாசாங்கு செய்வது எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது!— சுகமோ, டெஸ்டிமோனு?

டெஸ்டி :—பிராணநாதரே! சுகமே.

அதை யிழந்ததனால் தன எஜமானி மிக வருந்தமுறுவாளென் றறிந்திருந்தும், தன் கணவன் சிறிது கிரமமின்றிக் கோபமுறுவதையே பாரா ட்டி யிவ்வாறு முழுப்பொய் கூறுகின்றாள். யாதானும் ஒரு ஆபத்து விபத்து வரின், அதனினறும் தப்பித்துக்கொள்ளுவதற்குப் பொய்யுரையே சுல பமான உபாயமென்று எண்ணி யொழுகுவார் பலர்: அத்தகையோரில், கொச்சைத்தன்மையருக்குள் உதாரணமாக எமிலியாவையும், நாகரிகம்பொ ருந்திய மேன்மையருக்குள் உதாரணமாக டெஸ்டிமோனுவையும், கவி காட்டி யுள்ளார். எவ்வளவோ ஏற்ற வித்தியாசமுள்ள குணத்தினராகிய இவ்விருவ ருள்ளும், இவ்வாறு ஒருவித நுண்ணிய ஒழுக்கவொற்றுமையை யமைத்துக் காட்டுந்திறம் மிக வியக்கத்தக்கது.

ஒதேல் :—உன் கையைக்கொடு: பெண்ணே, இந்தக்கை கசிவாயிருக்கிறதே.

டெஸ்டி :—மூப்போ, துக்கமோ, அது இன்னும் அறிந்ததேயில்லை.

ஒதேல் :—இப்படிக் கசிவாயிருப்பது, (ஸாமுத்திரிக லக்ஷணப்படி) அமிதமான பரோபகாரச் சிந்தையையும், மனவுதாரத்தையுங் குறிக்கின்றது :—உஷ்ணமும், உஷ்ணமுங் கசிவுமாயிருக்கின்றது: உன்னுடைய இந்தக் கைக்குச் சுவாதீன பந்தசமும், பட்டினியிருத்தலும், தேவாராதனையும், அதிகமையான சிக்ஷையும், விரதாநுஷ்டானங்களும் ஆவசியகம். இது ஒரு நல்ல கை; கபடமற்ற கை*

டெஸ்டி :—தாங்கள் அவ்வாறு கூறுவது தகுதியே; ஏனெனின், அந்தக் கையன்றோ என் இருதயத்தைத் தங்களுக்குக் கொடுத்தது. †

ஒதேல் :—உதாரமான கையே: முற்காலங்களில் இருதயங்களே கைகளையளித்தன; ஆனால் நம்முடைய நவீன சம்பிரதாயப்படி, கைகள்தான்: (கொடுக்கப்படுகின்றன) இருதயங்களல்ல.

டெஸ்டி :—எனக்கு இதெல்லாம் தெரியாது. இதிருக்கட்டும்; உங்கள் வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுங்கள்.

ஒதேல் :—என் குயிலே, என்ன வாக்குத்தத்தம் ?

டெஸ்டி :—இங்குவந்து தங்களுடன் பேசும்படி காஸியோவுக்குச் சொல்லியனுப்பியிருக்கிறேன்.

ஒதேல் :—கண்ணில் ஏதோ பூளை சாடிக் கரிக்கின்றது; உன் கைக்குட்டையைக் கொஞ்சம் கொடு. ‡

டெஸ்டி :—இதோ, நாதரே.

* தன் சமுசயத்தையும் கோபத்தையும் ஒருவாறு தெரிவிக்க நினைந்து ஈரடியாகவும் அவதூறாகவும் பேசத் தொடங்கியவன், இயல்பாக டெஸ்டிமோனாமேலுள்ள காதல்மேலிட்டால், தான்நினையாவண்ணம் புகழ்ந்து கூறி முடித்ததாகக் கவி காட்டியிருப்பது, வெகு சாதுரியக்கூற்றே.

† பாணிக்கிரகணஞ் செய்தது.

‡ சம்பாஷணையில் தன் சமுசயத்தைமறந்து கொஞ்சிக்குலாவத் தொடங்கியவன், காஸியோவென்ற பெயரால் ஞாபகமூண்டு, இயாகோ கூறியதைப் பரிசோதிக்குமாறு, தந்திரமாய்க் கைத்துவாலையைக் கேட்கின்றான்.

ஒதேல்:—நானுனக்குக் கொடுத்தது.

டேஸ்டி:—அதிப்பொழுது கையிலில்லை.

ஒதேல் :—இல்லையா ?

டேஸ்டி:—மெய்யாகவே இல்லை, நாதரே.

ஒதேல் :—அது தவருயிறறே. அந்தக் கைக்குட்டையை எகிப்து தேயத்தாளொருத்தி, என் தாய்க்குக் கொடுத்தாள். அவள் ஒரு மந்திரவாதி; மனிதர்களின் நினைவுகளைக்கூடத் தெரிந்து கூறவல்லவள்: அதை என் தாய் வைத்திருக்குமளவும், என் தகப்பனை முற்றிலும் அவள் காதல்வசப்படுத்தி, அவளை யவருக்கு இனியவளாக்குமென்றும்; ஆனால் அவள் அதை யிழந்துவிடின், அல்லது யாருக்காயினும் கொடுத்துவிடின், என் தகப்பனர் கண்கள் அவளை மிகவும் வெறுத்து, அவர் மனம் வேறு புதிய காதலிகளை நோக்குமென்றும், அவள் சொல்லி அதைக் கொடுத்தாள்; என் தாய் சாந்தருணைதத்தில், என் கையிலதைத் தந்து, என் விதிவசப்படி நான் பெண்வேட்டபொழுது, அவளுக்கு அதைக் கொடுக்கும்படி சொன்னுள். நானப்படியே செய்தேன்: அதைச் சாவதானமாய் வைத்துக்கொள்; அதையுன் கண்மணிபோல் அருமையாகப் பாவித்துக்கொள்; அதை யிழப்பதினும், அல்லது யாருக்காவது கொடுத்துவிடுவதினும், பெருங்கேடு வேறில்லையென்பது திண்ணம்.

டேஸ்டி :—இது மெய்தானு ?

ஒதேல்: —இது உண்மையே; அதன் நெசவில் மந்திரமிருக்கிறது. பஞ்சசக்கிரத்தைச் சூரியன் இருநூறுதடவை சுற்றியதைக் கண்டு கணக்கிட்ட ஒரு கிழக்குறிகாரி, தன் தீர்க்கதரிசன ஆவேசத்தில், அந்தச் சித்திரவேலையைச்செய்தாள்; அந்தப் பட்டைநூற்ற பூச்சிகள், புனிதமானவை; அன்றியும், கந்நிகைகளின் இரத்தாசயங்களைச் சேமித்துவைத்து, அவற்றினின்றும் சிறந்த தந்திரிகளால் வடிக்கப்பட்ட மந்திரௌஷதத்தால் அது சாயமூட்டப்பட்டது.

டேஸ்டி :—ஆஹா ! இதுண்மைதானு ?

ஒதேல் :—கேவலம் சத்தியமே; ஆகையால் அதை நன்ருய்ப் பார்த்துக்கொள்

டெஸ்டி :—ஆனால், தெய்வமே, நான் அதை யொருபொழுதுமே காணாதிருந்திருக்கலாகாதா!

ஒதேல் :—ஆ! எனப்படி?

டெஸ்டி :—தாங்களேனிப்படிப் படபடப்பாயும் மூர்க்கமாயும் பேசுகிறீர்கள்?

ஒதேல் :—அது தவறிவிட்டதா? போய்விட்டதா? சொல்லு, அது இல்லையா?

டெஸ்டி :—கடவுளே காக்க!

ஒதேல் :—என்ன பதில்?

டெஸ்டி :—அது தவறிப்போகவில்லை; * ஆனால், போய்விட்டா லென்ன?

ஒதேல் :—எப்படி!

டெஸ்டி :—தவறிப்போகவில்லை யென்கிறேனே.

ஒதேல் :—அதை யெடுத்துவா, நான் பார்க்கட்டும்.

டெஸ்டி :—ஏன், நாதரே, நான் அதைக் கொண்டுவரக்கூடும்; ஆனாலிப்பொழுதுமாட்டேன். என் வேண்டுகோளை நான் வற்புறுத்திக் கேளாதபடிசெய்யும் ஒரு தந்திரமே இது. காஸியோவைத் திரும்பவும் தயைசெய்து ஏற்றுக்கொள்ளுங்கள்.

ஒதேல் :—அந்தக் கைக்குட்டையை எடுத்துவா: என் மனம் சந்தேகப்படுகிறது.

டெஸ்டி :—இதெல்லாம் இருக்கட்டும்; அவரிலும் சமர்த்தர் உங்களுக்கொருபொழுதும் கிடையார்.

---

* டெஸ்டிமோனாவின் குணபாவத்தை இங்கு வெகு நன்றாய்க் காட்டியிருக்கிறார்: முதலிற் சாக்குப்போக்குச்சொல்லி, தன் கணவனுக்குக் கோபம் அதிகப்படவே, இயல்பாயுள்ள மனக்கோழைமையால் உண்மையை யுரைக்கத்துணியாது, மனமறியப் பொய் கூறுகின்றாள். மெய் நெறிதவறி இவ்வாறிவள் நடந்துகொண்டதின் நேர்விளைவாகின்றன, பின்வரும் துன்பங்கள். மற்றொன்றும் கவனிக்கத்தக்கது: பலவித அதிசயமொழிகளாலும் தன் கோபாவேசத்தாலும் இவ்வாறவளைப் பயமுறுத்தாது, ஆதரவாகவும் நயமாகவும் ஒதெல்லோ கேட்டிருப்பின், அவள் மெய் கூறியிருப்பாள்; ஒருகேடும் விளைந்திராது; ஆகவே, ஒதெல்லோவும் தன் செய்கைகளாலேயே பின்னுறு கேட்டுக்கு அறியாக்காரணமாகின்றான்

ஒதேல் :—அந்தக் கைக்குட்டை !

டெஸ்டி :—வாழ்நாளெல்லாம் தங்கள் நேசத்தைக் கொண்டே முன்னுக்குவர நம்பியிருந்தவர்; எத்தனையோ அபாயங்களைத் தங்களுடன் அநுபவித்தவர்,—

ஒதேல் :—அந்தக் கைக்குட்டை !

டெஸ்டி :—மெய்யாகவே, நீங்கள் செய்வது தவறே !

ஒதேல் :—போ !

[வெளிப்போதல்.]

எமிலி :—இவர் சமுசயகுணமுள்ளவரில்லையா ?

டெஸ்டி :—இதற்குமுன் நானிப்படிப் பார்த்ததேயில்லை; நிச்சயமாகவே, இந்தக் கைக்குட்டையில் ஏதோ அதிசயமிருக்கிறது. அதையிழந்ததால் நான் மிகவும் துர்பாக்கியமானவளே. †

எமிலி :—ஒரு வருஷம் இரண்டு வருஷங்களில் ‡ ஒரு மனுஷனை நாமறிந்துகொள்ளமுடியாது : அவர்களெல்லாம் வயிறுகளே, நாமெல்லாம் ஆகாரமே. பசியுடன் நம்மை (உண்டு) அநுபவிக்கிறார்கள்; நிரம்பியவுடன் தள்ளிவிடுகிறார்கள். அதோ பாருங்கள்—காஸியோவும் என் புருஷரும்.

[காஸியோவும் இயாகோவும் பிரவேசித்தல்.]

இயா :—வேறுவழியில்லை; அவளால்தான் ஆகவேண்டும்; அதோ ! நல்லதிஷ்டத்தைப்பாரும்; போய் அவளை வருந்தி வேண்டிக்கொள்ளும்.

டெஸ்டி :—என்ன இப்பொழுது, நல்ல காஸியோவே : சமாசாரமென்ன ?

இந்தமுறை, அதிகோபத்தால், விரல்களை மடக்கிக்கொண்டு, கையால் அவள் முகத்தில் இடிக்கப்போவதுபோற் பயமுறுத்தியதாகக் கொள்க.

† இதைக்கேட்டும் எமிலியா உண்மையுரைத்திலள். அவளுக்கு டெஸ்டிமோனாவின்மேல் மெய்யன்புண்டென்பது திண்ணமே; ஆயினும், இயாகோவின்மேல் அதிக மோகங்கொண்டவள்போலும்.

‡ நெடுங்காலக்குறி.

**காஸி:**—அம்மா, நான் முன்பு வேண்டிக்கொண்டதே. தங்கள் பலத்த 'சிபார்சு' மூலமாக நான் திரும்ப உயிர் பெற்று, என் மனப்பூரணமாக நான் பூஜ்யதை செய்பவரின் பிரியத்துக்கு அருகனாகச்செய்யும்படி, தங்களைப் பிரார்த்திக்கிறேன்: இனித்தாமசித்தால் சகியேன். இதுகாறும் நான் செய்த ஊழியங்களும், இப்பொழுது நான் அநுபவிக்கும் வியாகுலமும், இனி யோக்கியதையாக ஒழுக நான் செய்திருக்கும் சித்தாந்தமும், ஒன்றுமே அவர் பிரியத்தையெனக்கு மீட்டு அளிக்கப் போதாதபடி என் குற்றம் அவ்வளவு நிஷ்டூரமானதாயின், அது அத்தகையதென்பதையறிவதே எனக்கு நலமாயிருக்கும்; ஏனெனின், வேறு போக்கின்மையால் திருப்தியடைந்து, அதிஷ்டவசத்தை யெதிர்நோக்கி, வேறேதாவது பிரவர்த்தியில் பிரவேசிப்பேன்.

**டெஸ்டி:**—ஐயோ, மிகவும் நல்லகுண காஸியோ! உமக்காக நான் பரிந்துபேசும் முயற்சி இப்பொழுது இசைவாயில்லை; என்னுதர் என்னுதராகவில்லை; குணத்தில் மாறியிருப்பதுபோலத் தோற்றத்திலும் அவர் மாறியிருந்தால், அவரையெனக்கு இனம் தெரியமுடியாது. சத்தியமாகவே, என்னாலியன்றமட்டும் உமக்காகப் பரிந்துபேசி, நான் தடையின்றிப் பேசியதினால் அவர் அப்பிரியத்துக்கும் இலக்காகிவிட்டேன்! நீர் சிறிது பொறுக்கத்தான் வேண்டும்: என்னாற்கூடியதை நான் செய்கிறேன்; என்விஷயத்தில் நான் துணியக்கூடியதைவிட அதிகமாகவே செய்கிறேன்: அதைக்கொண்டு திருப்தியாயிரும்.

**இயா:**—எஜமானர் கோபமாயிருக்கிறாரா?

**எமிலி:**—இப்பொழுதுதான் இங்கிருந்து போனார்; சுபாவமான சாந்தமில்லவேயில்லை.

**இயா:**—அவருக்கும் கோபம் உண்டா? அவர் சைநியங்களைக் காற்றிற் பறத்திப், பிசாசைப்போல் அவர் கையிலிருந்தே அவர் சொந்தச் சகோதரரைப் பீரங்கியடித்துக்கொண்டுபோனதை நான் பார்த்திருக்கிறேன்;—அவருக்குக் கோபமுண்டா? ஆனால் ஏதோ விசேஷமிருக்கவேண்டும்; நான் அவரிடம் போகிறேன்; அவரே கோபமுற்றால், அதில் ஏதோ சங்கதி யிருக்கவேயிருக்கிறது.

**டெஸ்டி:**—தயைசெய்து சிறிதுபோ.

[இயாகோ வெளிப்போதல்.]

டெஸ்டி:—நிச்சயமாகவே, ஏதோ துரைத்தன காரியம்,—வெநிஸிலிருந்துவந்த சமாசாரமோ, அல்லது, இங்குஸைப்ரஸில்வெளியாகிருஜுவான துரைத்தன விரோதமான சூழ்வினையேதோ, அவர் தெளிவான சித்தத்தைக் கலக்கியிருக்கிறது; இவ்வித சந்தர்ப்பங்களில், பெரிய விஷயங்களே தங்கள் கருத்தாயிருப்பினும், அற்ப சங்கதிகளில் கோபமுறுவது மனிதர் சுபாவமே. அப்படியேதான்; திருஷ்டாந்தமாக, நம்முடைய விரலில்மட்டும் நோவுண்டானாலும், சௌக்கியமாயுள்ள மற்ற அவயவங்களிலும், அது அவ்வளவு நோவுணர்ச்சியையுண்டுபண்ணிவிடுகிறது: அன்றியும், புருஷர்கள் தேவர்களல்லரென்பதை மறந்துவிடலாகாது; விவாககாலத்துள்ள அன்பும் ஆதரவும் எப்பொழுதுமிருந்துகொண்டேவருமென்று எதிர்பார்க்கவுமாகாது.*—என் செட்டகுணத்தைப் பார், எமிலியா, நான் பக்ஷபாதகமாகவே, எனக்குள்ளேயே அவர் கடுமையைப் பழித்துக்கொண்டிருந்தேன்; இப்பொழுது ஆலோசித்துப் பார்த்தாலோ, நானே சாக்ஷியத்தை என்பக்கமாகக் கூறச்செய்து, அவரைத் தவறாகக் குற்றஞ்சார்த்தியதாகவே தோன்றுகிறது.

எமிலி:—நீங்களெண்ணுகிறபடி ஏதாவது இராஜரிக விஷயமாகவேயிருந்து, உங்களைப்பற்றிய ஒருவிதமான எண்ணமோ, சமுசயமோ இல்லாமலிருக்கும்படி, கடவுளைப் பிரார்த்திப்போம்.

டெஸ்டி:—ஐயோ, காலமே! நானதற்கு ஒருபொழுதும் இடம் கொடுக்கவில்லையே!

எமிலி:—ஆனால், சந்தேகப்படுபவர்கள் அப்படிப் பதிற்சொன்னால் திருப்தியடையார்கள்; காரணம்பற்றியே அவர்கள் எப்பொழுதும் சந்தேகிக்கிறதில்லை; சந்தேக சுபாவத்தினாலேயே சந்தேகங்கொள்கிறார்கள்; தனக்குத்தானே தாயும் தகப்பனுமான ஒரு குரூபி, அந்தச் சந்தேகமென்பது.

டெஸ்டி:—ஒதெல்லோ மனத்துள் அக்குரூபப் பிறவி புகாதபடி கடவுள் காக்கட்டும்.

எமிலி:—அம்மா, அப்படியே ஆகுக.

நெடுங்காலக்குறி.

**டெஸ்டி**:—நான் அவரைப் போய்ப் பார்க்கிறேன்.—காஸியோ, இங்கே உலாவிக்கொண்டிரும்: அவர் தக்கபடியிருந்தால் உம்முடைய விஷயத்தையெடுத்துப் பேசி, என்னாலானமட்டும் அதை முடிக்க வழி தேடுகிறேன்.

**காஸி**:—நான் தாழ்மையுடன் தங்களுக்கு வந்தனமளிக்கிறேன்.

[டெஸ்டிமோனாவும் எமிலியாவும் வெளிப்போதல்.]

[பியான்கா பிரவேசித்தல்.]

**பியான்**:—உன்னைச் சுவாமிகாக்க, காஸியோ நண்பனே.

**காஸி**:—வீட்டைவிட்டு எங்கேவந்தாய்? என் கட்டழகி பியான்கா, என்ன சமாசாரம்? மெய்யாகவே, என் கரும்பே, உன் வீட்டுக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தேன்.

**பியான்**:—நான் நீ தங்குமிடத்துக்குப் போய்க்கொண்டிருந்தேன். காஸியோ, என்ன! ஒருவாரமாய்* எட்டிப்பாராமலிருந்துவிடுகிறதா? ஏழு பகலும் ஏழு இரவுமா? நூற்றறுபத்தெட்டு மணிநேரமா? அதுவுமன்றி, காதலர் பிரிந்திருக்கும் நேரம் சாதாரண காலச்செலவைவிட நூறுமடங்கு தாமசமாயிற்றே? ஐயோ! என்ன அலுப்பான பொழுதுபோக்கு!

**காஸி**:—என்னை மன்னித்துக்கொள், பியான்கா: இந்த மத்தியில் நான் பளுவான மனக்கவலையில் ஆழ்ந்திருந்தேன்; ஆனால் இவ்வாறு வராமலிருந்ததற்காக, இடைவிடாது உன் கூடவே சிலகாலங் கழித்துவிடுகிறேன். என் இனிய பியான்கா, [டெஸ்டிமோனா கைக்குட்டையை அவள் கையிற் கொடுத்து] இந்தமாதிரி எனக்கொன்று வேலைசெய்து தா.

**பியான்**:—ஓ, காஸியோ! இது எங்கிருந்து வந்தது? என்னினும் புதிதாகப் பழகியவள் எவளோ கொடுத்த காதல் முத்திரையே இது: நான் பிரிவாற்றாமையால் வருந்தியதுமன்றி, அதற்குக் காரணமும் இப்பொழுதென்னை வருத்துகிறது: இவ்வளவுக்கு வந்துவிட்டதா? நல்லது, நல்லது.

---

நெடுங்காலக்குறி.

**காஸி** :—நிறுத்து, பெண்ணே! உன் இழிவான சந்தேகங்களை யெல்லாம் பிசாசின் முகத்திலெறிந்துவிடு; அவையங்கிருந்தே வந்தன. எவளோ வைப்பாட்டி ஏதோ ஞாபகச்சின்னமாகக் கொடுத்ததிதுவெ ன்று நீயிப்பொழுது சந்தேகப்படுகிறாய்; இல்லை, பியான்கா, உண்மை யாகவே அப்படியில்லை.

**பியான்** :—பின்னை, யாரது இது?

**காஸி** :—கரும்பே, நானறியேன்: என் அறையிற் கிடந்தது; சித்திரவேலை என் மனத்துக்குப் பிடித்திருக்கிறது. யாராவது தம்ம தென்று கேட்குமுன் [அநேகமாய்க் கேட்பார்கள்] அதைப்போல் ஒன்று செய்துகொள்ள விரும்புகிறேன். கொண்டுபோய் அந்தமாதிரி யொன்று செய்; இப்பொழுதென்னைவிட்டுப் போய்விடு.

**பியான்** :—உன்னைவிட்டுப் போகிறதா! எதற்காக?

**காஸி** :—நானிங்கே சேனைபதியிடம் காத்துக்கொண்டிருக்கி றேன். என்னுடன் ஒரு பெண்பிள்ளையிருப்பதை அவர் பார்ப்பது என் இஷ்டமல்ல; எனக்கு அதிக மரியாதையுமல்ல.

**பியான்** :—ஏனோ, கொஞ்சம் சொல்லு, கேட்போம்?

**காஸி** :—உன்மேற் பிரியமில்லையென்பதனாலன்று.

**பியான்** :—என்மேற் பிரியமில்லையென்பதே. தயைசெய்து சிறி துதூரம் கூடவா; இராத்திரி சீக்கிரம் வருவாயா சொல்லு.

**காஸி** :—சிறிதுதூரமே நான் உன்னுடன் வரக்கூடும்; ஏனெ னில் நானிங்கே காத்திருக்கிறேன்: ஆனால் சீக்கிரம் உன்னை வந்து பார்க்கிறேன்.

**பியான்** :—வெகு நன்றாயிற்று: நான் சமயத்துக்குத்தக்கபடியே நடந்துகொள்ளவேண்டும்.

[வெளிப்போதல்.]

# நான்காவது அங்கம்.

## முதற்களம் :—ஸைப்ரஸ்—அரண்மனை முற்றம்.

(காலம் : மாலை.)

[ஒதெல்லோவும் இயாகோவும் பிரவேசித்தல்.]

**இயாகோ :**—அப்படி யெண்ணுவீர்களா?

**ஒதெல் :**—அப்படி யெண்ணுகிறதா, இயாகோ!

**இயா :**—என்ன! இரகசியமாய் முத்தமிடுகிறதானால்?

**ஒதெல் :**—ஒரு அக்கிரமமான முத்தம்.

**இயா :**—அல்லது தன் சிநேகிதனோடு ஒருமணிநேரமோ, அதிகமோ, தீங்கொன்றும் நினையாமலே அவள் தனித்திருந்தாலோ?

**ஒதெல் :**—தீங்குநினையாமலா! அது பிசாசையே வஞ்சிப்பதாகும்: நல்லெண்ணத்தோடு அவ்வாறு நடப்பவர்கள் கற்பைப் பிசாசு கெடுக்க முயலுகிறது; அவர்களும் தெய்வத்தையே சோதிப்பவர்கள் ஆகிறார்கள்.

**இயா :**—அவர்களொன்றுஞ்செய்யாவிட்டால், அது அவ்வளவு பெரிய தவறல்ல; ஆனால் என் மனைவிக்கு நானொரு கைக்குட்டை கொடுத்தால்,—

**ஒதெல் :**—அப்புறமென்ன?

**இயா :**—என்ன, பின்னை, அது அவளுக்கே சொந்தம், ப்ரபோ; அவளுடையதாகவே, அவள் எந்தப் புருஷனுக்கு வேண்டுமாயினும் அதைக் கொடுக்கலாமென்று எண்ணுகிறேன்.

**ஒதெல் :**—அவள் மானத்துக்கும் அவள்தான் காவல்; அதை அவள் கொடுத்துவிடலாமோ?

**இயா :**—அவள் மானமென்பது கண்ணுக்குப்புலப்படாத ஒரு பொருள்; (உண்மையில்) அதில்லாதாரநேகர் அதையுடையவர்களாகவே அடிக்கடி தோன்றுகிறார்கள்: இதுநிற்க, அந்தக் கைக்குட்டை விஷயமாக,—

ஒதெல :—சுவாமி சத்தியமாக, அது மறந்தேபோனால் எனக்கு மிகச் சந்தோஷமே:—யாவருக்கும் பயத்தையுண்டுபண்ணிக்கொண்டு, தொற்றுநோய் பரவிய் வீட்டைச்சுற்றிக் கருங்காகம் வட்டமிடுவது போல, அது என் ஞாபகத்துக்கு வருகின்றது,—அவன் கையில் என் கைக்குட்டை யிருந்ததென்று சொல்லினையே.

இயா :—ஆம், அதனாலென்ன?

ஒதெல்:—அது இப்பொழுது அவ்வளவு சரியல்லவே.

இயா :—என்ன! அவர் தங்கள் மானத்தைக்கெடுப்பதை நானே பார்த்ததாகச் சொல்லியிருந்தாலோ? அன்றேல்,—இடைவிடாது நெருக்கி வேண்டிக்கொண்டதால் தங்கள் இச்சை கைகூடப்பெற்றேனும், அல்லது எவளாயினும் ஒரு வேசிக்குத் தங்கள்மாட்டுள்ள வலிந்த காமமயக்கால் அவள் ஆசையை நிறைவேற்றியேனுமுள்ள சில பயல்கள், தங்கள் அநுபவத்தை வெளியே பிதற்றித்திரிவதுபோல, அவர் சொல்வதைக் கேட்டிருந்தாலோ—.

ஒதெல் :—அவனேதாவது சொல்லியிருக்கிறானோ?

இயா :—சொல்லியிருக்கிறார், ப்ரபோ; ஆனால் இதைமட்டும் வெகு உறுதியாய்க்கொள்ளுங்கள்: ஒன்றுஞ்சொன்னதில்லையென்று கள்ளச்சத்தியஞ் செய்துவிடுவார்.

ஒதெல் :—அவன் சொன்னதென்ன?

இயா :—ஆணைப்படிக்கு, அவர் செய்ததாக,—அவர் செய்ததின்னதென்று நான் சொல்லமுடியாது.

ஒதெல் :—என்ன? என்ன?

இயா :—படுத்து—

ஒதெல் :—அவள்கூடவா?

இயா :—அவள்கூடவே, அவள்கூடவே; என்னவேண்டுமாயினும் வைத்துக்கொள்ளலாம்.

ஒதெல் :—அது மிக அருவருக்கத்தக்கதே.—கைக்குட்டை,—ஒத்துக்கொள்ளுதல்,—கைக்குட்டை!—(குற்றத்தை) ஒப்புக்கொண்டு தன் செயலுக்காகத் தூக்கிவிடப்படுவது;—முதலில் தூக்கிவிடப்படுவது, பின்பு ஒப்புக்கொள்ளுகிறது.—அதற்கு நடுங்குகிறேன். யாதா

னும் காரணமின்றி இயற்கை யிவ்விதமாயிருண்டு தோன்ருது. வார்த்தைகளல்ல என்னையிவ்வாறு நடுக்குவன;—சீ!—இது மெய்தானு?—ஒப்புக்கொள்கிறது,—கைக்குட்டை!—ஓ, பிசாசே!—

[மயங்கி விழுந்துவிடுகிருன்.]

**இயா**:—உன் வேலையை நடத்து, என் மருந்தே, வேலையை நடத்து! எதையும் நம்பும் பேதைமையுள்ள மூடர்கள் இப்படித்தான் பிடிபடுகிருர்கள்; யோக்கியதையும் கற்பும் வாய்ந்த ஸ்திரீகள் அநேகர், இவ்வாறே, ஒரு குற்றமுமேயின்றி, அபகீர்த்தியடைகிருர்கள்.—என்ன, ஓ, ப்ரபோ! ப்ரபோ! நான் கூப்பிடுகிறேனே! ஒதெல்லோ! யார் காஸியோவா!

[காஸியோ பிரவேசித்தல்.]

**காஸி**:—என்ன விசேஷம்?

**இயா**:—பிரபு காக்கைவலியில் விழுந்துவிட்டார்: இது இரண்டாவதுதரம் வலிப்பு வந்திருக்கிறது.† நேற்ருெரு வலிப்பு வந்தது.

**காஸி**:—நெற்றிப் பொருத்துக்களைச் சுற்றித் தேய்.

**இயா**:—வேண்டாம், அப்படிச் செய்யாதேயும்; அந்த மயக்கம் தானகவே மெதுவாய்க் கழியவேண்டும்: இல்லாவிடின் வாயில் நுரைததும்பிச் சிறிதுநேரத்தில் வெகு பலமான பைத்தியவெறி வந்துவிடுகிறது. பாரும், அதோ அசைகிருர்: நீர் சிறிதுநேரம் வெளியிற்போயிரும், அவருக்கிப்பொழுதே சுகமாய்விடும்: அவர் போனபிறகு, ஒரு முக்கிய விஷயமாக உம்மோடு பேச விரும்புகிறேன்.

[காஸியோ வெளிப்போதல்.]

எப்படியிருக்கின்றது, சேனபதி? தங்கள் தலையிற் காயம்படவில்லையா?

**ஒதெல்**:—என்னைப் பரிகாசமா பண்ணுகிருய்?

---

தாபமிகுதியால் தன் புத்தி தடுமாறிக் கண் மயங்குவதையோராது, அருஷ்டியே இருண்டுபோவதாகக் கூறுகிருன்

† கெடுங்காலக்குறி.

இயா:—நான் தங்களைப் பரிகாசம்பண்ணுகிறதா! கடவுளாணை, இல்லை. ஆண்பிள்ளைக்குத் தக்கபடி தங்கள் அதிஷ்டவசத்தைத் தாங்கள் பொறுத்துக்கொள்ளவே வேண்டுகிறேன்.

ஒதேல்:—கொம்புமுளைத்த ஆண்பிள்ளை* விகாரரூபியும் மிருகமுமே.

இயா:—அப்படியானால், ஜனநரமான ஒரு நகரத்தில் பல மிருகங்களும், நாகரிகமுடைய பல விகார ரூபிகளுமிருக்கின்றன.

ஒதேல்:—அவனதை ஒத்துக்கொண்டானா?

இயா:—கனவானே, ஆண்மைத்தனத்தைக் காட்டுங்கள்; விவாக நுகக்காலிற் பூட்டப்பட்டுள்ள மீசைமுளைத்த பயல் ஒவ்வொருவனும், தங்களுடன் சோடுசேர்ந்திழுக்கலாமென்பதை நினைத்துக்கொள்ளுங்கள்: அம்மாதிரியாக எத்தனையோ லக்ஷம்பேரிருக்கிறார்கள். தங்களுடைய நிலைமை அவ்வளவு பரிதாபமானதன்று. ஒரு தூர்த்தையைச் சேமமானதென்று நினைக்கும் ஓரமளிக்கண் அநுபவித்து, அவள் பதிவிரதையே என்றெண்ணியிருக்கச்செய்தல், நரகருக்குரிய துராங்காரமே! பைசாசம்பண்ணும் பரம பரிகாசமே! எனக்குத் தெரியமட்டும் வேண்டும்; பின்பு, அவளென்னை எவ்வாறுக்கிறாள் என்பதையறிந்தவனாதலால், அவளை நடத்தவேண்டிய விதமும் எனக்குத் தெரியும்.

ஒதேல்:—ஓ, நீயெல்லாம் தெரிந்தவன்; அது உறுதியே.

இயா:—தாங்கள் சிறிதுநேரம் ஒருபுறமாகத் தூரத்தில் நில்லுங்கள்; பொறுமையாய்மட்டும் தங்களைச் சற்று அடக்கிக்கொள்ளவேண்டும். துக்கபரவசத்தில் தாங்கள் இங்கு வீழ்ந்துகிடக்கையில்,—தங்களைப்போன்றார்க்கு இவ்வித தாபம் சிறிதும் தகாததே—காஸியோ இங்குவந்தார்: தங்கள் மயக்கத்துக்குச் சரியான போக்குச்சொல்லி அவரையனுப்பிவிட்டேன்: இப்பொழுதே இங்குத் திரும்பிவந்து என்னுடன் பேசும்படி சொல்லியிருக்கிறேன்; அவரும் வாக்களித்திருக்கிறார். நீங்கள்மட்டும் ஒளித்திருங்கள்: கதையைத் திரும்பவும் கூறும்படி செய்கிறேன்: அவர் முகத்தின் ஒவ்வொரு பாகத்திலும் நிந்தை, பரிகாசம், அவமதிப்பு முதலியவற்றைக் காட்டும் குறிகள் உண்டாவ

* வியபிசாரியான மனைவியையுடையவன்.

தைக் கவனியுங்கள்; அவர் அபிநயங்களைமட்டும் நன்று கவனிக்கவேண்டும்; பொறுமைவேண்டும்; இல்லாவிடின், சிறிதும் மனிதத்தனமேயின்றி, முற்றிலும் கோபபிண்டமாகச் செய்யப்பட்டவர்களென்றே சொல்வேன்.

ஒதேல்:—கேட்கிருயா, இயாகோ? நான் வெகு சாமர்த்தியமாகவே பொறுமையாயிருப்பேன்; ஆனால்-கேட்கிருயா? (பழிவாங்குவதில்) வெகு கொரோமாயிருப்பேன்.

இயா:—அது கிரமமே; ஆயினும் எல்லாம் காலமறிந்து செய்யுங்கள். தாங்கள் மறைந்துகொள்ளுகிறீர்களா?

[ஒதெல்லோ மறைந்துகொள்ளுகிறன்.]

(தனிமொழி) நான் இப்பொழுது காஸியோவிடத்தில் பியான்காவைப்பற்றி விசாரிப்பேன்; அவள் தன் ஆசையை விற்று ஊணுடை வாங்கிப் பிழைப்பவள்; அந்தப் பிராணிக்குக் காஸியோவின்மேல் கனத்த 'கிறுக்கு,'—பலரைத் தான் எத்தி ஒருவனால் தான் எத்தப்படுதல் தூர்த்தைக்குள்ள பெருநோயே:—அவனுக்கோ, அவள் பேச்செடுத்துவிடின் பெருஞ்சிரிப்பு அடக்கமுடியாது:—இதோ அவன் வருகிருன்:—அவன் புன்சிரிப்பினுல் ஒதெல்லோவுக்குப் பைத்தியமேறும்; அவனுடைய 'அசட்டு'த்தனமான சமுசயத்தால், அப்பாவி காஸியோவின் மந்தகாசம், அபிநயங்கள், விளையாட்டான நடவடிக்கையெல்லாவற்றையும் முற்றிலும் தவருகவே அர்த்தம்பண்ணிக்கொள்வான்.

[காஸியோ திரும்பிப் பிரவேசித்தல்.]

உபசேனுபதி, சுகமோ?

காஸி:—எந்தப்பட்டம் இல்லாமை என்னை உயிரே போய்விடும்படி வருத்துகின்றதோ, அதைக்கூறி நீ யென்னை யழைப்பதால் அம்மட்டும் சுகக்குறைவே.

இயா:—டெஸ்டிமோனவை மட்டும் நன்கு 'அலட்டி' ஞல் உமது காரியம் ஜெயமே. [மெதுவான குரலில்] இப்பொழுது இந்தச் சங்கதிமட்டும் பியான்காவால் முடிகிறதாயிருந்தால், எவ்வளவு சீக்கிரம் நிறைவேறிவிடும்!

காஸி:—ஐயோ! ஏழையசடு!

ஒதேல் :—[ஒருபுறமாக] பார், அதற்குள் எப்படிச் சிரிக்கிறான்!

இயா :—அவ்வளவு ஒரு ஸ்திரீ ஒரு புருஷன்மேல் மோகங் கொண்டிருப்பது நான் பார்த்ததேயில்லை.

காஸி :—ஐயோ! ஏழை வம்பி! மெய்யாகவே என்மேல் அவளுக்கு மோகமென்றே யெண்ணுகிறேன்.

ஒதேல் :—[ஒருபுறமாக] இப்பொழுது அதை மெதுவாய் மறுத்துச் சிரித்து மழுக்குகிறான்.

இயா :—கேட்டீரோ, காஸியோ?

ஒதேல் :—[ஒருபுறமாக] இப்பொழுது அதை மறுபடியுஞ் சொல்லச் சொல்லி அவனை அலட்டுகிறான் :—சரி; நல்லது; நல்லது.

இயா :—நீரவளைக் கலியாணஞ் செய்துகொள்ளப் போவதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறாளே : அப்படி உத்தேசமுண்டோ?

காஸி :—ஹ, ஹ, ஹா. !

ஒதேல் :—[ஒருபுறமாக] சிரிக்கவாசெய்கிறாய்? நல்லது, சிரிக்கவா செய்கிறாய்?

காஸி :—நானவளைக் கலியாணஞ் செய்துகொள்ளுகிறதா!—என்ன, ஒரு வேசையையா! என் புத்தி விஷயத்திற் சிறிது நன் மதிப்புக்கொள்ளு ; அது அவ்வளவு மோசமென்று நினையாதே :—ஹ, ஹ, ஹா!

ஒதேல் :—[ஒருபுறமாக] அப்படியே, அப்படியே, அப்படியே, அப்படியே :—ஜெயித்தவர் சிரிப்பர்.

இயா :—மெய்யாகவே, நீரவளைக் கலியாணஞ்செய்துகொள்ளப் போவதாகவே எங்கும் பிரஸ்தாபம்.

காஸி :—உள்ளதைச் சொல் என்கிறேன்.

இயா :—பொய்யானால், நான் முழு அயோக்கியனே.

ஒதேல் :—[ஒருபுறமாக] எனக்கு அவமானச் சூடு போட்டுவிட்டாயா? நல்லது.

காஸி :—இது அந்தக் குரங்கு தானாகச் சொல்லிக்கொள்வதே : தன் ஆசை மிகுதியினாலும், தற்புகழ்ச்சியினாலும், நானவளைக் கலியா

ணஞ் செய்துகொள்வேனென்று நம்பியிருக்கிறாள்; நான் வாக்குக் கொடுத்ததனாலல்ல.

ஒதெல் :—[ஒருபுறமாக] இயாகோ எனக்கு சமிஞ்ஞை செய்கிறான்; இப்பொழுது அவன் கதையைத் தொடங்குகிறான்.

காஸி :—இப்பொழுதுதான் இங்கு வந்திருந்தாள்; எங்கேபோனாலும் விடாது தொடருகிறாள். அன்றைக்குக் * கடற்கரையில் சில வெனிசியர்களோடு பேசிக்கொண்டிருந்தேன்; இந்த விளையாட்டுப் பதுமை அங்கு வந்து, பொய்யில்லை, என் கழுத்தில் இப்படி விழுந்து கட்டிக்கொண்டாள்.

ஒதெல் :—[ஒருபுறமாக] "ஓ, பிரியமான காஸியோ" என்று சொல்லிக்கொண்டாள்போலும்: அவன் சைகையில் அந்த அர்த்தமிருக்கிறது.

காஸி :—அவ்வாறு தொங்கி யென்மேற் சாய்ந்துகொண்டு, என்னைக் கட்டிக்கொண்டு அழுகிறாள்; அப்படி யென்னைப் பிடித்திழுத்துக் குலுக்கிறாள் :—ஹ, ஹ, ஹா!

ஒதெல் :—[ஒருபுறமாக] இப்பொழுது அவனை என் அறைக்குள் அவள் எவ்விதம் இழுத்துப் போயினளென்பதைச் சொல்கிறான். ஓ, உன் மூக்கு எனக்குத் தெரிகின்றது; ஆனால் நானதை இரையிடப் போகிற நாய் மட்டும் இன்னும் தெரியவில்லை.

காஸி :—சரி, நான் அவள் சகவாசத்தை விட்டுவிட வேண்டும்.

இயா :—அட அப்பா! அதோ வருகிறாள் பாரும்.

காஸி :—இவளும் ஒரு காட்டுப் பூனையே; ஆனால் வாசனை பூசிய பூனை.

[பியான்கா பிரவேசித்தல்.]

எனிப்படி யென்னைத் தொடர்ந்து தொந்தரை செய்கிறாய்?

பியான் :—பிசாசும் அதன் தாயும் உன்னைத் தொடர்ந்து தொந்தரை செய்யட்டும்! அந்தக் கைக்குட்டையைச் சற்று

* நெடுங்காலக் குறி.

முன்* என் கையிற் கொடுத்தனையே, எதற்காக? நானும் முழு மூட்டாளாய் அதை வாங்கிக்கொண்டேனே. நான் அதைப்போல் வேலை செய்து தரவேண்டுமோ!—அறையில் கிடந்ததாம், கண்டெடுத்தானும், அதை அங்கே போட்டவர் யாரென்று தெரியாதாம், எல்லாம் நம்பத்தக்க சங்கதியே! இது எவளோ ஒரு சிறுக்கி உனக்கு அடையாளமாகக் கொடுத்தது; அதைப்போல் நான் வேலைசெய்து தரவேண்டுமோ! இதோ,—எங்கிருந்து கிடைத்ததோ அங்கேயே கொண்டு கொடு அதை; நான் அதைப்போல் வேலைசெய்து தரேன்.

காஸி:—ஏனடி, என் இனிய பியான்கா! ஏனடி! ஏனடி!

ஒதேல்:—(ஒருபுறமாக) தேவனே, அது என் கைக்குட்டையாகவே இருக்கவேண்டும்.

பியான்:—இன்றிரவு சாப்பாட்டுக்கு வருகிறதாயிருந்தால் வரலாம்; இல்லாவிடின் இனியழைத்தபோது வந்தாற்போதும்.

[வெளிப்போதல்.]

இயா:—அவள் பின்னாற்செல்லும்; அவளைப் பின்பற்றும்.

காஸி:—நான் போகவேவேண்டும்; இல்லாவிடின் அவள் தெருவெல்லாம் ஓலமிட்டுத் தூற்றுவாள்.

இயா:—இரவு அங்கே சாப்பிடுவீரா?

காஸி:—ஆம், அப்படியே உத்தேசம்.

இயா:—நல்லது, நானும் ஒருவேளை வருவேன்; உம்முடன் அவசியம் பேசவேண்டியிருக்கிறது.

காஸி:—தயைசெய்து வா; வருவாயா?

இயா:—அதற்கென்ன வருகிறேன்; அதிகமாய்ச் சொல்ல வேண்டாம்.

[காஸியோ வெளிப்போதல்.]

ஒதேல்:—[மறைவிடத்தினின்றும் முன்வந்து] அவனை எப்படிக் கொலைசெய்யட்டும், இயாகோ?

---

* ஆகவே, இக்களம் மூன்றாவது அங்கத்து நான்காவது களத்துடன் தொடர்ந்து நிகழ்வதாகச்சுட்டிக் காலநெருக்கத்தைக் குறித்துநின்றது.

இயா:—தம் துர்நடக்கையைப்பற்றி யெப்படிச் சிரித்தார் பார்த்தீர்களா?

ஒதேல்:—ஓ இயாகோ!

இயா:—கைக்குட்டையைப் பார்த்தீர்களோ?

ஒதேல்:—அது என்னுடையதுதானா?

இயா:—உங்களதேயென்று கையடிப்பேன். தங்கள் மனைவி அந்த முட்டாள் பெண்பிள்ளையை * அவர் எவ்விதம் மதிக்கிறார் பாருங்கள்: அவள் அதை அவருக்குக் கொடுத்தாள்; அவர் அதைத் தம் வைப்பாட்டிக்குக் கொடுத்துவிட்டார்.

ஒதேல்:—ஒன்பது வருஷங்களாக அவனைச் சித்திரவதை செய்து கொன்றால்தான் எனக்குத் திருப்தியாகும்.—ஒரு நேர்த்தியான ஸ்திரீ! அழகான ஸ்திரீ! மிக மனோரம்மியமான ஸ்திரீ!†

இயா:—இல்லை, அதெல்லாம் தாங்கள் மறந்துவிடவேண்டும்.

ஒதேல்:—ஆம், அவள் அழுகி, இன்றிரவே நாசமாகட்டும்; ஏனெனின், அவளை உயிரோடிருக்கவிடேன்: இல்லை, என் இருதயம் கல்லாகிவிட்டது; நானதைத் தட்டினால் என் கையே புண்ணாகிறது.—ஐயோ!† இவ்வுலகெங்கும் அவளினும் மனோரம்மியமான ஸ்திரீ இல்லவேயில்லை; ஒரு சக்கரவர்த்தியின் அருகிருந்து, அவரையும் ஏவல் கொள்ளத்தக்கவளே அவள்.

இயா:—இல்லை, தாங்கள் அவ்வாறு நினைக்கலாகாது.

ஒதேல்:—தூக்கிலிடு அவளை! அவளிருக்கிற நிலைமையைத் தான் கூறுகிறேன்:—ஊசிகொண்டு சித்திரப்பூ வேலைகள் செய்வதில் என்ன நேர்த்தி!—சங்கீதத்தில் என்ன சாமர்த்தியம்!—ஓ, தன் பாட்டினால் ஒரு காடியின் மிருகத்தன்மையையும் மாற்றி வசப்படுத்திவிடுவளே! என்ன பேச்சு நயம்! என்ன புத்தி சாதுரியம்!†

* உயர்குணமோரியன் ஒளித்துநின்று ஒட்டுக் கேட்க உடம்படுதலும், அவனிடத்திலேயே அவனின்னுயிர்க்காதலியைப்பற்றி, இயாகோ இவ்வாறிழிவாகப் பேசத்துணிதலும், பாழான சமுசயகுணத்தால் அவன் எவ்வளவு தாழ்வுற்றுளானென்பதை நன்கு காட்டுகின்றன.

† காதலும் வெறுப்பும் மாறி மாறி மேலிடுகின்றன.

இயா:—இத்தனையும் இருந்தும் நடை தவறியதால், இன்னும் மிகக் கெட்டவளேயவள்.

ஒதேல்:—ஓ, ஆயிரம், ஆயிரம் மடங்கு கெட்டவளே:—அன்றியும் என்ன சாத்துவிகமான சுபாவம்!*

இயா:—ஆம், அமித சாத்துவிகமே.

ஒதேல்:—ஆம், ஆம், அது உறுதியே: ஆயினும், அவள் கெட்டது என்ன பரிதாபம், இயாகோ! அந்தோ இயாகோ! என்ன பரிதாபம் இயாகோ!

இயா:—அவள் துர்நடக்கைகயைத் தாங்கள் இவ்வளவு இளக்கமான நெஞ்சோடு நோக்குவதானால், அவ்வாறு பகிரங்கமாயொழுகும்படி அவளுக்கு ஒரு சுதந்தரப்பட்டயம் கொடுத்துவிடுங்கள்; தங்களுக்கு அந்த அவமானமில்லாவிட்டால், வேறொருவருக்குமேயில்லை.

ஒதேல்:—அவளைத் துண்டு துண்டாய் வெட்டிவிடுகிறேன்.—என் மானத்தைக் கெடுத்தாளல்லவா!

இயா:—ஓ! அவள் செய்கை மிகக் கெட்டதே.

ஒதேல்:—அதுவும் என் கீழுள்ள உத்தியோகஸ்தனோடு!

இயா:—அது இன்னும் கெட்டதே.

ஒதேல்:—சிறிது விஷம் கொணர்ந்து கொடு, இயாகோ; இன்றிரவே:—நான் அவளுடன் வாதாடமாட்டேன்; ஏனெனின் அப்படிச் செய்தால், அவள் ரூபமும் அழகும் ஒருவேளை என் மனத்திடத்தைக் குலைத்துவிடும்:—இன்றிரவே, இயாகோ.

இயா:—விஷத்தினால் வேண்டாம்; அவள் படுக்கையிலேயே மூச்சைப்பிடித்துக் கொன்றுவிடுங்கள்; அவள் அவமானப்படுத்திய படுக்கையிலேயே அது செய்யுங்கள்.

ஒதேல்:—நல்லது, நல்லது: அதன் நியாயம் மனத்துக்குப் பிடித்திருக்கிறது: மிகவும் சரியே.

இயா:—காஸியோவுக்கோ,—அவருக்கு நான் ஏற்பாடு செய்துவிடுகிறேன்: நடு நிசிக்குள் மேல் சமாசாரம் தெரிவீர்கள்.

ஒதேல்:—நிரம்பவும் நல்லது. [உள்ளே எக்காளவொலி கேட்கிறது] அதென்ன எக்காளம்?

---

* காதலும் வெறுப்பும் மாறி மாறி மேலிடுகின்றன.

**இயா**:—ஏதோ வெனிஸிலிருந்து என்பது நிச்சயமே. ட்யூக்கினிடமிருந்து லாடவிக்கோ வந்திருக்கிறார்: தங்கள் மனைவியாரும் கூட வருகிறார் பாருங்கள்.

[லாடவிக்கோவும் டெஸ்டிமோனாவும்
வேலைக்காரரும் பிரவேசித்தல்.]

**லாடவி**:—தங்களைக் கடவுள் காப்பாராக, உத்தம சேனாபதி!

**ஒதேல்**:—ஐயா, மனப்பூரணமாய்த் தங்களுக்கும் அப்படியே விரும்புகிறேன்.

**லாடவி**:—வெனிஸ் ட்யூக்கும், துரைத்தனச் சங்கத்தாரும் தங்களுக்கு வந்தனமளிக்கின்றார்கள்.

[ஒரு நிருபம் அவன் கையில் கொடுக்கிறார்.]

**ஒதேல்**:—அவர்கள் ஆஞ்ஞாபனத் திருமுகத்தை முத்தமிடுகிறேன்.

[நிருபங்களைத் திறந்து வாசிக்கிறான்.]

**டெஸ்டி**:—அத்தான் லாடவிக்கோ! ஊரில் என்ன விசேஷம்?

**இயா**:—ஐயா, தங்களைக் காண மிகச் சந்தோஷமுறுகிறேன்; சைப்ரஸுக்குத் தங்கள் வரவு நல்லதாகுக.

**லாடவி**:—உமக்கு வந்தனம்; உபசேனாபதி காஸியோ சுகமோ?

**இயா**:—ஐயா, உயிரோடிருக்கிறார்.

**டெஸ்டி**:—அத்தான், அவருக்கும் என்னுதருக்கும் ஒரு மனஸ்தாபம் நேரிட்டிருக்கிறது; ஆனால் நீர் வந்துவிட்டீரே, எல்லாம் சரியாய் விடும்.

**ஒதேல்**:—அது அவ்வளவு நிச்சயமா?

**டெஸ்டி**:—நாதரே?

**ஒதேல்**:—[வாசிக்கிறன்.]'இதைச் செய்யத் தவறக்கூடாது'—

**லாடவி**:—அவர்கள் கூப்பிடவில்லை; நிருபம் வாசிப்பதிலேயே கவனமாயிருக்கிறார்கள். நம் பிரபுவுக்கும் காஸியோவுக்கும் மனஸ்தாபமா?

டேஸ்டி :—அதை என்னென்றுசொல்ல ? மிகப் பரிதபிக்கத்தக்கதே. காஸியோவின்மேல் எனக்குள்ள பக்ஷத்துக்கு, அவர்களிருவரையும் கூட்டுவிக்க என்ன பாடும் படுவேன்.

ஒதேல் :—நரக நெருப்புக்கு இரையே !

டேஸ்டி :—நாதரே ?

ஒதேல் :—புத்தியிருக்கிறதா ?

டேஸ்டி :—என்ன ! கோபமாயிருக்கிறாரா ?

லாடவி :—ஒருவேளை அந்த நிருபம் கோபமூட்டியிருக்கலாம் ; ஏனெனில், இவ்விடத்து ஆட்சிக்குக் காஸியோவை அவர்களுக்குப் பதிலாக நியமித்து, அவர்களை ஊருக்குத் திரும்பும்படி அதில் கட்டளை பிறந்திருக்கிறதென்றெண்ணுகிறேன்.

டேஸ்டி :—உண்மையாகவே, எனக்கு அது சந்தோஷமே.

ஒதேல் :—அப்படியா !

டேஸ்டி :—நாதரே ?

ஒதேல் :—உன் பைத்தியத்தைக் கண்டு சந்தோஷிக்கிறேன்*

டேஸ்டி :—ஏன், என் பிராணநாதரே ?

ஒதேல் :—பிசாசே ! [அவளை அடிக்கிறான்.]

டேஸ்டி :—அடிக்கும்படி நானொன்றும் செய்யவில்லையே.

லாடவி :—ப்ரபோ, நான் பிரத்தியக்ஷமாய்க் கண்டதாகப் பிரமாணஞ் செய்தாலுங்கூட, இதை வெனிஸில் நம்பமாட்டார்கள் : இது எல்லை கடந்ததே : அவளை ஆறுதல் செய்யுங்கள், அழுகிறாள்.

ஒதேல் :—ஓ, பிசாசே, பிசாசே ! ஸ்திரீகளின் கண்ணீரால் நிலம் கருவுறுமாயின், அவள் வடிக்கும் ஒவ்வொரு துளியும் ஒவ்வொரு முதலையாகச்† சனிக்கும்.—என் கண்முன்னில்லாது ஒழி !

* உன் சந்தோஷத்தைக் காண எனக்குப் பைத்தியவெறியுண்டாகிறது என்றும் பாடமுண்டு.

† முதலையானது பொய்யழுகையழுது ஏமாற்றி யிரைபிடித்துத் தின்பதாக மேனாட்டாருள் ஒரு கட்டுக்கதையுண்டு; ஆகவே, அவள் கண்ணீரெலலாம் வீண் பாசாங்கும் ஏமாற்றுமென்றபடி.

டெஸ்டி :—தங்களுக்குக் கோபமூட்டிக்கொண்டிரேன். [போதல்.]

லாடவி :—உண்மையில், சொற்படி கீழ்ப்படிந்து நடக்கும் சீமாட்டியே :—தயைசெய்து அவளைத் திரும்ப அழையுங்கள்.

ஒதேல் :—அம்மாளு !

டெஸ்டி :—நாதரே ?

ஒதேல் :—ஐயா, அவளிடத்தில் தங்கள் காரியமென்ன ?

லாடவி :—யார், என்னையா, ப்ரபோ ?

ஒதேல் :—ஆம்; அவளைத் திரும்பியழைக்க வேண்டினீர்களே நீங்கள்: ஐயா, அவள் எப்படி வேண்டினும் திரும்புவாள், ஆயினும் மேற்சென்றுகொண்டிருப்பாள். மறுபடியும் திரும்புவாள்; அன்றியும், அவளுக்கு அழவும் தெரியும், ஐயா, அழவும் தெரியும்; தவிரவும், அவள் கீழ்ப்படிந்து நடப்பவளே; தாங்கள் சொல்வதுபோல், கீழ்ப்படிந்து நடப்பவளே.—மிகவும் கீழ்ப்படிந்து நடப்பவளே.—உன் அழுகை நடக்கட்டும்.—ஐயா, இந்த (நிருப) விஷயமாக,—ஓ! என்ன சாமர்த்தியமான மாயக்கண்ணீர்!—நான் ஊருக்குத் திரும்பும்படி கட்டளை கிடைத்திருக்கிறது.—தொலை யிங்கிருந்து; சற்றுப் பொறுத்துக் கூப்பிட்டனுப்புகிறேன்.—ஐயா, நான் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து வெனிஸுக்குத் திரும்புகிறேன்.—இராதே இங்கே, ஒழி! [டெஸ்டிமோனு வெளிப்போதல்.] காஸியோ என் ஸ்தானத்தைப் பெறட்டும். தவிரவும், ஐயா, இன்றிரவு தாங்கள் என்னுடன் போஜனஞ் செய்யும்படி வேண்டிக்கொள்கிறேன்: ஐயா தாங்கள் ஸைப்ரஸுக்கு வந்தது சந்தோஷமாயிற்று.—ஆடுகளும் குரங்குகளுமே! * [வெளிப்போதல்.]

லாடவி :—நம் ஆலோசனை சபையார் அனைவரும் ஒரேமுகமாகச் சகல விஷயங்களிலும் சமர்த்தரென்று கூறும் உத்தம மோரியர் இவர்தாமோ? இவர்தாமோ கோபதாபத்தாற் சிறிதும் அசைவுறாத மனோதிடத்தையுடையவர்? இடையூறுகளும் விபத்துக்களும், மலைமேல்விட்ட அம்புபோல, எவ்வித ஊறுமே செய்ய ஏலாத திடமான ஆண்மையையுடையவரும் இவரேயோ?

---

இது டெஸ்டிமோனுவும் காஸியோவும் மிருகங்களைப்போல் மானமின்றி யொழுகுவதாக நினைத்துக் கூறிய கூற்று.

இயா :—அவர் நிரம்பவும் வேறுபட்டிருக்கிறார்.

லாடவி :—அவருக்குப் புத்தி ஸ்திரமாயிருக்கிறதோ? மூளை சிறிது கலங்கியில்லையோ?

இயா :—இப்பொழுதிருக்கிறபடிதானிருக்கிறார்: நான் குற்றங் கூறலாகாது. அவரிருக்கத்தக்கபடி இப்பொழுதில்லாவிடின், அவ்வாறு ஆகவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

லாடவி :—என்ன! தம் மனைவியை * அடிக்கிறதா!

இயா :—அது உண்மையில், அவ்வளவு சரியில்லைதான்; ஆயினும், அவ்வடியினும் கேடாக இன்னும் ஏதாவது விளையாதிருப்பின் நலமே!

லாடவி :—அது அவர் வழக்கமா,† என்ன? அல்லது அந்த நிருபங்கள் அவர் கோபத்தைக் கிளப்பி இந்தத் துர்க்குணத்தை நூதனமாயுண்டாக்கினவோ?

இயா :—ஐயோ, ஐயோ! நான் கண்ணுற் கண்டதையும் அறிந்திருப்பதையும் வெளியிடுவது என் யோக்கியதைக்குத் தக்கதில்லையே. நீங்களேயவரைக் கவனியுங்கள்; நான் சொல்லவேண்டாதபடி, அவர் நடவடிக்கைகளே அவர் குணத்தைக் காட்டிவிடும்: நீங்கள்மட்டும் அவரைத் தொடர்ந்து சென்று இன்னும் எவ்வாறு நடந்துகொள்கிறாரென்பதைக் கவனியுங்கள்.

லாடவி :—அவர் நான் நினைத்தபடியில்லாமையைக் கண்டு மனம் வருந்துகிறேன். [வெளிப்போதல்.]

## இரண்டாங்களம்: அரண்மனையில் ஓர் கூடம்.

(காலம்: முன்னிரவு.)

[ஒதெல்லோவும் எமிலியாவும் பிரவேசித்தல்.]

ஒதெல் :—ஆனால் நீ யொன்றுமே பார்த்ததில்லையா?

---

* பெண்ணெனும் பழிக்கு நாணல் நாகரிகமுற்ற யாவர்க்கும் பொதுவாயினும், மேனாட்டாருள் தத்தம் மனைவியரை விசேஷமாய்க் கொண்டாடிப் பேணுதல் மரபு; நம்மவரிற் பலர்க்கு இது புதுமையாகவே தோன்றும்.

† நெடுங்காலக்குறி.

எமிலி:—நான் ஒருபொழுதும் கேட்டதுமில்லை, சந்தேகப்பட்டதுமில்லை.

ஒதேல்:—ஆம், அவளும் காஸியோவும் கூடவிருக்கும்பொழுது பார்த்தேயிருக்கிறாய்.

எமிலி:—ஆனால் அப்பொழுது நான் ஒரு தீங்கும் கண்டதில்லை; அன்றியும் அவர்கள் பேச்சில் ஒவ்வொரு சொல்லையும் நான் கேட்டுக்கொண்டிருந்தேன்.

ஒதேல்:—என்ன! அவர்கள் ஒருபொழுதும் கிசுகிசென்று மெது வாய்ப் பேசவில்லையா?

எமிலி:—இல்லவேயில்லை, ப்ரபோ.

ஒதேல்:—அல்லது உன்னை யெங்காவது அனுப்பிவிடவும் இல்லையா?

எமிலி:—இல்லவேயில்லை.

ஒதேல்:—அவள் விசிறி, கையுறைகள், பொய்முகம்,* எதையாவது எடுத்துவரும்படி (அனுப்பினதில்லையா)?

எமிலி:—இல்லவேயில்லை ப்ரபோ.

ஒதேல்:—அது நம்பத்தக்கதல்லவே.

எமிலி:—ப்ரபோ, அவள் கற்புடையவளென்று, என் ஆத்மாவையே பணயமாக நான் துணிந்துவைப்பேன்: தாங்கள் வேறுவிதம் நினைத்தால், அவ்வெண்ணத்தை நீக்கிவிடுங்கள்.—தங்கள் இருதயத்துக்கு அது அவமானமே. எந்தப்பாதகனாவது தங்களுக்கு இந்தச் சமுசயத்தை உண்டுபண்ணியிருந்தால், சுவாமி அவனுக்குத் தீரா நரக தண்டனையை விதிக்கட்டும்! ஏனெனின், அவளிடத்திலேயே யோக்கியதையும் கற்பும் சத்தியமும் இல்லையெனின், ஒரு புருஷனுமே பாக்கியவானல்ல; அவர்கள் மனைவிமார்களில் சிறந்த பதிவிரதைகளுங் கூடக் கொடும்பழிக்கு உள்ளாகத்தக்கவர்களே.

ஒதேல்:—அவளை யிங்கே வரச்சொல்:—போ. [எமிலியா வெளிப்போதல்.] அவள் சரியாகத்தான் சொல்லுகிறாள்;—ஆனால் இவ்

* மேனாட்டில் கூத்துக்குச் செல்லுபவர் இனந்தெரியாது சில வேளைகளில் பொய் முகந்தரித்துச் செல்வது வழக்கம்.

வளவுகூடப் பேசத்தெரியாத அப்பாவிகள் அருமையே. இவள் வெகு சூதுக்கார துஷ்டை, துர்விஷயமான இரகசியங்களுக்கெல்லாம் வெகு சேமமாய்ப் பூட்டப்பட்ட களஞ்சியம் இவள்; அப்படியிருந்தும், இவள் முழந்தாட்பணிந்து தேவனைப் பிரார்த்திப்பதைப் பார்த்திருக்கிறேன்.

[எமிலியாவுடன் டெஸ்டிமோனு பிரவேசித்தல்.]

டெஸ்டி:—நாதரே, தங்களிஷ்டமென்ன?

ஒதெல்:—சற்று இங்குவா, என் குயிலே.

டெஸ்டி:—தங்கள் பிரியமென்ன?

ஒதெல்:—உன் கண்களைப் பார்க்கட்டும்; என் முகத்தைப்பார்.

டெஸ்டி:—இதென்ன விந்தையான வேண்டுகோள்.

ஒதெல்:—[எமிலியாவை நோக்கி] உன் தொழில் சிறிது காட்டு, அம்மாளு; கதவை மூடிக்கொள்; யாராவது வந்தால் இருமி அல்லது முக்கி (ஜாடையாய்)த் தெரியப்படுத்து; உன் தொழில்;* நிற்காதே, சீக்கிரம் போ.

[எமிலியா வெளிப்போதல்.]

டெஸ்டி:—தங்கள் பேச்சின் அர்த்தத்தை வெளியிடும்படி முழந்தாட்பணிந்து பிரார்த்திக்கிறேன். தங்கள் வார்த்தைகளில் ஏதோ கடுங்கோபமட்டுந் தெரிகிறதேயன்றி, அவற்றின் பொருள் எனக்குத்தெரியவில்லை.

ஒதெல்:—ஏன், யாரடி நீ?

டெஸ்டி:—தங்கள் மனைவி, நாதரே; தங்கள் உண்மையும் பக்ஷமுமுள்ள மனைவியே.

ஒதெல்:—வா, அப்படிச் சத்தியஞ் செய்து, (கள்ளப்பிரமாணஞ் செய்ததற்காக) நரகத்துக்காளாகிவிடு; இல்லாவிடின், நீ தெய்வலோகவாசிபோலிருப்பதால், உன்னை நரகத்துக்கிழுத்துச் செல்லப் பிசாசுகளே பயப்படக்கூடும்: நீ பதிவிரதைதானென்று பிரமாணஞ்செய்.

---

* காஸியோவும் டெஸ்டிமோனுவும் சேர்ந்திருக்குங் காலங்களில் அவ்விதம் அவர்களுக்கு எமிலியா உதவிசெய்வது வழக்கமென்பதைச் சுட்டிக்கூறிய கூற்று இது.

டெஸ்டி :—கடவுள் அதை உண்மையாயறிவார்.

ஒதேல் :—நீ நெறி தப்பியவளென்று கடவுளுக்கு உண்மையா கத்தெரியும்.

டெஸ்டி :—யார் விஷயத்தில், நாதரே? யாருடன்? நான் எப்படி நெறிதவறினவள்?

ஒதேல் :—ஓ, டெஸ்டிமோனு!—போ! போ! போ!

டெஸ்டி :—ஐயோ, கஷ்டகாலமே!—நீங்கள் ஏன் அழுகின்றீர் கள்? நாதரே, தங்கள் கண்ணீருக்கு நானோ காரணம்? ஊருக்கு நீங் கள் திரும்பும்படி வந்திருக்கும் கட்டளைக்கு என் தந்தையே காரணமா யிருக்கலாமென்று நீங்கள் ஒருகால் சந்தேகித்தால், அதற்கு என்மேற் குற்றங் கூறுதேயுங்கள்: நீங்கள் அவரை இழந்துவிட்டீர்களானால், ஏன், நானும்அவரை இழந்தவளே. *

ஒதேல் :—என்னைச் சோதிக்கத் திருவுளங்கொண்ட தெய்வம், எனக்குத் துக்கங்களை யுண்டுபண்ணியிருப்பினும், நானுவித கஷ்டங்க ளையும் அவமானங்களையும் என் வெறுந்தலையின் மேற்கவிழ்த்திருப்பினும், என்னைக் கொடிய வறுமை (வாரிதி) யில் வாயளவும் ஆழ்த்தியிருப்பி னும், நானும் என் சகலவெண்ணங்களும் நோக்கங்களும் வீணாக மடிய என்னை அடிமைச்சிறையிலிட்டிருப்பினும், ஏதோ ஒரு சிறுதுளியளவு பொறுமையாவது என் மனத்தில் எங்காயினும் தங்கி (உதவி) யிருக்கும்: மேலும், யாவரும் எப்பொழுதும் கைசுட்டியிகழும்படியான அவமானத் துக்கு என்னை நிலைத்த இலக்காக்கி யிருப்பினும், அந்தோ! அதையும் பொறுத்துக்கொள்ளக் கூடும்: சரி, இருக்கட்டும்: ஆனால், என் இருத யத்தையே நான் சேமித்து வைத்திருக்கும் களஞ்சியம், என் ஆருயிரின் மெய்ந்நிலை, என் வாழ்க்கைப் பெருக்குக்கு இன்றியமையாத சுனை, அங் கிருந்தே என்னைத் துரத்தலாயிற்றே! அன்றேல், கெட்ட தேரைகள் கூடிக் குஞ்சுபொரிக்கும் ஒரு தொட்டியாக, அதை வைத்திருக்கும்படி யாயிற்றே!—அழகும் தெய்வத்தன்மையும் வாய்ந்த பொறுமையே!

* டெஸ்டிமோனு இன்னும் உண்மையைத் தெரிந்துகொள்ளாமையும், எமிலியா முன்னரே (III. 4) குறிப்பறிந்தமையும் இருவர் குணபேதத்தை யும் விளக்குகின்றன.

இனியுன் தோற்றத்தை மாற்றிவிடு,—ஆம், இனி நரகத்தைப்போல் பயங்கரமாகிவிடு!

டெஸ்டி:—என்னாதர் என் கற்பைச் சந்தேகிக்கவில்லையென்று நம்புகிறேன்.

ஒதெல்:—ஓ, ஆமாம்; இறைச்சிக் கடைகளிற் பறக்கும்பொழுதே கூடிக் கருவுறும் கோடைகாலத்து ஈக்களுக்குள்ள கற்பே. மனத்தைக் கவரும்படியான அழகும், தலைவலியை உண்டுபண்ணும்படியான அளவு நறுமணமும் பொருந்திய புற்பதரே! நீ பிறவாதிருந்தாலாகாதா!

டெஸ்டி:—ஐயோ! நான் என்ன அறியாப் பாவத்தைச் செய்துவிட்டேன்?

ஒதெல்:—இந்த அழகிய காகிதம், மிக மனோரம்மியமான இந்தப் புஸ்தகம்,* 'அயோக்கியை' என்றெழுதவா செய்யப்பட்டது? என்ன செய்தாயா! செய்கிறது!—ஓ, பொதுவான வேசையே! உன் செய்கைகளைமட்டும் நான் வாய்விட்டுச்சொன்னால், என்னிரு கன்னங்களும் நாணத்தை யெரித்துச் சாம்பராக்கும் ஊதுலைகள்போல் வெட்கத்தாற் சிவந்துவிடுமே.—என்ன செய்தாயா! அதைக்கண்டு விண்ணுலகு மூக்கையடைத்துக்கொள்கின்றது, சந்திரனும் கண்ணை மூடிக்கொள்கிறான்; ஒழுங்கு நியாயமின்றிக் கண்டதையெல்லாம் முத்தமிட்டுச் செல்லும் காற்றுக்கூட, அதைக்கேட்க மனமின்றிப் பூமியின் கீழ், சுரங்கங்களில் வாய்மூடி யொளிக்கின்றது.—என்ன செய்தாயா!—வெட்கங்கெட்ட வேசையே!

டெஸ்டி:—தேவனாணை, தாங்கள் என்மேற் சொல்வது தவறே.

ஒதெல்:—நீ யொரு வேசியில்லையா?

டெஸ்டி:—நான் கிறிஸ்துவை நம்புவது மெய்யெனின், இல்லை: இந்தச் சரீரத்தை மற்றவர் கெட்டவிதமாக அக்கிரமமாகத் தொடாதபடி, என்னாதருக்காகக் காப்பாற்றி வருவது வேசைத்தனம் அன்றெனின், நான் அப்படிப்பட்டவளில்லை.

ஒதெல்:—என்ன! நீ யொரு வியபிசாரியில்லையா?

* டெஸ்டிமோனாவின் முகம் அல்லது சரீரம்.

**டேஸ்டி:**—இல்லை; நான் சொல்வது பொய்யெனில் நரகத்துக்குப் போகிறேன்.

**ஒதேல்:**—இது மெய்தானே?

**டேஸ்டி:**—கடவுள் நம்மைப் பொறுத்தருள்வர்.

**ஒதேல்:**—ஆனால் என்னை மன்னித்துக்கொள்: ஒதெல்லோவை விவாகஞ்செய்துகொண்ட வெநிஸ் நகரத்துச் சூதுக்கார வியபிசாரி நீ என்றெண்ணினேன்.—இதோ, அம்மாளே, ஸெயிண்டு பீட்டருக்கு எதிரிடையான தொழில் செய்து நரகவாயிலைக் காத்திருப்பவளே,* உன்னை, உன்னை, ஆம் உன்னைத்தான்! (கூப்பிடுகிறேன்.) எங்கள் வேலை முடிந்துவிட்டது; உன் சிரமத்துக்காக, இதோ, காசு; வாயை மூடிக்கொள், எங்கள் சங்கதியை வெளிவிட்டுவிடாதே. [வெளிப்போதல்.]

[எமிலியா திரும்பிப் பிரவேசித்தல்.]

**எமிலி:**—ஐயோ! இவர் மனத்தில் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறார்?—அம்மா! உங்களுக்கு என்னசெய்கிறது? என் அம்மா! உங்களுக்கு என்னசெய்கிறது?

**டேஸ்டி:**—அரைத்தூக்கம்போல் மயக்கமாயிருக்கிறது.

**எமிலி:**—அம்மா, எஜமானர் எனிப்படி யிருக்கிறார்?

**டேஸ்டி:**—யார்?

**எமிலி:**—என், என் எஜமானர், அம்மா?

**டேஸ்டி:**—உன் எஜமானர் யார்?

**எமிலி:**—என் கண்ணாட்டி, உங்கள் நாதரே.

**டேஸ்டி:**—எனக்கொருவருமில்லை: எமிலியா, என்னுடன் பேசாதே; என்னால் அழவும் முடியவில்லை; கண்ணீரைத்தவிர வேறு சொல்வதற்கு மறுமொழியுமில்லை. இன்றிரவு படுக்கைமேல் என் கலி

* இது எமிலியாவைநோக்கி. ஸெயிண்டு பீட்டர் என்ற அப்போஸ்தலர் கிறிஸ்தவக் கொள்கைப்படி, சுவர்க்கவாயிற் காவலாளி; கிறிஸ்துவின் பிரதம பக்தர்களில் ஒருவர். துர்விஷயத்துக்கு உதவிசெய்வதைக்குறித்து, எமிலியா இவ்வாறு கூறப்பட்டாள்.

யாணத்தன்றிரவு * விரித்த துப்பட்டிகளையே விரித்துவை,—மறந்துவிடாதே :—உன் புருஷனை யிங்கே கூப்பிடு.

**எமிலி** :—எல்லாம் எப்படி மாறிவிட்டது? [வெளிப்போதல்.]

**டெஸ்டி** :—நானிப்படி நடத்தப்படுவது தகுதிதான், மிகவும் தகுதியே. என் அற்பப் பிழையைக்கொண்டும் அணுவேனும் அவர் கெட்ட எண்ணங்கொள்ளும்படி, நான் எவ்வாறு நடந்துகொண்டேன்?

[எமிலியா இயாகோவுடன் திரும்பிப் பிரவேசித்தல்.]

**இயா** :—அம்மா, தங்களிஷ்டமென்ன? தங்களுக்கென்ன செய்கிறது?

**டெஸ்டி** :—எனக்குச் சொல்லத்தெரியவில்லை. சிறுகுழந்தைகளுக்குப் போதிப்பவர்கள், நயமான வழிகளாலும், இலேசான வேலை நியமித்தும் கற்பிக்கிறார்கள் : அவரும் என்னையப்படியே கண்டித்திருக்கலாம் ; ஏனெனின், உண்மையில், 'கண்டிப்பு' விஷயத்தில் நானும் ஒரு குழந்தையே.

**இயா** :—சங்கதியென்ன, அம்மா?

**எமிலி** :—ஐயோ! இயாகோ, உத்தமஸ்திரீகள் பொறுக்கமுடியாதவிதமாக, அவர்களை எஜமானர் வெகு கடுமையாகவும் அவதூறாகவும் பட்டி வியபசாரியென்று பழிகூறித் திட்டினார். †

**டெஸ்டி** :—நான் அப்பேர்க்கொத்தவளா, இயாகோ?

**இயா** :—எப்பேர், அம்மா?

**டெஸ்டி** :—நான் அப்படிப்பட்டவளென்று என்னாதர் சொன்னதாக அவள் சொல்லுகிற பெயர்.

**எமிலி** :—குடிவெறியிலிருக்கும் பிச்சைக்காரன்கூடத் தன் வைப்பாட்டியை அவ்வாறு திட்டமாட்டான்.

**இயா** :—அவரேன் அப்படிச்செய்தார்?

**டெஸ்டி** :—நானறியேன் ; நானப்படிப்பட்டவளல்லவென்பது நிச்சயமே.

* நெடுங்காலக்குறி.

† எமிலியாவுக்குள்ள மற்றத் துர்க்குணங்களுக்கேற்ப, கதவோரத்திலிருந்து ஒட்டுக்கேட்கும் வழக்கமுமுண்டென்று இதனால் கவி விளக்குகிறார்.

**இயா:**—அழாதேயுங்கள், அழாதேயுங்கள்:— ஐயோ காலமே!

**எமிலி:**—எத்தனையோ மேலான வரர்களையும், தகப்பனாரையும், சுவதேசத்தையும், இஷ்டர்களையும் அவர்கள் துறந்தது இப்பெயர் கொள்ளவா? இப்படியானல், யார்தாம் அழார்கள்?

**டெஸ்டி:**—அது என் துர்பாக்கியமே.

**இயா:**—என்ன கேடிது! அவருக்கிந்த எண்ணம் எங்கிருந்து வந்தது.

**டெஸ்டி:**—கடவுளே யறிவார்.

**எமிலி:**—நான் சொல்லுகிறபடி இல்லாவிடின் என்னைத் தூக்கி விடலாம்: எவனோ ஒரு பாழான பாதகன், வெகு சுறுசுறுப்பாய்க் கோள்கூறிப் பிரியஞ்சம்பாதிக்கும் திருடன் எவனோ ஒருவன், பொய் சொல்லி ஏமாற்றும் அடிமைக்காரப் பயல் எவனோ ஒருவன், ஏதோ ஒரு உத்தியோகத்தையடையும்பொருட்டு, இந்த வீண் பழியை உண் டுபண்ணியிருக்கிறான்; இல்லாவிடின் என்னைத் தூக்கிவிடலாம்.

**இயா:**—சீ! அப்படி யொருவனுமில்லை; அது நடக்கக்கூடியதல்ல.

**டெஸ்டி:**—அப்படி யாராயினுமிருப்பின் அவனைக் கடவுள் மன்னிப்பாராக!

**எமிலி:**—தூக்குக் கயிறே அப்படிப்பட்டவனுக்கேற்ற மன்னிப்பு! அவர்களோடு யார் பழகுகிறார்கள்? இடம் எங்கே? எப்பொழுது? எப்படி? என்ன பொருத்தமிருக்கிறது? எவனோ ஒரு மகா பாதகன், இழிகுணமுள்ள தூர்த்த வஞ்சகக்காரப் பயல் எவனோ, மோரியரிடம் கோள்கூறி அவரை ஏமாற்றியிருக்கிறான்:—தெய்வமே! இப்படிப்பட்ட அயோக்கியப் பயல்களை வெளிப்படுத்தி, அந்தத் திருடர்களைக் கிழக்குத்திசை அந்தத்திலிருந்து மேற்குத்திசை அந்தமளவும், உலக முழுவதும், சாட்டையடி யடிக்கும்படி, ஒவ்வொரு யோக்கியர் கையிலும் ஒரு சவுக்கைக் கொடுத்தாலாகாதா!

**இயா:**—அடக்கிப் பேசு.

**எமிலி:**—ஓ! அவர்கள் நாசமாகட்டும்! அப்படிப்பட்ட பயல்களில் எவனோ ஒருவன்தான் உம்முடைய புத்தியைத் தாறுமாறாக்கி மோரியர்விஷயமாக என்மேற் சந்தேகங்கொள்ளும்படி செய்ததும்.

இயா:—உனக்குப் புத்திகிடையாது; நிறுத்து.

டெஸ்டி:—நல்ல இயாகோவே! என்னுதர் பிரியத்தைத் திரும்பப்பெற நான் என்னசெய்யட்டும்? நல்ல நண்பனே, அவரிடம் போ; சத்தியமாய்ச் சொல்லுகிறேன், அவரை எதனுலிழந்தேனே, நானறியேன். இதோ முழந்தாளிட்டுப் பிரமாணஞ்செய்கிறேன்:—மனத்தினுலாவது செய்கையினுலாவது எப்பொழுதேனும் நான் அவர் காதலை மீறி நடந்திருந்தாலும்; அல்லது, என் கண்களோ, செவிகளோ, மற்றெந்த இந்திரியமோ, அவருருவாலன்றி வேறெந்த ரூபத்தாலேனும் சந்தோஷமடைந்திருந்தாலும்; அல்லது, இன்னும், இப்பொழுதும், இதுவரையும், இனியெக்காலத்திலும்—அவரென்னை உதறித்தள்ளி அனுதையாக்கி விலக்கிவைத்துவிட்டாலும்—அவர்மேல் எனக்கு மிக்க காதலில்லாவிடினும், கடவுள் என்மேற் கருணையை முற்றும் நீக்கிவிடுவாராக! மனக்கசப்பு எவ்வளவோ செய்யக்கூடும்; அதினும் அவர் மனக்கசப்பு என் வாணுளையெல்லாம் வீணுளாக்கிவிடக்கூடும்; ஆனுல் என் காதலைமட்டும் ஒருபொழுதும் பங்கமுறச் செய்ய முடியாது. என்னுல், “பட்டி” என்று சொல்லவுமுடியாது; அந்த வார்த்தையை உச்சரிக்கவே இப்பொழுது என் மனம் கஷ்டப்பட்டது; ஆகவே, அந்தப் பட்டத்தைத் தரக்கூடிய செயலை, இந்த அருமையான உலகமுழுவதும் கிடைப்பினுஞ் செய்யேன்.

இயா:—தயைசெய்து சிறிது பொறுத்துக்கொள்ளுங்கள்; இது ஏதோ தற்காலக் குணக்கேடேயன்றி வேறில்லை; துரைத்தனகாரியம் அவருக்குக் கோபத்தையுண்டாக்க, அவர் தங்களுடன் கோபித்திருக்கிறுர்.—

டெஸ்டி:—வேறொன்றுமில்லாவிடின்,—

இயா:—அப்படியேதான்; நானுறுதிசொல்லுகிறேன். [எக்காள ஒலி கேட்கின்றது.] அதோ! இந்த வாத்தியங்கள் இராப்போஜனத்துக்கு அழைக்கின்றன. வெநிஸிலிருந்து வந்திருக்கும் தூதர்கள் சாப்பிடக் காத்திருக்கிறுர்கள்: உள்ளே போங்கள்: அழாதேயுங்கள்: எல்லா விஷயங்களும் சீராகிவிடும்.

[டெஸ்டிமோனுவும் எமிலியாவும் வெளிப்போதல்.]

[ராடரிகோ பிரவேசித்தல்.]

என்ன சங்கதி ராடரிகோ!

**ராட:**—நீ என் விஷயத்தில் நியாயமாய் நடப்பதாகத் தோன்ற வில்லை.

**இயா:**—அப்படிக்கின்றி யென்ன?

**ராட:**—இயாகோ, தினந்தோறும் யாதானுமொரு போக்குச் சொல்லி என்னை எத்துகிறாய்; இப்பொழுது பார்த்தால், நம்பிக்கை யை உண்டுபண்ணக்கூடிய நற்சமயங்களை எனக்குக் கொடுப்பதற் குப்பதிலாக, இயல்பாக நேரிடும் அற்பசொற்ப வாய்ப்புக்களையும் நீயே தடுப்பதாகவே தோன்றுகின்றது. நானினிமேற் பொறுக்கவேமாட் டேன்; இதுகாறும் முட்டாள்தனமாய் அநுபவித்ததையும் வெளியி டாது சகித்திருக்கவுமாட்டேன்.

**இயா:**—நான் சொல்வதற்குச் செவிகொடுப்பாயா, ராடரிகோ?

**ராட:**—நிச்சயமாகவே, இதுகாறும் கேட்டுக்கொண்டிருந்ததே அதிகம்; ஏனெனின், உன் வார்த்தைகளுக்கும் செய்கைகளுக்கும் ஒரு வித சம்பந்தமுமேயில்லை.

**இயா:**—நீ என்மேல் அநியாயமாய்ப் படாப்பழி கூறுகிறாய்.

**ராட:**—உண்மையைத்தவிர வேறில்லை. என் ஆஸ்திக்குமேலா கச் செலவிட்டாயிற்று. டெஸ்டிமோனாவுக்குக் கொடுப்பதற்கென்று நீ என்னிடம் வாங்கிக்கொண்ட நகைகள், ஒரு பெண்துறவியின் கற்புநிலையைக்கூடப் பாதி கெடுத்திருக்கும்: அவள் அவைகளை அங்கீ கரித்துக்கொண்டதாகவும், சீக்கிரத்தில் அவள் கவனமும் பழக்கமும் எனக்குக் கிடைக்குமென்றும் ஆறுதல்சொல்லி ஆசையூட்டினாய்; ஆனால் ஒன்றையும் காணவில்லை.

**இயா:**—நல்லது; இருக்கட்டும்; மிகவும் நல்லது.

**ராட:**—மிகவும் நல்லது! இருக்கட்டும்! நான் சும்மா இருக்கவும் மாட்டேன், அப்பா, அது மிக நல்லதுமில்லை: இதோ கையடித்துக் கூறுகிறேன்: அது மிகவும் கெட்டதே; நீ என்னை எத்துகிறதாகவே தோன்றுகின்றது.

**இயா:**—சரிதான்.

ராட:—நான்தான் அது சரியில்லையென்று சொல்லுகிறேனே. டெஸ்டிமோனாவிடம் நானின்றெனென்று தெரியப்படுத்துவேன்: என் நகைகளை அவள் திரும்பிக் கொடுத்துவிட்டால், என் முயற்சியை விட்டுவிட்டு, அக்கிரமமாக அவளை இச்சித்ததற்கும் மனஸ்தாபமுறுவேன்; இல்லாவிடின், நீயே எனக்கு உத்தரவாதி என்பதை நிச்சயமாய்க் கொள்.

இயா:—நீ சொல்லவேண்டியதெல்லாம் சொல்லியாயிற்று.

ராட:—ஆம்; நான் செய்வதாக உத்தேசமில்லாத ஒன்றையும் சொல்லவுமில்லை.

இயா:—ஆ, உன்னிடத்திற் சிறிது "உரோஷ" மிருக்கிறதென்பது இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது; ஆகவே, இந்த நிமிஷமுதல், எப்பொழுதுமிருந்ததைவிட மேலான அபிப்பிராயம் உன்னைப்பற்றிக் கொள்ளுகிறேன். உன் கையைக்கொடு, ராடரிகோ: நீ என்மேல் பழிகூறியது மிகவும் நியாயமானதே; ஆயினும், உன் விஷயத்தில் மிக நேர்மையாகவே நடந்திருக்கிறேனென்று இன்னும் உறுதியாய்க் கூறுகிறேன்.

ராட:—அது வெளிக்குத் தோன்றவில்லை.

இயா:—அது வெளிக்குத் தெரியவில்லையென்பதை நான் ஒத்துக்கொள்கிறேன்; உன் சந்தேகம் உன் புத்திக்கூர்மையையும் நிதான அறிவையும் விளக்குகின்றது. ஆனால், ராடரிகோ, எப்பொழுதினும் மேலான காரணங்களைக்கொண்டு முன்னிலும் உறுதியாக இப்பொழுது நான் நம்புகிறபடி, உன்னிடத்தில் ஊக்கமும், தைரியமும், ஆண்மையுமிருப்பது மெய்யாயின், இன்றிரவு அதைக்காட்டு: அடுத்த இரவு நீ டெஸ்டிமோனாவை அடையாவிடின், இவ்வுலகத்தினின்றும் என்னுயிரை மோசத்தினாலும் சித்திரவதைகளினாலும் நீக்கிவிடு.

ராட:—சரி, என்னதது? புத்திக்கு எட்டியதா? முடிக்கக்கூடியதா?

இயா:—ஐயா, ஒதெல்லோவின் ஸ்தானத்தில் காஷியோ நியமிக்கப்பட்டு, அவ்விஷயமாக வெநிஷிலிருந்து விசேஷ "ஸங்நது" வந்திருக்கிறது.

**ராட:**—அது மெய்தானா? ஆனால் ஒதெல்லோவும் டெஸ்டிமோனாவும் வெநிஸுக்குத் திரும்பிவிடுவார்களே.

**இயா:**—ஓ, இல்லை; அவன் மௌரிட்டேனியாவுக்குப் போகிறான்; யாதானும் ஒரு விபத்தால் அவன் இங்கே தாமதிக்கும்படி நேர்ந்தாலன்றி, அழகிய டெஸ்டிமோனாவையும் தன்னுடன் கொண்டுபோய் விடுவான்: அவன் போவதை நிறுத்த, காஸியோவை நீக்குதல்போல் ஒன்றும் அவ்வளவு நிச்சயமாய்ப் பலியாது.

**ராட:**—அவனை நீக்குவதென்றால், உன் தாற்பரியமென்ன?

**இயா:**—ஏன், ஒதெல்லோவின் ஸ்தானத்தைப் பெற முடியாமற் செய்துவிடுகிறது,—மூளை சிதற மண்டையை உடைத்துவிடுகிறது.

**ராட:**—அதையா என்னைச் செய்யச்சொல்கிறாய்?

**இயா:**—ஆம், உனக்கொரு இலாபத்தையும் உரிமையையும் செய்துகொள்ளத் துணிவிருந்தால், இன்றிரவு அவன் ஒரு வேசி வீட்டில் சாப்பிடுகிறான்; நான் அங்கு அவனிடம் போகிறேன்:—அவனுக்குக் கிடைத்திருக்கும் கௌரவமான அதிஷ்டத்தைப்பற்றி அவன் இன்னும் அறியான். அவன் அங்கிருந்து போகும் வழியில் நீ காத்திருந்தால், உன்னிஷ்டப்படி வேலையைத் தீர்த்துவிடலாம்; பன்னிரண்டு மணிக்கும் ஒரு மணிக்கும் இடையில் அவன் செல்லும்படி நான் ஏற்பாடு செய்கிறேன். நானும் பக்கத்திலிருந்து உதவிசெய்கிறேன்; நாமிருவருமாக அவனை வீழ்த்திவிடலாம். வா, திகைத்துநிற்காதே, என் கூட வா; அவன் சாவு எவ்வளவு அவசியமென்று காட்டுகிறேன், பிற்பாடு அதைச் செய்வது உன் கடமையென்றே நீ நினைப்பாய். இப்பொழுது இராப்போஜன காலம் கடந்துவிட்டது, இரவும் வீணாகக் கழிகின்றது; வேலையைப் பார்ப்போம்.

**ராட:**—இதற்கு இன்னும் முகாந்தரங்கள் வேண்டும்.

**இயா:**—நான் உன்னைத் திருப்தி செய்கிறேன். [போதல்.]

## மூன்றுங்களம் :—அரண்மனையில் மற்றோரறை.

(காலம்: இரவு.)

[ஒதெல்லோ, லாடவிக்கோ, டெஸ்டிமோனு, எமிலியா, வேவுகாரர், இவர்கள் பிரவேசித்தல்.]

லாடவிக்கோ :—ஐயா! தயைசெய்யுங்கள், இன்னும் என் பொருட்டுச் சிரமம் வேண்டாம்.*

ஒதெல் :—இல்லை, மன்னியுங்கள்; நடந்தால் எனக்கு நல்லதே.†

லாடவி :—அம்மா! போய்வருகிறேன்; தாழ்மையுடன் வந்தனமளிக்கிறேன்.

டெஸ்டி :—நீங்கள் வந்தது மிகச் சந்தோஷமே.

ஒதெல் :—வருகிறீர்களா, ஐயா?—ஓ—டெஸ்டிமோனு—

டெஸ்டி :—நாதரே?

ஒதெல் :—நீ சக்ஷணமேபோய்ப் படுத்துக்கொள்; நான் இதோ திரும்பி வந்துவிடுவேன்: உன் சேடியைப் போகச்சொல்லிவிடு: சொன்னபடிசெய்.

டெஸ்டி :—ஆகட்டும், நாதரே.

[ஒதெல்லோவும், லாடவிக்கோவும், வேவுகாரரும் வெளிப்போதல்.]

எமிலி :—இப்பொழுது எவ்வாறிருக்கிறது? அவர் முன்னிலும் சாந்தமாயிருக்கிறார்.‡

---

* ஒதெல்லோவுடன் இரவில் விருந்துண்டபின் தன் 'ஜாகைக்கு' மீளும் லாடவிக்கோவை, மோரியன் சிறிதுதூரம் உடன்சென்று வழியனுப்புகிறான்.

† அதிகரேமான மனோவியாகுலத்தால் சரீரமும் அமைதியற்று, யாதானும் ஒருவித முயற்சியை நாடும் உண்மையைக் கவி சுட்டியிருக்கின்றார்.

‡ இது இயற்கைக்கு மிகப் பொருந்தியதே: சமுசயத்தாலும், மனச்சலனத்தாலும் அலைப்புண்டு, மூர்க்கவெறியன்போல் ஒழுகிய மோரியன், சமுசயம் நீங்கி, அவளைக் கொன்றுவிடுகிறதென்ற முடிவுக்கு வந்தபின், சாந்தமாக அடங்கியொழுகுவதுதான் இயல்பு.

டெஸ்டி:—அவர் உடனே திரும்பிவருவதாகச் சொல்லுகிறார்: என்னைப் படுக்கைக்குப் போம்படிக்கும், உன்னை அனுப்பிவிடும்படிக்கும் கட்டளையிட்டிருக்கிறார்.

எமிலி:—என்னையனுப்பிவிடுகிறதா!

டெஸ்டி:—அப்படியே அவர் கட்டளை; ஆதலின், நல்ல எமிலியா, என் படுக்கை உடையைத் தந்துவிட்டு, நீ போய்வா; நாம் இப்பொழுது அவரைக் கோபமூட்டலாகாது.

எமிலி:—ஒருபொழுதுமே நீங்கள் அவரைக் கண்டிராதிருந்தீர்களில்லையே என்றெண்ணுகிறேன்!

டெஸ்டி:—நான் அப்படி விரும்பவில்லை; என் காதல் மிகுதியால்—என் உடுப்பை நெகிழ்த்து—அவர் பிடிவாதமும், கண்டிப்புக்களும், சினக்குறிகளுங்கூட, தயையும் நற்குணமும் பொருந்தியனவாய் என் மனத்துக்குத் தோன்றுகின்றன.

எமிலி:—நீங்கள் கட்டளையிட்ட துப்பட்டிகளையே படுக்கைமேற் பரப்பியிருக்கிறேன்.

டெஸ்டி:—எல்லாம் ஒன்றுதான்.—அம்மாடி! நம்முடைய மனங்களில் எவ்வளவு அஞ்ஞானமிருக்கிறது!—நான் உனக்குமுன் செத்துப்போனால், அந்தத் துப்பட்டிகளில் ஒன்றையே எனக்கு முகவாசையிடு.*

எமிலி:—போதும், போதும், இதென்ன பேச்சு.

டெஸ்டி:—என் தாயினிடத்தில் பார்பாரா என்றொரு பணிப்பெண் இருந்தாள்: அவள் காதலானாள்; அவள் காதலன் பைத்தியம்பிடித்து அவளை விட்டுவிட்டுப் போய்விட்டான்: அவள் "வில்லோவை"† பற்றி ஒரு பாட்டுப்பாடுவதுண்டு; அது ஒரு பழைய பாட்டு; ஆயினும் அவள் அதிஷ்டத்துக்குப் பொருந்தியது; அவள் அதைப் பாடி

* பெண்மைக்குரிய பேதைமையான எண்ணங்களையும், அஞ்ஞானத்தையும், முன்னிமித்தமாக வெழும் நினைவுகளையும், அஞ்ஞானமென்றறிந்தும் அதையநுசரிக்கும் குணத்தையும், தன்னையே நொந்துகொள்வதையும், வெகு நுட்பமாக ஒரு புருஷ கவி அறிந்தெழுதியிருப்பது மிக அற்புதமே.

† Willow. வாகைவெற்றியைக் குறிப்பதுபோல், இது மேனுட்டாருள் சோகத்தைக் குறிப்பது.

க்கொண்டே இறந்தாள்: இன்றிரவு அந்தப் பாட்டு என் மனத்தை விட்டுப் போகாதிருக்கிறது; அந்த ஏழைப் பார்பாராவைப்போல், ஒரு புறமாய்த் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு, அந்தப் பாட்டைப் பாட வேண்டும்போலிருக்கிறது.—சிறிது துரிதம் செய்.

எமிலி:—உங்கள் படுக்கையுடையைப்போய் எடுத்துவரட்டுமா?

டெஸ்டி:—வேண்டாம், உடுப்பை இங்கே நெகிழ்த்து.—இந்த லாடவிக்கோ லக்ஷணமாயிருக்கிறார்.

எமிலி:—நல்ல சுந்தர புருஷன்.

டெஸ்டி:—சாதுரியமாய்ப் பேசுகிறார்.

எமிலி:—வெனிஸில் எனக்கொரு பிரபுத்திரியைத் தெரியும்: இவர் முத்தம் ஒன்று பெறுதற்குப் பாலஸ்டையின்* வரைக்கும் காலால் நடந்து போக வேண்டினும் போவாள் அவள்.

டெஸ்டி:—[பாடிக்கொண்டு]

ஐயோ! இவ் வேழைமகள் அத்திமரத் தடியிருந்து,
வெய்யபெரு மூச்செறிதல், வில்லுவமே பாடாயோ.
கைமார்பில் வைகமுழங் கான்மிசையே தலைசோர,
மெய்சோரல் பாடாயோ, வில்லுவமே, வில்லுவமே;
அம்ம! அவள் படுந்துயரம் அருகொழுகும் புத்தருவி
விம்மியிசைத் தழல்பாடாய், வில்லுவமே, வில்லுவமே;
கண்ணிணைகள் காலுழுவர்க் கண்ணீர்கள் கல்லிளக,

இவற்றைத் தூரவை:—

[பாடிக்கொண்டு] 'பண்ணுவது பாடாயோ, வில்லுவமே, வில்லுவமே.' சற்றுத் துரிதம்செய்; அவர் வந்துவிடுவார். [பாடிக்கொண்டு]

தாரெனக்குப் பசுவில்வம், தகவிலவே றெனப்பாடாய்;
ஆருமவர் பழிதூற்றீர், அவர் எள்ளல் எனக்கிசைவே.—

இல்லை, அடுத்தது அதில்லை.—உற்றுக்கேள்!
யார் கதவு தட்டுகிறவர்?
எமிலி:—காற்றுத்தான்.

* கிறிஸ்துவின் ஜநந பூமி. ஒரு முத்தத்துக்காக அவ்வளவு சிரமத்தையும் பாராட்டாத பெருங்காதலுடையவளென்பது கருத்து.

டெஸ்டி:—[பாடிக்கொண்டு]

*அன்பரைப்பொய் அன்பரென அழைத்தேன் நான் அதற்கவர்தாம்*
*என்பகர்ந்தார் இசைத்திடுவாய், வில்லுவமே, வில்லுவமே ;*
*வேறுசில பெண்களையான் வேட்டுவிழைந் திடுவேனேல்,*
*வேறுசில ஆடவரை விழைவாய்நீ சேர்ந்திடவே.*

*சரி, நீ போய்விடு; நல்லிரவாகுக. என் கண்கள் தினவெடுக்கின்றன; அது அழுகைக்குறியா?*

எமிலி:—அப்படியுமில்லை, இப்படியுமில்லை.

டெஸ்டி:—அப்படிச்சொல்வதை நான் கேட்டிருக்கிறேன்.—ஓ, இந்தப் புருஷர்கள், இந்தப் புருஷர்கள்!—உன் மனச்சாக்ஷியாக உள்ளதைச் சொல்லடி எமிலியா, தங்கள் கணவர்களை இவ்வளவு கெட்டவிதமாக* அவமானப்படுத்தும் ஸ்திரீகள் இருக்கிறார்களென்று நீ நம்புகிறாயா?

எமிலி:—அப்படிச் சிலபேருண்டு; சந்தேகமில்லை.

டெஸ்டி:—இவ்வுலகெலாங் கிடைப்பினும், நீ அப்படிப்பட்ட காரியம் செய்வாயா?

எமிலி:—ஏன், நீங்கள் மாட்டீர்களோ?

டெஸ்டி:—தெய்வம்போன்ற இந்தத் தீபம் சாக்ஷியாக, நான் மாட்டேன்.

எமிலி:—நானும் தீபசாக்ஷியாகச் செய்யமாட்டேன்; அதை இருட்டிலேயே நன்குசெய்யலாமே.

டெஸ்டி:—உலகெலாங்கிடைப்பினும், நீ அப்படிப்பட்ட காரியம் செய்வாயா?

* இன்னதென்று வெளிப்படையாய்க் கூறாமலே, வியபிசாரத்தைக் குறித்துப் பேசுவது, முன்னிகழ்ந்த வர்த்தமானத்தால் அவர்களிருவர்மனதிலும் அதைப்பற்றிச் சித்தவிருத்தி நடந்துகொண்டிருப்பதைக் கூடார்த்தமாய்க் குறித்த கவிசாதுரியம். பின்னிகழும் சம்பாஷணை, மனத்தூய்மையுள்ள டெஸ்டிமோனாவுக்கும் மனக்களங்கமுள்ள எமிலியாவுக்குமுள்ள குணபேதத்தைத் தெரிக்கின்றது.

எமிலி:—உலகம் மிகப் பெரிய வஸ்து: ஒரு சிறு குற்றத்துக்கு அது பெரிய வெகுமதியே.

டெஸ்டி:—உண்மையாக, நீ செய்யமாட்டாயென்றே எண்ணுகிறேன்.

எமிலி:—உண்மையாகவே, செய்யேனென்றே நானெண்ணுகிறேன்; செய்தபின் அதை மாற்றியும்விடுவேன். ஒரு ஒட்டுமோதிரம், துணிகள், உடுப்புக்கள், இரவிக்கைகள், குல்லாக்கள், வேறெதாவது சில்லறைச் சாமான்கள், இவைகளுக்காக அப்படிப்பட்ட காரியஞ்செய்ய மாட்டேனென்பது மெய்யே; ஆனல் உலகமுழுவதும் கிடைப்பதாயிருப்பின்,—என், எவள்தான் தன் புருஷனைச் சக்கரவர்த்தியாக்கும்பொருட்டு அவனைச் சிறிது ஏமாற்ருள்? மோக்ஷநாசம் நேரிடுவதாயிருப்பினுங்கூட, நான் அதைச் செய்யத்துணிவேன்.

டெஸ்டி:—உலகெலாம் கிடைப்பினும், நான் அப்படிப்பட்ட ஒரு தீங்கு செய்யவேசெய்யேன்.

எமிலி:—என், அந்தத் தீங்கு உலகமதிப்பில் தானே தீங்கு; சிரமபலனுக உலகமே நம்மதாகிவிட்டால், நம்முடைய சொந்த உலகத்தில் தானே தீங்காகின்றது; நாமேயதைச் சீக்கிரம் சரியாக்கிவிடலாமே.

டெஸ்டி:—அப்படி எவளாவதிருக்கிருளென்று நான் நம்பவில்லை.

எமிலி:—ஆம், எத்தனையோபேர்; மேலும், தாங்கள் எந்த உலகத்துக்காக விளையாடினர்களோ, அதையே நிறைத்துவிடும்படி, அத்தனைபேர் வேண்டினும் இருக்கிருர்கள். ஆயினும், ஸ்திரீகள் நடைதவறினல், அது அவர்கள் புருஷர்களுடைய குற்றமென்றே நான் நம்புகிறேன். உதாரணமாக: அவர்கள் தங்கள் கடமைகளில் அஜாக்கிரதையாயிருந்தாலும்; அல்லது, நம்முடைய பொருள்களை அந்நியர் மடியிற்கொண்டு சொரிந்தாலும்; அல்லது, துராங்காரமாய்ச் சமுசயங்கொண்டு நம்மைக் கட்டுப்படுத்தினலும்; அல்லது, ஒருவேளை நம்மை அடித்தாலும்; அல்லது, முன்போற் செலவுக்குப் பணந்தராது, பொருமையால் செட்டுச் செய்தாலும்; என், நமக்கும் உரோஷமிருக்கிறது; நமக்குச் சிறிது கருணையிருப்பினும், பழி

வாங்கும் விருப்பமும் சிறிதுண்டு. தங்கள் மனைவிகளுக்கும் தங்களைப்போலவே இந்திரியவுணர்ச்சி இருக்கிறதென்று புருஷர்கள் அறியக்கடவர்: தங்கள் கணவர்களைப்போலவே, அவர்களும் பார்க்கிறார்கள், முகருகிறார்கள், இனிப்புப் புளிப்பு ருசியறிகிறார்கள். நம்மைவிட்டுப் பிறரை விரும்பிச் செல்வதில், அவர்கள் செய்வதென்ன! அது விளையாட்டா? அப்படித்தானென்றெண்ணுகிறேன்: அது ஆசைபற்றி உண்டாகிறதா? அப்படியே என்றெண்ணுகிறேன்: மனத்தளர்ச்சியினாலிப்படித் தவறிவிடுகிறார்களா? அதுவுங்கூடத்தான்: ஆனால், நமக்கும் ஆசைகள், விளையாட்டு விருப்பம், மனத்தளர்ச்சி எல்லாம் புருஷர்களுக்கு இருப்பதுபோலில்லையோ? பின்னை, நம்மை அவர்கள் நன்றாக நடத்தட்டும்; இல்லாவிடின், நாம் செய்யும் தீங்குகள், அவர்கள் ஒழுக்கத்தினின்றும் கற்றுக்கொள்ளப்பட்டவைகளேயென்று அவர்கள் அறியட்டும்.

டெஸ்டி:—போய்வா, நல்லிரவாகுக: கெட்டதினின்றும் கெட்டதைக் கற்றுக்கொள்ளாமல், கேடு நேர்ந்தால் அதைக் கண்டு நான் சீர்திருத்தமடையும்படியான அநுபவத்தைக், கடவுளெனக்குக் கொடுப்பாராக. [போதல்.]

# ஐந்தாம் அங்கம்.

## முதற்களம்:—ஸைப்ரஸ்; ஒரு வீதி.

(காலம்: நள்ளிரவு.)

[இயாகோவும், ராடரிகோவும் பிரவேசித்தல்.]

இயாகோ:—இதோ, இந்தச் சுமைதாங்கி மறைவில் நில்; அவன் இப்பொழுதே வருவன்: உன் நல்ல கட்டாரியை உருவி வைத்திரு; நன்கு பாயக் குத்து: சீக்கிரம், சீக்கிரம்; ஒன்றுக்கும் அஞ்சாதே; நான் உன் அருகேயே இருக்கிறேன்; இது நம்மையாக்கும், அல்லது அழிக்கும்; அதை நினைத்துக்கொண்டு, உன் மனவுறுதியைப் பலமாய்த் திடப்படுத்திக்கொள்.

ராட:—கைவாய்ப்பில் கிட்ட இரு; நான் அதில் தவறிப் போகலாம்.

இயா:—இதோ, உன் கைப்பக்கமே: தைரியமாய் உன்னிடத்தில் நில்லு.

[சிறிது பின்னிடுகிறான்.]

ராட:—இதைச் செய்வதில் எனக்கு அதிக உற்சாகமில்லை; ஆயினும், அவன் போதுமான காரணங்கள் காட்டியிருக்கிறான். என்ன, ஒரு மனிதன் தானே போகிறான்*:— என் வாளை உருவுகிறேன், அவன் சாகிறான்.

[தன் இடத்திற்போய் நிற்கிறான்.]

இயா:—(தனிமொழி) இந்த இளம்பருவைத்,† தொட்டாற் சுறுக்கென்று சினமுறும்படி, பதப்படுத்தி வைத்திருக்கிறேன். இப்பொழுது, அவன் காஸியோவைக் கொன்றாலும், அல்லது காஸியோ அவனைக் கொன்றாலும், இருவருமே ஒருவராலொருவர் மடிந்தாலும், எவ்விதமாயினும் எனக்கு இலாபமே. ராடரிகோ உயிரோடிருப்பின்,

---

* இயல்பாகவே மனநேர்மையும் உறுதியுமில்லாத ராடரிகோவுக்கு, இயாகோவின் கெட்ட பழக்கத்தால் வந்த தத்துவமிது.

† இது ராடரிகோவைக்குறித்த இகழ்ச்சி மொழி.

டெஸ்டிமோனுவுக்குக் கொடுப்பதற்கென்று எத்தி வாங்கிய பொன்னுக்கும் நகைகளுக்கும், நான் அவனுக்கு உத்தரவாதஞ் செய்யவேண்டும்; அது ஆகாது: காஸியோ ஜீவித்திருப்பின், அவன் தினசரி யொழுக்கத்தின் அழகும் அமைவும், என்னைக் குரூபமாகக் காணச்செய்கின்றன; அதுவுமன்றி, அவனிடத்தில் மோரியன் என்னை வெளிப்படுத்திவிடக்கூடும்; அது பேராபத்துக்கிடமாகும்: இல்லை, அவன் சாகவேவேண்டும்:— அப்படியே; அவன் வருகிற சத்தம் கேட்கிறது.

[காஸியோ பிரவேசித்தல்.]

ராட:— அவன் நடையெனக்குத் தெரியும்; அவன்தான்.— துஷ்டா! நீ செத்தாய்! [தன்னிடத்திருந்து பாய்ந்து, காஸியோவைக் குத்துகிறன்.]

காஸி:— உனக்குத் தெரிந்ததைவிட, என் மேலங்கி* நல்லதாயிருந்திராவிடின், அந்தக்குத்து என் சத்துருவேயாயிருக்கும். உன்னதைச் சோதிக்கிறேன். [கத்தியை உருவி ராடரிகோவைக் காயப்படுத்துகிறன்.]

ராட:— ஓ! நான் செத்தேன்! [இயாகோ, தான் நின்றவிடத்திலிருந்து பாய்ந்து, காஸியோவைக் காலின் பின்புறத்தில் வெட்டிவிட்டுப் போய்விடுகிறன்.]

காஸி:— இனி எக்காலமும் நான் நொண்டியே.— கேள்விமுறையில்லையா? ஐயோ! கொலை! கொலை! [விழுந்துவிடுகிறன்.]

[ஒதெல்லோ தூரத்தில் † பிரவேசித்தல்.]

ஒதெல்:— காஸியோவின் குரலே:— இயாகோ வாக்கை நிறைவேற்றுகிறன்.

ராட:— ஓ! நான் பாதகனே!

---

* மேலங்கிக்குள், எஃகுக்கவசம் தரித்திருந்ததால், ராடரிகோவின் குத்துப் பயன்படவில்லை. இதைச் செவிக்கொண்டே, இயாகோ, காஸியோவைக் காலில் குத்துகிறன். ராடரிகோ கவசம் தரித்திராததால், காஸியோவால் காயப்பட்டுக் கீழே விழுகிறன்.

† லாடவிக்கோவை வழியனுப்பிவிட்டுத் திரும்பிவரும்பொழுது.

ஒதேல் :—அது உண்மைதான்.

காஸி :—ஓ! உதவிக்கொருவருமில்லையா? ஐயோ! ஒரு வெளிச்சம்! ஒரு ரணவைத்தியன்!

ஒதேல் :—அவன்தான் :—ஓ! இயாகோ தீரனே! உண்மையும் நியாயமும் பொருந்தியவனே! உன் சிநேகிதனுற்ற அவமானத்துக்கு இவ்வாறு கிலேசமுறும் மேன்மைக்குணமுடையவனே! உன்னைப்பார்த்து நான் கற்றுக்கொள்கிறேன்,—சிறுக்கி! உன் காதலன் மாண்டுகிடக்கிறான்; உன் பாழான விதியும் நெருங்குகிறது: வேசி! இதோ வருகிறேன்! என் இருதயத்தினின்றும், உன் கண்களாகிய வசியமந்திரங்களைத் துடைத்துவிட்டேன்; பாவச்செய்கையால் மாசுற்ற உன் படுக்கை, பாவச்செய்கையின் இரத்தத்தாலேயே கறைப்படும்: [வெளிப்போதல்.]

[லாடவிக்கோவும், க்ரேஷியானோவும்,
தூரத்திற் பிரவேசித்தல்.]

காஸி :—என்ன, ஐயோ! காவல்கிடையாதா? வழிச்செல்வார் யாருமில்லையா? கொலை! கொலை!

க்ரேஷி :—ஏதோ விபத்து நேர்ந்திருக்கிறது; கூக்குரல் பயங்கரமாயிருக்கின்றது.

காஸி :—ஐயோ, உதவுவாரில்லையா?

லாடவி :—அதோ!

ராட :—ஓ, பாழான பாதகன்!

லாடவி :—இருவரோ, மூவரோ, கூக்குரலிடுகிறார்கள் :—இரவோ, மையிருட்டாயிருக்கின்றது: இவை போலிக்கூச்சல்களாயிருக்கலாம்; இன்னும் வேறுதுணையின்றி, அங்குச் செல்வது சாவதானக்குறைவே.

ராட :—யாரும் வரவில்லையா? ஆனால் இரத்தப்பெருக்கால் நான் செத்தேபோவேன்.

லாடவி :—அதோ!

க்ரேஷி :—இதோ ஒருவன் உள்ளங்கிமட்டுமே தரித்து,* வெளிச்சமும் ஆயுதங்களும் கொண்டுவருகிருன்.

[இயாகோ, ஒரு வெளிச்சத்துடன்
திரும்பிப் பிரவேசித்தல்.]

இயா :—யார் அங்கே? கொலை, கொலையென்று கூக்குரலிடுகிறது யார்?

லாடவி :—எங்களுக்குத் தெரியாது.

இயா :—நீங்கள் ஒரு கூக்குரல் கேட்கவில்லையா?

காஸி :—இங்கே, இங்கே! எனக்குதவுங்கள்: கடவுள் உங்களை ரக்ஷிப்பார்.

இயா :—என்ன சங்கதி?

க்ரேஷி :—இவன் ஒதெல்லோவின் துவஜதாரியென் றெண்ணுகிறேன்.

லாடவி :—அவனேதான்; ஒரு நல்ல தீரன்.

இயா :—இவ்வளவு பரிதாபமாக இங்கே கூக்குரலிடுகிற நீங்கள் யார்?

காஸி :—இயாகோவா? ஓ, நான் நொண்டியாய்விட்டேன், பாதகர்களால் நாசமடைந்திருக்கிறேன்: எனக்குச் சிறிது உதவிசெய்.

இயா :—ஐயோ, உபசேனுபதி! எந்தப் பாதகர்கள் இப்படிச் செய்தார்கள்?

காஸி :—அவர்களிலொருவன், ஓடிப்போகமுடியாமல், இங்குச் சமீபத்திற் கிடக்கிருனென் றெண்ணுகிறேன்.

இயா :—ஐயோ, துரோகிகளே, பாதகர்களே! [லாடவிக்கோவையும் க்ரேஷியானோவையும் நோக்கி] அங்கே இருக்கிறவர்கள் யார்? வாருங்கள், சிறிது சகாயம் செய்யுங்கள்.

ராட :—ஐயோ! இங்கே எனக்குதவுங்கள்!

* இயாகோ, அதற்குள், வீட்டுக்குப்போய், பிறர் சந்தேகியாவண்ணம் மேலாடையைக் களைந்துவிட்டு, படுக்கையிலிருந்து திடீரென்றெழுந்து வருபவன்போல், உள்ளங்கிமட்டுமே தரித்து வெளிச்சத்துடன் திரும்பிவருகிருன்.

காஸி :—அவர்களில் ஒருத்தன் அதோ கூப்பிடுகிறவன்.

இயா :—அடா, கொலைகாரச் சண்டாளா! அட, காதகா!

[ராடரிகோவைக் குத்துகிறான்.]

ராட :—அட, பாதக இயாகோ! ஈவிரக்கமில்லாத நாயே!

இயா :—இருட்டில் கொலைசெய்கிறதா! இந்தக் கொடிய திருடர்கள் எங்கேயொளித்திருக்கிறார்கள்?—இந்தப் பட்டணம் எவ்வளவு நிச்சப்தமாயிருக்கிறது!—ஓ! கொலை! கொலை!—நீங்கள் யார்? இஷ்டர்களோ, துஷ்டர்களோ?

லாடவி :—எங்களை அறிந்தபின் மதிக்கலாம்.

இயா :—லாடவிக்கோ கனவானா?

லாடவி :—ஐயா, ஆம்.

இயா :—மன்னிக்கவேண்டும். இதோ காஸியோ துஷ்டர்களால் வெட்டுண்டு கிடக்கிறார்.

க்ரேஷி :—காஸியோ!

இயா :—எப்படியிருக்கிறது, அண்ணா?

காஸி :—என் கால் இரண்டு துண்டாகிவிட்டது.

இயா :—ஐயோ, கடவுள் விலக்கட்டும்!—கனவான்களே, இந்த வெளிச்சத்தைப் பிடியுங்கள் :—அதை என் உள்ளங்கியால் கட்டுகிறேன்.

[பியான்கா பிரவேசித்தல்.]

பியான் :—ஓ! என்ன சமாசாரம்? கூக்குரலிட்டது யார்?

இயா :—கூக்குரலிட்டது யார்!

பியான் :—ஐயோ, என் பிரிய காஸியோ! என் இனிய காஸியோ! ஐயோ காஸியோ, காஸியோ, காஸியோ!

இயா :—அடீ, பெயர்போன பட்டி!—காஸியோ, உம்மை இப்படி வெட்டினது இன்னாரென்று யார்மேலாயினும் அநுமானமுண்டா?

காஸி :—இல்லை.

க்ரேஷி :—உம்மை இப்படிக்காண என் மனம் வருந்துகின்றது: நான் உம்மைத் தேடிப்போயிருந்தேன்.

இயா :—ஒரு சரணகோசக்கயிறு * கொடுங்கள் :—இங்கிருந்து இலேசாய் அவரைத் தூக்கிச்செல்ல, ஒரு நாற்காலி வேண்டுமே!

பியான் :—ஐயோ, அவர் மூர்ச்சிக்கிறார்! ஓ, காஸியோ, காஸியோ, காஸியோ!

இயா :—கனவான்களே! இந்தத் தீச்செயலில், இந்தச் சிறுக்கியும் உடந்தையென்று நான் அநுமானப்படுகிறேன். நல்ல காஸியோ, சற்றுப் பொறுத்துக்கொள்ளும்.—வாருங்கள், வாருங்கள்; ஒரு வெளிச்சங்கொடுங்கள்.—இது, நாம் அறிமுகமா இல்லையா? ஐயோ! என் நண்பனும் என் பிரியமுள்ள உடனாட்டானுமாகிய ராடரிகோவா? இல்லை :—ஆம், நிச்சயந்தான்; ஐயோ தெய்வமே! ராடரிகோ.

க்ரேஷி :—என்ன! வெநிஸ்நகரத்தவனா?

இயா :—அவனே, ஐயா; தங்களுக்கு அவனைத் தெரியுமோ?

க்ரேஷி :—தெரியுமோவா! ஆம்.

இயா :—க்ரேஷியானோ கனவானா? தயைசெய்து மன்னியுங்கள். தங்களைக் கவனியாது நானிவ்வாறு நடந்ததற்கு, இந்தக் கொடிய விபத்துக்களே காரணம்.

க்ரேஷி :—உம்மைக் கண்டேனே, சந்தோஷம்.

இயா :—உமக்கெப்படியிருக்கிறது, காஸியோ? ஒரு நாற்காலி! ஒரு நாற்காலி கொண்டுவாருங்கள்.

க்ரேஷி :—ராடரிகோ!

இயா :—அவன், அவனே, அவன்தான்.—ஓ, அது நன்றாயிற்று. நாற்காலி;—[ஒரு நாற்காலி கொண்டுவரப்படுகிறது.] யாராவது ஒருவர் இங்கிருந்து சாவதானமாக அவரைத் தூக்கிச்செல்லுங்கள்; நான் போய், சேனாபதியின் ரணவைத்தியரை அழைத்துவருகிறேன்.—[பியான்காவை நோக்கி] ஏனடி! நீ ஒன்றும் சிரமப்படவேண்டாம்.—இதோ மடிந்துகிடக்கும் காஸியோ, என் உரிமையான நண்பர்: உனக்கும் அவருக்கும் என்ன பகை?

* நாலுறையாகிய 'மேல் சோடு' என்னும் உடை, தளர்ந்து சரியாமல் கட்டிவைக்கும் 'நாடா'—தன் உள்ளங்கியால் காஸியோவின் காலைக்கட்டி, அந்தக் கட்டு நெகிழாதிருக்குமாறு, இந்தக் கயிறு ஒன்றால் கட்டுகிறான்

காஸி :—ஒன்றுமேயில்லே ; செய்தவனின்னுனென்றும் எனக்குத் தெரியாது.

இயா :—[பியான்காவை நோக்கி] என்ன ! முகம் வெளுத்தாபோயிற்று ? ஓ, அவரை வெளியே காற்றில் தூக்கிச்செல்லுங்கள்.—[காஸியோவையும், ராடரிகோவையும், வெளியே தூக்கிச் செல்லுகிறார்கள்.] சற்று நில்லுங்கள், நல்ல கனவான்களே.—அம்மாளு, முகம் வெளிறியாபோயிற்றுனக்கு ?—அவள் கண்கள் வெளிறியிருப்பது தெரிகின்றதா ?—இல்லே, வெறித்துப்பார்த்தால், எல்லாம் சீக்கிரம் வெளியாகிவிடும்.—அவளை நன்கு கவனியுங்கள் ; தயைசெய்து அவளை உற்றுப் பாருங்கள் : கனவான்களே, உங்களுக்குத் தெரிகின்றதா ? இல்லே, ஊமையாயிருப்பினுங்கூடக் குற்றந்தான் வெளியாகிவிடுமே.*

[எமிலியா பிரவேசித்தல்.]

எமிலி :—ஐயா ! என்ன விசேஷம் ? என்ன விசேஷம், நாதரே ?

இயா :—இங்கே இருட்டில், ராடரிகோவாலும், தப்பியோடிவிட்ட சில பயல்களாலும், காஸியோ தாக்கப்பட்டு, அவர் சாந்தருணத்திலிருக்கிருர் ! ராடரிகோ செத்தே போனுன்.

எமிலி :—ஐயோ ! நல்ல கனவான் ; ஐயோ ! நல்ல காஸியோவே!

இயா :—எமிலியா, நீ போய்க் காஸியோ இன்றிரவு எங்கே சாப்பிட்டாரென்று கேட்டுத் தெரிந்து வா. என்ன ! அதற்கு நீயேன் நடுங்குகிருய் ?

பியான் :—என் வீட்டில்தான் அவர் சாப்பிட்ட ஆனுல், அதற்காக நான் நடுங்கவில்லே.

இயா :—ஓகோ ! அப்படியா ? வா, என்கூட நீ.

எமிலி :—சீ, சீ, வெட்கமில்லேயே, பட்டி !

---

* "பட்டப்பகலிற் பத்திரகாளி பட்டபாட்டிற்கு, அர்த்த இராத்திரியில் ஓச்சத்தி எம்மாத்திரம் ?" என்று ஒரு வசனமுண்டு. ஆகவே, இயாகோவின்முன், பியான்காவோ நிலக்கவல்லவள் ? முதலில் இருமுறை அவள்மேல் அநுமானத்தைத் திருப்பமுயன்றுழி, மூர்ச்சித்தவனுகவெண்ணியிருந்த காஸியோ வலிந்து மறுத்தாளுக, இப்பொழுது அவனையனுப்பிவிட்டு, அவளைக் குற்றஞ்சாட்டுகிருன்.

**பியான் :**—நான் பட்டியில்லை ; இப்படி என்னைத் திட்டுகிற உன்னைப்போலவே, யோக்கியமாய் வாழ்பவள்தான்.

**எமிலி :**—என்போலவா ? சீ ! வெட்கமில்லையே உனக்கு !

**இயா :**—பக்ஷமுள்ள கனவான்களே, நாம் போய், துர்பாக்கியரான காஸியோவின் காயங்களைக் கட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வோம்.—அம்மாளு, வா ; இதெல்லாம் விட்டுவிட்டு, நீ நடந்தபடி வேறு கதை சொல்லவேண்டும்.—எமிலியா, நீ அரண்மனைக்கு ஓடிப் போய் நம் பிரபுவுக்கும் பிரபுத்திக்கும், நடந்த சம்பவங்களைத் தெரிவி.—தயைசெய்து நடவுங்கள். [தனக்குள்ளேயே] என்னை ஆக்குவதும், அல்லது முற்றும் அழித்துவிடுவதும் இவ்விரவே.

[போதல்.]

## இரண்டாங்களம் :—அரண்மனையில் ஒரு படுக்கையறை.

(**காலம் :** நள்ளிரவு.)

[டெஸ்டிமோனு படுக்கையில் தூங்குதல் ; ஒரு தீபம் எரிந்துகொண்டிருக்கிறது.]

[ஒதெல்லோ பிரவேசித்தல்.]

**ஒதெல்லோ :**—அதுதான் காரணம், என் நெஞ்சமே, அதுதான் காரணம்,—தூய நக்ஷத்திரங்காள் ! அதையுங்களிடத்தில் வெளியிடேன் ;—அதுதான் காரணம்.*—ஆயினும், அவள் உதிரத்தைச்சிந்தேன் ; பனியினு தூயவெண்மையாயும், கல்லறைமேற் பரவும் வெண்கல்லைப்போல் 'மழுமழுப்பாயும்' உள்ள அவள் மேனியை வடுப்படுத்தவும் செய்யேன். ஆனால், அவள் சாகவேவேண்டும் ; இல்லாவிடின், இன்னும் பல புருஷர்களை மயக்கி மோசஞ்செய்துவிடுவாள். தீபத்தை அவித்துவிட்டுப், பின்பு,—தீபத்தை அவித்துவிடுகிறது ! ஒளியைக்கொ

* தான் செய்யப்புகும் கொலை, நியாயமானதேயென்று, தன் மனச்சாக்ஷியைத் திருப்திசெய்துகொள்ளக்கூறிடும் கூற்று. 'அது' என்றது டெஸ்டிமோனுவின் (தான் நம்பியபடியுள்ள) பதிவிரதாபங்கத்தை ; நக்ஷத்திரங்கள் பரிசுத்தமானவையாதலின், அவைகளறிய, வாய்விட்டு வெளிப்படையாக அதைக் கூறேன் என்றான்.

டுக்கும் தீபமே, உன்னை யான் அவித்தபின்பு, என் மனம் வருந்தினுல், உன் முந்திய ஒளியைத்திரும்பவும் யான் பொருத்தக்கூடும்:—ஆனுல், ஏ சிறந்த சிருஷ்டிப்பொருள்களின் சிரோமணி போன்றவளே! உன் (உயிர்) ஒளியை ஒருகால் அவித்துவிடின், அவ்வொளியைத் திரும்பவும் பொருத்தவல்ல தேவாக்நி எங்குளதோ அறியேனே. உன் 'ரோஜா' மலரைப் பறித்தபின்பு, அதற்கு மறுபடியும் ஜீவசக்தியைக் கொடுத்து வளரச்செய்ய, என்னுல் முடியாதே; அது வாடி உலர்ந்தே தீரும்:—மரத்திலேயே அதை மோந்துகொள்வேன்.—[அவளை முத்தமிட்டுக்கொண்டு] ஆ, பரிமளமான சுவாசமே! உன் இனிமை, தர்ம சக்கரத்தையே தடுமாறச்செய்கின்றது!*—இன்னும் ஒரு முத்தம்,—இன்னும் ஒரு முத்தம்;—இறந்த பின்னும் இவ்வண்ணமேயிரு, நான் உன்னைக் கொன்றுவிட்டுப், பின்பு உன்மேற் காதலாயிருப்பேன்:—இன்னும் ஒரு முத்தம், இதுவே கடைசி: இவ்வளவு இனியது, இவ்வளவு பிராணுபாயமாக இருந்ததேயில்லை. நான் அழுகிறேன், ஆனுல் இந்தக் கண்ணீர் குரூரமானதே; இந்தச்சோகம் தெய்வத்தன்மையது: அன்பிருக்குமிடத்திலேயே அழிவையுண்டாக்குகின்றது.—அவள் விழிக்கிருள்.

டெஸ்டி:—யாரங்கே? ஒதெல்லோவா?

ஒதேல்:—ஆம், டெஸ்டிமோனு.

டெஸ்டி:—பிராணநாதரே! படுக்கவருகிறீர்களா?

ஒதேல்:—இன்றிரவு கடவுளைப் பிரார்த்தித்தாய்விட்டதோ டெஸ்டிமோனு?

டெஸ்டி:—ஆம், பிராணநாதரே.

ஒதேல்:—கடவுளுக்கு அறிக்கையிட்டு, அவர் கிருபையையும் மன்னிப்பையும் வேண்டிக்கொள்ளப்படாதகுற்றம் யாதாயினும் நினைவுக்குவரின், உடனே அதன்பொருட்டுப் பிரார்த்தனைசெய்துகொள்.

டெஸ்டி:—ஐயோ, நாதரே, ஏன் அப்படிச்சொல்லுகிறீர்கள்?

ஒதேல்:—சரி, செய், சீக்கிரமாகட்டும்; நான் சற்று விலகி உலாவிக்கொண்டிருக்கிறேன்: மரணத்துக்கு ஆயத்தமாகவில்லாத

---

* தர்ம நியாயப்படி, குற்றத்துக்கு விதிக்கப்பட்ட தண்டனையை, நிறைவேற்ருதபடி மனத்தைக் கவர்கின்றது.

பொழுது, உன் ஜீவனைக் கொல்ல எனக்கிஷ்டமில்லை; இல்லை, கடவுள் விலக்கட்டும்! உன் ஆத்மாவைக் கொல்லேன்.*

டெஸ்டி:—கொல்லுதலைப்பற்றியோ பேசுகிறீர்கள்?

ஒதேல்:—ஆம், அப்படியேதான்.

டெஸ்டி:—ஆனால், கடவுளெனக்கிரங்குவாராக!

ஒதேல்:—மனப்பூர்வமாய் அப்படியே ஆகப் பிரார்த்திக்கிறேன்!

டெஸ்டி:—தாங்களும் அப்படிச்சொன்னால், என்னைக் கொல்

ஒதேல்:—இம்!

டெஸ்டி:—ஆயினும் தங்களைக்கண்டஞ்சுகிறேன்; ஏனெனின், தங்கள் கண்கள் இவ்வாறு சுழலுகையில், தங்கள் கோபம் பிராணபாயமானது; நான் மனமறிய ஒருகுற்றமும் செய்யாததால், நான் ஏன் பயப்படவேண்டுமென்பது தெரியவில்லை; ஆயினும் என் மனத்தில் பயமுண்டாயிருப்பதை உணருகிறேன்.

ஒதேல்:—உன் பாவங்களை நினைந்துகொள்.

டெஸ்டி:—தங்கள் மேலெனக்குள்ள ஆசைகளே அவை.

ஒதேல்:—ஆம், அவைகளுக்காகத்தான் நீ சாகிறாய்.

டெஸ்டி:—காதல் கொண்டதற்காகக் கொலைசெய்வது சுபாவ விரோதமே.—ஐயோ! தங்கள் கீழுதட்டை யேன் அவ்வாறு அதுக்குகிறீர்கள்? ஏதோ ஒரு கொடிய வெறி, தங்கள் சரீரத்தையே நடுக்குகின்றதே: இவையெல்லாம் துர்நிமித்தங்களே; ஆனால் எனக்கு விரோதமாக ஒன்றுமில்லையென்று, நான் நம்பிக்கொண்டிருக்கிறேன்.

ஒதேல்:—பேசாதே; சும்மாவிரு!

டெஸ்டி:—ஆகட்டும்; விசேஷமென்ன?

* நம்மவருக்குள், அந்தியகாலத்திற் பிராயச்சித்தஞ் செய்துகொள்வது போல, கிறிஸ்தவருக்குள், அந்தியகாலத்தில் பாவங்களை ஒப்புக்கொண்டு, குருமுகமாகப் பாவவிமோசனம் பெறுவது வழக்கம்; அவ்வாறு ஒப்புக்கொண்டு, தேவனது திருமன்னிப்பைப் பெறாவிடின், ஆத்மாவும் அழிவுற்று, நரகத்திற் புகுமென்ற கொள்கையைப்பற்றிக் கூறியகூற்றிது.

ஒதேல் :—நான் அவ்வளவு பிரியமாய் வைத்திருந்து உனக்குக் கொடுத்த அந்தக் கைக்குட்டையை, நீ காஸியோவுக்குக் கொடுத்தாயே.

டேஸ்டி :—என் ஜீவன்மேலும் ஆத்மாமேலும் சத்தியமாய்ச்சொல்லுகிறேன், நான் கொடுக்கவேயில்லை ; அந்த மனுஷனை அழைப்பித்துக்கேளுங்கள்.

ஒதேல் :—பிரியசகி! பத்திரம், பத்திரம், பொய்ச்சத்தியத்துக்குள்ளாகாதே ; நீ உன் மரணக்கிடையில் கிடக்கின்றாய்.

டேஸ்டி :—ஆனால் இப்பொழுதே சாகப்போகிறதில்லையே.

ஒதேல் :—ஆம், தக்ஷணமே : ஆகையால், உன் பாவத்தைப் பூரணமாக ஒப்புக்கொள் ; ஏனெனின், ஒவ்வொரு சங்கதியையும் நீ ஒவ்வொரு பிரமாணஞ்செய்து மறுத்தாலும், என் மனத்திற் குடிகொண்டு கொந்தளிக்கும் பலத்த சமுசயம், மாறவும்செய்யாது, அடங்கவும் செய்யாது. உன்னைக் கொல்லப்போகிறேன்.

டேஸ்டி :—ஆனால் கடவுள் என்மேற் கருணைவைப்பாராக.

ஒதேல் :—நானும் அப்படியே பிரார்த்திக்கிறேன்.

டேஸ்டி ;—ஆனால் தங்களுக்கும் இரக்கமிருக்கிறதா !—நானொருபொழுதும் தங்களுக்குத் தீங்கிழைத்ததில்லையே : தெய்வ சம்மதமாகப் பொதுவாய் ஒருவர் மேற்கொள்ளத்தக்க பக்ஷத்தைத் தவிரக், காஸியோவை ஒருபொழுதும் இச்சித்ததில்லையே ; எப்பொழுதும் ஒரு அடையாளமும் அவருக்கு நான் கொடுத்ததில்லையே.

ஒதேல் :—கடவுளாணை, என் கைக்குட்டையை அவன் கையில் நானே பார்த்தேன் : ஏ கள்ளச் சத்தியஞ்செய்யும் ஸ்திரீயே! நீ என் மனத்தைக் கல்லாக்குகிறாய் : உன்னை நியாயத்துக்குப் பலியூட்டுவதாக எண்ணியிருந்தேன் : ஆனாலிப்பொழுதோ, என் கோபத்தைக் கிளப்பி, அவ்வாவேசத்தில் உன்னைக் கொல்லும்படியாகவும், ஆதலின் என் செயல் கொலையாகும்படிக்கும், நீ செய்கிறாய் : நான்தான் கைக்குட்டையைக் கண்டேனே.

டேஸ்டி :—ஆனால் அவர் அதை எங்காவது கண்டெடுத்திருக்க வேண்டும் ; நான் அதை அவருக்குக் கொடுக்கவேயில்லை :—இங்கு அவரை வரவழையுங்கள் ; அவர் உண்மையை ஒப்புக்கொள்ளட்டும்.

ஒதேல்:—அவன் ஒப்புக்கொண்டாயிற்று.

டெஸ்டி:—நாதரே, என்ன?

ஒதேல்:—அவன் உன்னால் பலனடைந்ததாக.

டெஸ்டி:—எப்படி? கிரமம் தப்பியா?

ஒதேல்:—ஆம்.

டெஸ்டி:—அவர் அப்படிச்சொல்லமாட்டார்.

ஒதேல்:—ஆம், அவன் வாய் அடைபட்டுப்போயிற்று; நாணயமான இயாகோ அதற்குத்தக்க ஏற்பாடுசெய்துவிட்டான்.

டெஸ்டி:—ஐயோ! என் மனம் அஞ்சுகிறது, அவர் இறந்துபோனாரா, என்ன?

ஒதேல்:—அவன் உரோமங்களெல்லாம் அத்தனை உயிர்நிலைகளாயிருந்தாலும், பழிவாங்கவெழும் என் பெரும்பசிக்குப்போதா.

டெஸ்டி:—அந்தோ! அவரும் மோசவலைக்குள்ளானார், நானும் கெட்டேன்!

ஒதேல்:—சீ, பட்டி! என் முகத்துமுன்பே அவனுக்கு அழுகிறாயா?

டெஸ்டி:—நாதரே! என்னை ஊரைவிட்டேனும் துரத்திவிடுங்கள்; கொல்லமட்டும் வேண்டாம்!

ஒதேல்:—கிட கீழே, பட்டி!

டெஸ்டி:—நாளைக் கொல்லுங்கள்; இன்றிரவுமட்டும் நான் உயிரோடிருக்கட்டும்!

ஒதேல்:—இல்லை, நீ திருகினால்,—

டெஸ்டி:—ஒரு அரைமணி நேரம்மட்டும்!

ஒதேல்:—தொடங்கியபின் நிறுத்துவதில்லை.

டெஸ்டி:—ஒரே ஒரு தேவபிரார்த்தனைமட்டுஞ் சொல்லிக்கொள்ளுகிறேன்!

ஒதேல்:—இனிமேல் முடியாது.

[அவள் மூச்சை இறுக்குகிறான்.]

எமிலியா:—[உட்புறமாக] ப்ரபோ! ப்ரபோ! என்ன, ஓ, ப்ரபோ!

ஓதேல்:—இதென்ன சப்தம்?—இன்னும் உயிரிருக்கிறதா? இன்னும் உயிர் முற்றிலும் போகவில்லையா? குரூரமாயுள்ள எனக்கும், இன்னும் இரக்கமிருக்கிறது; நீ குற்றுயிரோடு துடித்துக்கொண்டிருக்கச் சகியேன்:—இப்படி, இப்படி.

எமிலி:—[உட்புறமாக] என்ன, ஓ! ப்ரபோ! ப்ரபோ!

ஓதேல்:—யாரங்கே?

எமிலி:—[உட்புறமாக] ஓ, நற்குண ப்ரபோ! தங்களுடன் ஒரு வார்த்தை சொல்லவேண்டும்.

ஓதேல்:—ஆம்; அது எமிலியாதான்:—இதோ வருகிறேன்.—இவள் பிராணன் போய்விட்டது.—காஸியோவின் மரணத்தைப்பற்றி அவள் பேச வந்திருக்கலாம்; கூப்பாடு பெரிதாயிருந்தது.—ஹா! இனி அசைவு கிடையாதே? கல்லறையைப்போல் அசைவற்றுவிட்டது.—அவள் உள்ளேவரலாமா? அது நல்லதா?—திரும்பவும் இவள் அசைகிறுளென்றெண்ணுகிறேன்:— இல்லை. — எப்படிச் செய்வது உசிதம்? அவள் உள்ளேவந்தால் அவசியம் என் மனைவியுடன் பேசுவாள்: என் மனைவி! என் மனைவி! மனைவியேது?—எனக்குத்தான் மனைவியில்லையே! ஐயோ! சகிக்கமுடியவில்லையே! ஐயோ! கஷ்டகாலமே! இப்பொழுது சூரிய சந்திரரின் பூரண கிரகணம்போல் இருண்டு தோன்றுகின்றது; இந்த வேற்றுமையாற் பயமுற்ற பூமண்டலமே கண்ணயர்வதுபோல் தோன்றுகின்றது.

எமிலி:—[உட்புறமாக] ப்ரபோ! தங்களுடன் பேச இடந்தரும்படி வேண்டுகிறேன்.

ஒதேல்:—நான் உன்னை மறந்துவிட்டேன்: ஓ! எமிலியா, உள்ளே வா:—மெள்ள,—தக்ஷணமே,—படுக்கைத்திரையை இழுத்து மூடுகிறேன்.—நீ எங்கேயிருக்கிறுய்?

[கதவைத் திறக்கிறுன்.]

சீக்கிரம் உயிர்நீங்கிக் கஷ்டம் நிவர்த்தியாகுமாறு, ஒரு கட்டாரியால் இருமுறை டெஸ்டிமோனுவைக் குத்துகிறதாகக்கொள்ளவும்.

[எமிலியா பிரவேசித்தல்.]

இப்பொழுது என்ன சங்கதியாக வந்தாய் ?

**எமிலி** :—ஓ! நற்குண ப்ரபோ! அதோ கெட்ட கொலை நடந்திருக்கிறது.

**ஒதேல்** :—என்ன, இப்பொழுதா ?

**எமிலி** :—இப்பொழுதே ப்ரபோ.

**ஒதேல்** :—இது சந்திரனது ஒழுக்கப் பிசகே : எப்பொழுதினும் பூமிக்கு அதிசமீபமாக அவன் வந்து, மனிதர்களைப் பைத்தியங்கொள்ளச் செய்கிறான்.*

**எமிலி** —ப்ரபோ ! ராடரிகோ என்ற ஒரு வெனிஸிய வாலிபரைக் காஸியோ கொன்றுவிட்டார்.

**ஒதேல்** :—ராடரிகோ கொலையுண்டானு ! காஸியோவும் கொலையுண்டானு !

**எமிலி** :—இல்லை, காஸியோ சாகவில்லை.

**ஒதேல்** :—காஸியோ சாகவில்லையா ! ஆனால் கொலை இசைவு பிறழ்ந்துவிட்டது ; பழிவாங்கும் இனிப்பும் கசப்பாய்விட்டது.

**டெஸ்டி** :—அந்தோ ! அநியாயமாய், அநியாயமாய்க் கொலையுண்டேனே!

**எமிலி** :—ஐயோ ! அதென்ன சப்தம் ?

**ஒதேல்** :—அதா ! எது ?

**எமிலி** :—ஐயோ, பரிதாபமே !—அது என் துரைச்சி சத்தமன்றோ.—ஐயோ ஒருவருமில்லையா ! ஓ! உதவியொருவருமில்லையா ! அம்மா ! மறுபடியும் பேசுங்கள் ! இனிய டெஸ்டிமோனு ! என் இனிய எஜமானியே ! பேசுங்கள்.

**டெஸ்டி** :—ஒரு குற்றமுமேயன்றி நான் சாகிறேன் !

* தானும் கொலைசெய்திருப்பதால், எல்லாருக்குமே பைத்தியம் பிடித்திருப்பதாகக் கூறுகிறான். சந்திரகிரகண தோஷத்தால் பைத்தியமுண்டாகிறதென்று, மேனுட்டாருள் ஒரு சாதாரண அபிப்பிராயம் ; ஆங்கிலத்தில், பைத்தியத்துக்கு 'சந்திரபாதை' என்று பெயருண்டு

எமிலி :—ஐயோ ! யாரிப்படிச் செய்தது ?

டெஸ்டி :—ஒருவருமில்லை ; நானேதான் ; விடைகொள்கிறேன்: என் பக்ஷமுள்ள நாதருக்கு என்னை ஞாபகமூட்டு : ஓ ! நான் போகிறேன். [மரணமடைகிறள்.]

ஒதேல் :—என்ன, அவளெப்படிக் கொலையடைந்தாள் ?

எமிலி :—ஐயோ ! யாருக்குத் தெரியும் ?

ஒதேல் :—அதைச் செய்தது நானல்லவென்று அவளே சொன்னதை, நீ கேட்டாயே.

எமிலி :—அவள் அப்படித்தான் சொன்னாள் : நான் உண்மையையே கூறல்வேண்டும்.

ஒதேல் :—பொய் கூறி, அவள் எரிகின்ற நரகத்தையடைந்திருக்கிறாள் : நான்தான் அவளைக் கொன்றவன்.

எமிலி :—அம்மட்டுக்கும் அவள் முன்னிலும் சிறந்த உத்தமியே ; நீ முன்னிலும் கொடிய பைசாசமே !

ஒதேல் :—அவள் கெட்டவழியிற் பிரவேசித்தாள்.

எமிலி :—நீயவளைப் பொய்ப்பழிசாட்டுகிறாய்.

ஒதேல் :—அவள் மனம் நீரைப்போல் மாறும் தன்மையதாயிருந்தது.

எமிலி :—அவள் பொய்யளென்று, நெருப்பைப்போன்ற உன் மூர்க்கத்தினாலேயே நீ சொல்கிறாய் : ஓ ! தேவர்களைப்போன்ற சத்திய ஆத்மாவே அவள்.

ஒதேல் :—காஸியோ அவள் காதலைப் பெற்றிருந்தான் ; பொய்யோவென்று உன் புருஷனைக்கேள். நியாயமான காரணங்களின்றி நானிதைச் செய்திருக்கின் எந்தக் கொடிய நரகக்குழியுமே எனக்குப் போதாது. உன் புருஷனுக்குச் சகல விவரமும் தெரியும்.

எமிலி :—என் புருஷரா !

ஒதேல் :—உன் புருஷன்.

எமிலி :—அவள் பதிவிரதாபங்கஞ்செய்தாளென்று சொன்னார் ?

ஒதேல் :—ஆம், காஸியோவுடன் ; இல்லாவிடின், அவள் உண்மையாயிருந்திருந்தால், மாசுவற்ற ஒரே வைடூரியத்தால், கடவுள்

இதைப்போன்ற ஒரு பேருலகைச் செய்துதரினும், அவளை நான் அதற்குப் பதிலாகக் கொடுத்திருக்கமாட்டேன்.

எமிலி :—என் புருஷரா ?

ஒதேல் :—ஆம், அவன்தான் முதலில் எனக்குச் சொன்னான் : அவன் யோக்கியமானவன் : அசங்கியமான செய்கைகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் துர்நாற்றச் சேறுகளையெல்லாம் முற்றிலும் வெறுக்கிறவன்.

எமிலி :—என் புருஷரா !

ஒதேல் :—என்னடி இப்படித் திரும்பத் திரும்பக் கேட்கிறாய் ? உன் புருஷன் என்றுதான் சொல்லுகிறேனே.

எமிலி : ஐயோ ! என் துரைச்சியே ! மெய்க்காதலை வஞ்சனை மோசஞ்செய்துவிட்டதே !—என் புருஷர் அவள் கற்பிழந்ததாகச் சொன்னாரா !

ஒதேல் :—அவன்தான் அடீ : உன் புருஷன் என்றுதான் சொல்லுகிறேனே : வார்த்தை அர்த்தமாகிறதா ? என் சிநேகிதன், உன் புருஷன், யோக்கியன், நல்ல யோக்கியனான இயாகோ.

எமிலி :—அவர் அப்படிச்சொன்னால், அவர் பாழான ஆத்மா, தினம் அரைக்குன்றிமணி எடையாக, நரகத்திற் கிடந்து, அழுகட்டும் ! அவர் மனப்பூர்வமாய்ப் பொய்சொல்லுகிறார் : மகா அசங்கியமான தன் கொண்டவன்மேல், அவள் அதிமோகமான ஆசையாயிருந்தாளே.

ஒதேல் :—ஹா !

எமிலி :—உன்னாலான தீங்கைச்செய் : நீ செய்திருக்கும் இக் கொலை சுவர்க்கத்துக்கு எவ்வளவு இசையுமோ, அவ்வளவே நீயும் அவளுக்கிசைந்தவன்.

ஒதேல் :—பேசாதே, சாவதானம் !

எமிலி :—நீ செய்யக்கூடிய தீங்கைத் தாங்கிச்சகித்துக்கொள்ள எனக்கிருக்கும் அற்பசக்தியில், ஒரு பாதிகூட, அவ்வாறு தீங்கியற்ற உனக்கிப்பொழுதில்லை. ஓ மூடமே ! ஒன்றுமே தெரியாத ஜடமே ! நீ செய்திருக்கும் செய்கை—உன் வாளுக்கு நான் அஞ்சவில்லை.—இருபது ஜீவன்களையிழக்கவேண்டி நேர்ந்தாலும், உன்னை நான் வெளிப்ப

த்துவேன்.—கூவே கூ! கேள்விமுறையில்லையா! மோரியன் என் எஜமானியைக் கொன்றுவிட்டான்! கொலையோ கொலை!

[மண்டானோவும், க்ரேஷியானோவும், இயாகோவும் பிரவேசித்தல்.]

**மண்டா**:—என்ன விசேஷம்? என்ன சங்கதி, சேனாபதி.

**எமிலி**:—ஓ, நீர் வந்தீரா, இயாகோ? மனிதர்கள் தாங்கள் செய்யும் கொலைகளை உம் தலையில் சுமத்தும்படி, நல்ல காரியஞ் செய்தீர்.

**க்ரேஷி**:—சங்கதியென்ன?

**எமிலி**:—நீர் ஒரு மனுஷனானால், இந்தப் பாதகன் சொல்லுவது பொய்யென்று ருஜுப்படுத்தும்: அவன் மனைவி கற்பிழந்தவளென்று நீரவனுக்குச் சொன்னதாக, அவன் சொல்கிறான்: நீர் சொல்லவில்லையென்று எனக்குத் தெரியும்; நீரவ்வித அயோக்கியரல்ல: வாயைத் திறந்து பேசும், என் மனம் அடங்காது பொங்குகின்றது.

**இயா**:—நான் நம்பியதை அவருக்குச் சொன்னேன்; அவரும் அதன் உண்மையையும் பொருத்தத்தையும் நேரிற்கண்டார்.

**எமிலி**:—ஆனால் அவள் கற்புத்தவறினாளென்று எப்பொழுதாயினும் நீர் சொன்னதுண்டா?

**இயா**:—சொன்னேன்.

**எமிலி**:—நீரொரு பொய் கூறினீர்; ஒரு வெறுக்கத்தக்க பாழான பொய்; என் ஆத்ம சாக்ஷியாக, அது பொய்யே; ஒரு கெட்ட பொய்;- அவள் காஸியோவுடன் ஒழுக்கந்தவறி நடந்தாளா!—காஸியோவோடென்று நீர் சொன்னதுண்டா?

**இயா**:—காஸியோவோடுதான், அடீ. போதும், உன் நாவை அடக்கு.

**எமிலி**:—நான் என் நாவை அடக்கமாட்டேன்; நான் பேசவே வேண்டும்; என் எஜமானி, இதோ, அவள் படுக்கையில் கொலையுண்டு கிடக்கிறாள்.

**எல்லோரும்**:—ஐயோ! தெய்வங்கள் தடுக்கட்டும்!

**எமிலி**:—நீர் சொன்னவைகளே இந்தக் கொலையைத் தூண்டியிருக்கின்றன.

ஓதேல் :—இல்லை, திகைக்கவேண்டாம், கனவான்களே : அது உண்மைதான்.

க்ரேஷி :—அது கொடிய உண்மையே.

மண்டா :—ஐயோ, அதி கொடும்பாவமே!

எமிலி :—வஞ்சனை, வஞ்சனை, வஞ்சனை!—இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது ; ஐயோ! கொடுந்துரோகம்! அப்பொழுதே நான் அப்படியிருக்கலாமென்று* நினைத்தேன் :—துக்கத்தால் நான் பிராணனை விட்டுவிடுகிறேன் :—ஐயோ, மோசம்போனதே! மோசம் போனதே!

இயா :—என்ன ? உனக்குப் பைத்தியமா ? போ, உடனே வீட்டுக்கு.

எமிலி :—நற்குண கனவான்களே! நான் பேச விடைகொடுங்கள் : நான் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியது கிரமமே ; ஆனால் இப்பொழுதல்ல.—இயாகோ, ஒருவேளை நான் வீட்டுக்குத் திரும்பவேமாட்டேன்.

ஓதேல் :—ஐயோ! ஐயோ! ஐயோ!

[படுக்கைமேல் விழுகிறான்.]

எமிலி :—ஆம், கீழேவிழுந்து கதறு ; அதிமனோரம்மியமான மஹாசீலியாகிய உத்தம பிராணியைக் கொன்றுவிட்டாயே.

ஓதேல் :—[எழுந்து] ஓ, அவள் கெட்டவளே!—அம்மான்! நான் தங்களைக் கவனிக்கவில்லை : சற்று முன்பு இக்கைகளால் கொலையுண்ட தங்கள் மருமகள், அதோ கிடக்கிறாள் : இச்செய்கை பயங்கரமாகவும் கொடியதாகவும் தோன்றுவது எனக்குத் தெரியும்.

க்ரேஷி :—ஐயோ டெஸ்டிமோனா! உன் தந்தை இறந்ததற்குச் சந்தோஷமே படுகிறேன் : உன் விவாகமே அவர் மரணத்துக்கு ஏதுவாகி, மனத்துயரமே அவர் பழைய விதியோலையைக் கிழித்துவிட்டது ; அவரிப்பொழுது ஜீவந்தராயிருப்பின், இந்தக் காட்சி அவருக்குக் கடுங்கோபத்தை யுண்டாக்கித், தெய்வத்தையே பழித்து வெறுத்துத் தள்ளி நரகத்தில் விழும்படி செய்திருக்கும்.

---

* யாராவது மோரியனிடம்போய்க் கோள்கூறியிருப்பார்களென்று தான் முன்பு அநுமானப்பட்டதைக்குறித்து.

ஒதேல்:—இது பரிதாபமே; ஆயினும், அவள் காஸியோவுடன் மானக்கேடான செய்கையை ஆயிரந்தரம்* செய்தது இயாகோவுக்குத் தெரியும்; காஸியோ அதை ஒப்புக்கொண்டான்: நான் முதலில் அவளுக்களித்த காதல் முத்திரையை, அவன் மதனலீலைகளுக்குப் பிரதியாக அவள் அவனுக்குக் கொடுத்தாள்; அதை நான் அவன் கையில் பார்த்தேன்: அது ஒரு கைக்குட்டை; ஒரு பண்டைநாளை அடையாள வஸ்து: என் தந்தை என் தாய்க்குக்† கொடுத்தது.

எமிலி:—ஓ, தெய்வமே! ஐயோ! தெய்வங்களே!

இயா:—நிறுத்து, சும்மாவிரு.

எமிலி:—அது வெளியாகிவிடும், வெளியாகிவிடும்:—நான் சும்மாவிருக்கிறதா, ஐயா? மாட்டேன்; காற்றைப்போல் தட்டுத்தடையின்றிப் பேசுவேன்: தேவர்களும், மனிதர்களும், பிசாசுகளும், எல்லோரும், எல்லோரும், அவர்கள் எல்லோருமே நான் செய்வது மானக்கேடென்று கூவினும், நான் பேசவே செய்வேன்.

இயா:—புத்தியைக் கைவிட்டுவிடாதே; வீட்டுக்குப்போ.

எமிலி:—நான் மாட்டேன்.

[இயாகோ எமிலியாவைக் குத்தப்போகிறான்.]

க்ரேஷி:—சீ! ஒரு பெண்பிள்ளைமேல் வாளையுருவுகிறதா?

எமிலி:—ஏ! அசட்டுமோரிய! நீ சொல்லுகிற அந்தக் கைக்குட்டையை நான் தற்செயலாய்க் கண்டெடுத்து, என் புருஷன் கையில் கொடுத்தேன்; ஏனெனின், அவ்வளவு அற்பப்பொருளுக்குத் தகாத ஆவலுடனும் கவலையுடனும், அதைத் திருடிக்கொடுக்கும்படி அவன் என்னை அடிக்கடி கெஞ்சிக்கேட்டான்.

இயா:—திருட்டு நீலி!

எமிலி:—அவள் அதைக் காஸியோவுக்குக் கொடுக்கிறதா! ஐயோ! இல்லை! நான் அதைக் கண்டெடுத்து, நான்தான் என் புருஷனுக்குக் கொடுத்தேன்.

---

* நெடுங்காலக்குறி.

† முதலில் டெஸ்டிமோனாவிடம் தன் தாய்க்கு எகிப்து தேயத்து மந்திரவாதி ஒருத்தி கொடுத்ததாக மோரியன் கூறியதோடு இது பொருந்தவில்லை (121-ம் பக்கத்தைப்பார்க்க). சிறு பொய்யும் பெருங்கேட்டை விளைவிப்பதாக இக்கவியோதும் நீதிமுறைமை வியக்கத்தக்கதே.

**இயா**:—அழுகற்கும்பியே! நீ பொய்சொல்லுகிருய்.

**எமிலி**:—கடவுள் சத்தியமாக, நான் பொய் சொல்லவில்லை, நான் பொய் சொல்லவில்லை, கனவான்களே.—ஏ கொலைகார மூடமே! உன் போன்ற ஒரு மௌட்டியனுக்கு அப்பேர்க்கொத்த நற்குண மனைவி வனே!

[இயாகோ எமிலியாவைக் குத்துகிருன்.]

**ஒதேல்**:—இடிகளாய் முழங்குவதைத் தவிர, வானத்தில் (இவன் தலையில் விழ) வேறு கற்களில்லையா? அடா, கைதேர்ந்த பாதகா!

[இயாகோவின்மேற் பாய்கிருன்; மண்டானே வாளைப் பிடுங்கிக் கோள்கிருன்; இயாகோ (எமிலியாவைக் குத்திவிட்டு) வெளியே ஓடிவிடுகிருன்.]

**க்ரேஷி**:—அந்தப் பெண்பிள்ளை கீழே விழுகிருள்; அவன் தன் மனைவியைக் கொன்றேவிட்டான்.

**எமிலி**:—ஆம், ஆம்;—ஓ, என்னை என் எஜமானி பக்கத்தில் டத்துங்கள்.

**க்ரேஷி**:—தன் மனைவியைக் கொன்றுவிட்டு, அவன் ஓடிப் போய்விட்டான்.

**மண்டா**:—அதிபாதகன் அவன். இதோ மோரியரிடம் இருந்து நான் பறித்த இந்த ஆயுதத்தை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்; வாருங் கள்; வெளியிலிருந்து வாயிலைக் காத்துக்கொள்ளுங்கள்; அவரை வெளியேவிடக்கூடாது; அப்படி விடுவதினும் கொன்றுவிடலாம். பாழான அடிமைப்பயலாகிய அந்தப் பாதகனை நான் பின்பற்றுகிறேன்.

[மண்டானேவும் க்ரேஷியானேவும் வெளிப்போதல்.]

**ஒதேல்**:—என் பராக்கிரமமும் போய்விட்டது; எந்த அற்ப ஒல்லியும் என் வாளைப் பிடுங்கலாயிற்று:—ஆனல் யோக்கியதை ஒழிந்தபின்பு ஆண்மைமட்டும் ஏன் இருக்கவேண்டும்? எல்லாமே போகட்டும்.

**எமிலி**:—என் துரைச்சி! உன் பாட்டு எதைக்குறித்தது? என்ன, நான் சொல்வது உனக்குக் கேட்கிறதோ? நான் ஹம்ஸ பக்ஷியைப் போல் பாடிக்கொண்டே சாவேன்:—வில்லுவமே, வில்லுவமே, வில்லு

வமே,—மோரிய! அவள் பதிவிரதையே: ஏ, கொடிய மோரிய! அவள் உன்மேற் காதலாயிருந்தாள்: நான் சொல்வது உண்மையானால் என் ஆத்மா மோக்ஷமடையட்டும்; அப்படியே நானெண்ணுகிறபடி உண்மையைக் கூறிவிட்டு, நான் சாகிறேன்,—நான் சாகிறேன். [மரணமடைகிறாள்.]

ஒதெல்:—இந்த அறையில் வேறொரு ஆயுதமிருக்கிறது; அது ஸ்பானியதேசத்துக் கத்தி; (பழுக்கக்காய்ச்சிப்) பனியோடையில் தோய்த்துப் பதஞ்செய்யப்பட்டது:—ஓ, அது இதோவிருக்கிறது.—அம்மான்! நான் வெளியேவரவேண்டும்.

க்ரேஷி:—[உட்புறமாக] அப்படி எத்தனஞ்செய்தால் பெரும் ஆபத்துண்டாகும்: உம்மிடத்திலோ ஆயுதமில்லை; ஆகவே பட்டதை நுபவிக்கவேண்டியதுதான்.

ஒதெல்:—ஆனால் உள்ளேவந்து என்னுடன் பேசுங்கள்; இல்லாவிடின், நிராயுதனேயாயினும், உங்களைத் தாக்குவேன்.

[க்ரேஷியானோ திரும்பிப் பிரவேசித்தல்.]

க்ரேஷி:—சங்கதி என்ன?

ஒதெல்:—இதோ என் கையிலிருக்கும் ஆயுதத்தைப் பாருங்கள்; இதினும் சிறந்தது ஒரு யுத்தவீரனிடத்திலும் இருந்ததேயில்லை: இந்தச் சிறு புயத்தையும் இந்த நல்ல கத்தியையுமே துணையாகக்கொண்டு, தாங்கள் மறிப்பதினும் இருபதுமடங்கு பலமான தடைகளையுங் கடந்து செல்லக்கூடிய நாளும் இருந்தது:—ஆனால், எல்லாம் வீண்பெருமையே! விதியை வெல்லவல்லவர் யார்? இப்பொழுது அப்படியில்லை.—நான் ஆயுதபாணியாயிருப்பினும் நீங்கள் பயப்படவேண்டாம்; இங்கேயே என் பிரயாண அந்தம்; இங்கேயே என் வாழ்க்கையிலக்கும்; என் வாழ்நாளாகிய மரக்கலம் இதற்குமேலோடாது. பயந்து பின்னிடுகிறீர்களா? அது வீண்பயமே; ஒரு சிறு துரும்பை ஒதெல்லோவின்மேல் வீசினும், அவன் பின்வாங்குபவனே:—ஒதெல்லோ இனி எங்குச் செல்வது? இப்பொழுது, நீ எப்படித் தோன்றுகின்றாய்? ஐயோ, துர் அதிஷ்டமுள்ள பெண்ணே! உன் உள்ளாடை நிறம்போலவே வெளிறிப்போயினையே! நம் செய்கைகளுக்கு உத்தரவாதஞ்சொல்லக், கடவுள் சந்நிதியில் நாம் சந்திக்கும் தருணத்தில்,

இப்பொழுதுள்ள உன் பார்வை, என் ஆத்மாவைச் சுவர்க்கத்தினின் றும் தள்ளாநிற்கப், பைசாசங்கள் அதைப் பிடித்துக்கொள்ளும். குளிர்ந்துவிட்டனையே! என் கண்ணாட்டி! உன் கற்பைப்போலுங் குளிர்ந்துவிட்டனையே! அந்தோ! நரகத்துக்கேதக்க பாதகப் புலையனே நான்! ஏ, பைசாசங்களே! தெய்வீகமான இந்தக் காட்சியை நான் காணாதவண்ணம், என்னைச் சாட்டையாலடியுங்கள்! என்னைக் காற்றிலே அங்குமிங்கும் பறத்துங்கள்! எரியும் கந்தகத்தில் வெதுப்புங்கள்; திரவாக்கினி நிறைந்த ஆழ்ந்த கசங்களில் என்னைக் குளிப்பாட்டுங்கள்! ஓ டெஸ்டிமோனு! டெஸ்டிமோனு! இறந்தனையே! ஐயோ! ஐயோ! ஐயோ!

[லாடவிக்கோவும், மண்டானோவும், ஒரு நாற்காலியில் வைத்துத் தூக்கப்பட்டுக் காஸியோவும், இயாகோவைக் கைதியாகக்கொண்டு உத்தியோகஸ்தர்களும், பிரவேசித்தல்.]

லாடவி:—இந்த மஹா துர்ப்பாக்கியனான அவசரக்காரன் எங்கேயிருக்கிறான்?

ஒதேல்:—அது ஒதெல்லோவாயிருந்தவன்:—நான் இதோ இருக்கிறேன்,

லாடவி:—அந்த விஷப்பாம்பெங்கே? அந்தப் பாதகனை முன்னாற் கொண்டுவாருங்கள்.

ஒதேல்:—நான் அவன் பாதங்களை நோக்குகிறேன்,*—ஆனால் அது கட்டுக்கதையே.—நீயொரு பிசாசானால் என்னாலுன்னைக் கொல்ல முடியாது.

[இயாகோவைக் காயப்படுத்துகிறான்.]

லாடவி:—அவரிடமிருந்து கத்தியைப் பிடுங்குங்கள்.

இயா:—ஐயா, இரத்தம் பெருகுகிறது; ஆனால் மரணகாயமில்லை.

---

* பைசாசத்தின் பாதங்கள், ஆடுமாடுகளின் குளம்புகளைப்போல், இருபிளவாயிருக்குமென்ற கொள்கையைக்குறித்து.

ஒதேல் :—எனக்கதில் மனவருத்தமில்லை ; நீ உயிரோடிருப்பதே என் விருப்பம் ; ஏனெனில், என் அபிப்பிராயப்படி, இறப்பது ஆநந்தமே.

லாடவி :—ஒரு காலத்தில் எவ்வளவோ உத்தமசீலனாயிருந்து இப்பொழுது ஒரு பாழான பாவியின் மோசவலையில் சிக்கியுள்ள, ஏ, ஒதெல்லோ ! உன்னிடம் என் சொல்வது ?

ஒதேல் :—என், யாதேனும் சொல்லலாம் : வேண்டுமாயின் ஒரு மானமுள்ள கொலைகாரனென்று கூறலாம் ; ஏனெனின், நான் செய்ததெல்லாம் மானத்தின்பொருட்டேயன்றிப் பகைமையினாலன்று.

லாடவி :—இந்தச் சண்டாளன் தன் சர்ப்பனையில் ஒரு பகுதியை ஒப்புக்கொண்டிருக்கிறான் : நீரும் அவனுமாகக் காஸியோவைக் கொல்ல உத்தேசித்தீர்களா ?

ஒதேல் :—ஆம்.

காஸி :—பிரிய சேனாபதி ! இதையேற்க நான் ஒன்றுஞ் செய்ததில்லையே.

ஒதேல் :—நீ சொல்வதை நான் நம்பவே செய்கிறேன், உன் மன்னிப்பையும் வேண்டுகிறேன்.—என் ஆத்மாவையும் சரீரத்தையும் ஒருங்கு, ஏன், இவ்வாறு மோசவலைக்குள்ளாக்கினானென்று, அந்த மனுஷப் பிசாசைக் கேளுங்கள்.

இயா :—என்னையொன்றும் கேட்கவேண்டாம் ; உங்களுக்குத் தெரிந்தமட்டுமே நீங்கள் தெரியக்கூடியதும் : இதுமுதல் நான் வாய் திறந்து பேசேன்.

லாடவி :—என்ன ! கடவுளைப் பிரார்த்திக்கக்கூடவா ?

க்ரேஷி :—சித்திரவதைசெய்தால் உன் வாய் திறந்துவிடும்.

ஒதேல் :—சரிதான் ; நீ செய்வதே உத்தமம்.

லாடவி :—ஐயா ! நடந்த சங்கதிகள் உமக்குத் தெரியாதென்றெண்ணுகிறேன் : சொல்லுகிறேன் கேளும். கொலையுண்ட ராடரிகோவின் அங்கிப்பையிலகப்பட்ட ஒரு கடிதம் இதோ இருக்கிறது ; இதோ மற்றொன்றிருக்கிறது : இவற்றில் ஒன்று, காஸியோவை ராடரிகோ கொலைசெய்யவேண்டியதைப்பற்றியது.

ஒதெல் :—அடா, பாதகா!

காஸி :—மஹா மௌட்டியமான கொடும்பாதகனே!

லாடவி :—அன்றியும், இதோ வெகு மனஸ்தாபத்தோடு எழுதப்பட்ட மற்றொரு கடிதமிருக்கிறது; இதுவும் அவன் அங்கிப்பையிலேயே இருந்தெடுக்கப்பட்டது; இதை, ராடரிகோ, இந்தப் பாழான பாவிப் பயலுக்கு அனுப்ப உத்தேசித்திருந்ததாகத் தோற்றுகிறது; இதனிடையில், இயாகோ நேரிற்சென்று, அவன் மனத்தைத் திருப்திசெய்துவிட்டான்போலும்.

ஒதெல் :—ஓ! இந்த நாசகாரப்பாவி! காஸியோ, என் மனைவி கைக்குட்டை உனக்கெப்படிக் கிடைத்தது?

காஸி :—அது என் அறையிற் கிடந்தது: தன் மனக்கோளை நிறைவேற்றற்கேற்ற ஒரு குறிப்பான காரியத்தின்பொருட்டுத், தான் அதையங்கே போட்டுவைத்ததாக, அவனேயிப்பொழுது ஒப்புக்கொண்டான்.

ஒதெல் :—ஓ! (நான்) மடையனே! மடையனே! மடையனே!

காஸி :—அதுவுமன்றி, ராடரிகோ நிருபத்தில், காவற்கூடத்தில் என்னை வரம்புகடந்து நடந்து கலகஞ்செய்யும்படி தன்னைத் தூண்டியதற்காக, இயாகோவை அவன் குற்றங்கூறுவதும் கண்டிருக்கிறது; அதனால்தான் என்னை வேலையினின்றும் நீக்க நேர்ந்தது: வெகுநேரம் செத்தாற்போற்கிடந்து, இப்பொழுது சற்று முன்னரே, இயாகோவே தன்னைக் காயப்படுத்தினதாகவும், இயாகோவே தன்னைத் தூண்டினதாகவும் அவன் சொன்னான்.

லாடவி :—நீர் இந்த அறையை நீங்கி எம்முடன் போகல்வேண்டும்: உம்முடைய அதிகாரமும் சேனாதிபத்தியமும் 'ரத்து' செய்தாய்விட்டது; காஸியோவே ஸைப்ரஸை ஆளுவார். இந்தப் புலையனுக்கோ,—சீக்கிரம் உயிர் போய்விடாது, நெடுங்காலம் கடுமையாய் வாட்டவல்ல தந்திரமான சித்திரவதை ஏதேனும் புத்தி சாதுரியத்தால் செய்யக்கூடுமாயின், அதுவே அவனுக்குரிமை. உம்முடைய குற்றத்தின் தன்மையை வெநிஸ் துரைத்தனத்தாருக்குத் தெரிவிக்கும்வரையும் நீர் கடுங்காவலில் இருக்கவேண்டும். வாருங்கள், அழைத்துவாருங்கள்.

ஒதேல்:—சற்றுப் பொறுங்கள்; நீங்கள் போகுமுன் இரண்டொரு வார்த்தை—துரைத்தனத்தாருக்கு நான் ஏதோ சிறிது சேவகஞ் செய்திருக்கிறேன். அது அவர்களுக்குத் தெரியும்;—அதைப்பற்றி அதிகமாய்ப் பேசவேண்டியதில்லை.—இந்த நிர்ப்பாக்கியமான சம்பவங்களை உங்கள் நிருபங்களில் விவரிக்குங்கால், நான் உள்ளபடியே என்னைப்பற்றிக் கூற, உங்களை வேண்டிக்கொள்கிறேன். ஒன்றையும் மழுக்கவேண்டாம், ஒன்றையும் க்ஷாத்திரத்துடன் வற்புறுத்தவும்வேண்டாம்: அவ்வாறு கூறப்புகின், நிதான அறிவோடின்றி, மட்டுக்குமிஞ்சிய காதல்கொண்டவனாகவும்; எளிதில் சமுசயப்படாதவனேயாயினும், பிறர் சூழ்ச்சித்திறத்தால் (சமுசயங்கொண்டபோது) தீராமனக்குழப்பமுற்றவனாகவும்; தன் சாதியாரனைவரையும் விற்றாலும் ஈடாகா விலைமதிப்புயர்ந்த முத்தொன்று தன்கையிலிருந்ததை, ஒரு மதியீன மிலேச்ச இந்தியனைப்போல,* தூர எறிந்து தொலைத்துவிட்டவனாகவும்; உருகியிளகும் சுபாவம் இல்லாதவனேயாயினும், அராபிய விருக்ஷங்கள் மருந்துப் 'பிசினை' விரைந்துசொரிவதுபோல, துக்கத்தால் நெகிழ்ந்த கண்களால் கண்ணீர்சொரிபவனாகவுமே, என்னைப்பற்றி நீங்கள் பேசல்வேண்டும். இவ்வாறே கூறுங்கள்; அன்றியும், இதையும் சொல்லுங்கள்,—அலப்பியில்† ஒருநாள், துஷ்டனான தலைப்பாகைத் துருக்கனொருவன், வெநிஸ்நகரத்தானொருவனை அடித்து, (வெநிஸ்) துரைத்தனத்தைப்பற்றி அவதூறாகப் பேசியபொழுது, நான், அந்தத் துருக்க நாயைக் கழுத்தைப்பிடித்து, இம்மாதிரியாகக் குத்தினேன்.

[தன்னையே குத்திக்கொள்கிறான்.]

லாடவி:—அந்தோ! ரத்தத்தோடு முடிந்த முடிவே!

க்ரேஷி:—பேசியதெல்லாம் பாழாய்ப்போயிற்றே.

ஒதேல்:—உன்னைக்கொல்லுமுன் முத்தமிட்டேன்:—இதைத்தவிர வேறுவழியில்லை, [டெஸ்டிமோனாவின் மேல்விழுந்து] என்னையும் மாய்த்துக்கொண்டு, ஒரு முத்தத்தோடே மடிகிறேன். [மரணமடைகிறான்.]

---

* ஆபிரிக்கா, அமெரிக்கா கண்டங்களின் பூர்வகுடிகளாகிய நாகரீகமற்ற காட்டுமனிதர்.

† ஓர் ஊர்.

**காஸி** :—அவர் கம்பீரகுணத்தை உத்தேசித்து, இவ்வாறு நேரு மென்றே அஞ்சினேன்; ஆனால் அவரிடம் ஆயுதமொன்றுமில்லையென்று

லாட்வி :—[இயாகோவை நோக்கி] ஏ, மனவேதனையினும், பசியினும், கடலினும், கொரேமான ஸ்பாற்ட* நாயே! இந்தப்படுக்கை மேலுள்ள பிராணச்சேதமான சும்மையைப்பார்; இது உன் வேலையே: பார்ப்பவர் கண்களுக்கு விஷம்போன்ற கண்ணராவியே இது; இதை மூடிமறையுங்கள்.—க்ரேஷியானோ! நீர் வீட்டிலிருந்து, மோரியரின் சொத்துக்களை யெல்லாம் கைக்கொள்ளும்; நீரே பாத்தியஸ்தர்.—பிரபுத்துவ அதிபதி!† எப்பொழுது, எவ்விடத்து, எவ்விதமாக இந்நரக பாதகனைத் தண்டிக்கவேண்டுமென்பது, தங்கள் தீர்ப்புக்குள் அடங்கியது; நன்று நிறைவேற்றுங்கள்! நான் நேராகக் கப்பலேறிச் சென்று, துரைத்தனத்தாருக்கு இத்துயர்மலிந்த செய்தியைத் துக்கமிகுந்த மனத்தோடு தெரிவிக்கிறேன். ✓

[வெளிப்போதல்

---

* "ஸ்பாற்டா" என்பது கிரீஸ்தேசத்தின் மாகாணங்களில் ஒன்று. அந்நாட்டார், வீரத்திற்கும், மனவன்மைக்கும், மௌனமாகவே காரியஞ் சாதிக்கும் திறமைக்கும், இரக்கமின்மைக்கும் பெயர்போனவர்; அவர்களுக்குள்ள துர்க்குணங்கள் அவனிடம் மிகுந்திருத்தல்பற்றி, இயாகோவை 'ஸ்பாற்ட நாய்' என்றான்.

† காஸியோவை நோக்கி.

# குறிப்புரை

கோலெரிட்ஜ், மக்காலே முதலிய மேதாவியர் சிலர், ஷேக்ஸ்பியரையே கவீந்திரராகவும், அவரியற்றிய நாடகங்களுள் 'ஒதெல்லோ' வையே சிரேஷ்டமானதாகவும் மதித்துரைத்தமை கிடக்க, இதுகாறும் பல பாஷைகளினும் இயற்றப்பட்டுள்ள மிகச் சிறந்த இலக்கியங்களுள் இந்நாடகமொன்றென்பது நிச்சயமே. சொல்வன்மையிலும், உலக அநுபவஞான நுட்பத்திலும், இதினும் மேம்பட்டது இலதென்றே கூறலாம். இத்தகைச் சிறப்பினதேனும், இதன்கதை மிக்க மனவருத்தமானதாயும், இடையறாது துக்ககரமானதாயுமிருத்தல், இதற்கொரு பெருங்குறைவே. பொதுவாய்த் துன்பியல் நாடகங்களில், சிறிதும் விடிவு வெளிச்சமின்றி இவ்வாறு ஒரேபாழாகத் துயர்வந்து மூடி அமிழ்த்துதல் நேராது. அன்றியும், விளையுந்துன்பம், முற்றிலும் அநியாயமாகவும் தகாததாகவும் முதற்கண்தோற்றுது; நாடகபாத்திரரது குணகுணங்களுக்கும் வினைகளுக்கும் ஏற்றபலனாகவே நாடகாந்தம் காணப்படும். ஸ்திரீ விஷயத்தில் தக்க ஆராய்ச்சியின்றிக் கொள்ளப்படும் அசூயையின் தீவினையையும், விவாகங்களில் இயற்கைப்பொருத்தமின்மையின் கேட்டையும் நிரூபிக்கும் இந்நாடகத்திலோ, அவ்வாறின்று. உண்மையாகவே இதன் முடிவு நீதியைத்தழுவினதோ, அதனினின்றும் வழுவினதோ என்பதையும்; அதையறியுமாறு முக்கிய பாத்திரங்களின் குணவொழுக்கங்களையும், சிறிதுட்புகுந்து ஆராய்வோம்.

ஒதெல்லோ:—நாடகத் தலைவனாகிய இவன், வெநிஸில் உத்தியோகமாக வந்திருக்கும் ஒரு மோரிய கிறிஸ்தவன். இவனைப் பிறநாட்டானாகக் குறித்திருப்பது ஒரு கருத்துப்பற்றியே: ஒருவனது சுபாவநடையை நன்கறியவேண்டின், சுற்றுமுள்ள பிறரினின்றும் யாதானும் ஒரு முக்கிய விஷயத்தில் அவன் வித்தியாசமாகவிருப்பது மிகச் சௌகரியமே. இக்கவி, தம் நாடக பாத்திரருட் சிறந்தவரையெல்லாம், அரச வம்சத்தினராகவேனும், தனித்து வளர்ந்தவராகவேனும், யாதானுமோர் விசேஷ உள்ளநிகழ்ச்சி வயப்பட்டவராகவேனும் சுட்டி, மற்

---

Mainly from the Rev. Dr. Miller's lectures.

றவரினின்றும் பிரித்துவிடும் வழக்கம், இதன்பொருட்டே. ஜனாகர மான வெநிஸ்நகரத்தின் நடுவே, ஆபிரிக்க மோரியனான ஒதெல்லோ, பிறர் சகவாசமும் பழக்கமும் அதிகமின்றிப் பெரும்பாலும் தனித்தே வசிக்கிறான். அவன் ஜாதிக் குணமோ, உக்கிரமும், துணிவும், பொறுதியின்மையும் நிறைந்தது. உள்ள நிகழ்ச்சிகளோ, பலமானவை: கோபமோ, தாபமோ, சந்தோஷமோ ஜனித்துவிடின், அவன் தன்வயமழிந்து ஒழுகுபவனே. ஆயினும், இளம்பிராயந்தொட்டு அநுபவித்த பல கஷ்ட நிஷ்டூரங்களின் பயனான மன எச்சரிக்கையாலும், இடையறாத அப்பியாசத்தாலும், திடசித்தத்தையும் மனவமைதியையும் உபகுணங்களாகப் பெற்றவன். எவ்வளவு பழக்கப்பட்ட குரங்கும் சிலவமயங்களில் தன்னியற்கைக்குணத்தை வெளியிட்டுவிடுதல்போல, எங்ஙனமாயினும் அவன் மனங்குழம்பிவிடின், உடனே அவன் சுபாவகுணந் தோன்றி ஆட்சிபெறுகின்றது. இளமை கழிந்தவனேயாயினும், டெஸ்டிமோனாவைக் காணும்வரை அவன் காதற்சூட்டை உணர்ந்ததில்லை. "இருப்புத்தளைகளாற் கட்டொணாத நினைவுகளை, ஒரு பெண்ணின் மெல்லிய ரோமம் எளிதிற் கட்டிவிடும்" என்று ஒரு ஆங்கில கவி கூறுதற்கேற்ப, முதற்கண் காதற் சூடுறைக்கவே, அவன் முற்றும் அதன் வயப்பட்டுத் தன்னிறையழிந்துபோகிறான். "அவன், தன் ஞானஸ்நாநத்தை மறுத்துத் துறந்து, தன் பாவவிமோசன பதவியைக் குறிக்கும் சின்னங்களையெல்லாம் ஒழித்துவிடவேண்டுமெனினும், அவன் ஆத்மா அவள் பாசத்தால் தளையுண்டிருப்பதால், அவள் மனத்துக்குத் தோன்றியவாறெல்லாம், அவனது திடமில்லாத மனநிலையை ஆக்கவோ, அழிக்கவோ, இஷ்டப்படி செய்யவோ, ஒரு தடையுமில்லை." [89-ம் பக்கம்] என்று அவன் காதற்பெருக்கைப்பற்றி இயாகோ கூறுவது உண்மையே. தன் உபசேனாபதி உத்தியோகத்துக்கு ஏற்றவனும் முறைப்படி உரியவனுமாகிய இயாகோவை விலக்கிக் காஸியோவுக்கு அவ்வுத்தியோகத்தைக் கொடுத்ததற்கு, டெஸ்டிமோனாவின்மேலுள்ள காதலும், அவ்விஷயமாகக் காஸியோ புரிந்த உதவியுமே காரணம். இயாகோ மோரியன்மேற்கொண்ட பகைமைக்கு இதையே பிரதம காரணமாக்கி, மோரியன் நாசத்துக்கு துவஜாரோகணம்போலிதைச் சுட்டியிருப்பது, நங்கவியின் நியாய நிரூபண நுண்ணறிவை விளக்குகின்றது. அதுவுமன்றி, காஸியோ உடந்தையாயிருந்து தூதுசென்றமை

யையே, ஒதெல்லோ மனத்திற் சமுசயத்தையுண்டாக்க, இயாகோ துணைக்கருவியாகக் கொள்கிறான்.

உலகவாழ்க்கைக்குரிய கஷ்ட நஷ்டங்களில் நெறிதவறாது நடக்கத் தற்பயிற்சிமட்டும் போதாது; கடமையீதென்றறிந்து கைப்பிடித்தலே நிலைத்த ஊன்றுகோலாம். மோரியனுக்குத் தன்மான உணர்ச்சியும், அடக்கமும், அரிது தேடிய தற்பயிற்சியுமிருக்கின்றன; ஆனால், கடமைப்பற்று மிகக் குறைவே; ஆதலின், கொலை, தற்கொலை ஆகிய அதிபாதகங்களுக்கு உள்ளாய்விடுகிறான்.

நல்லார் பொல்லாராதலும், பொல்லார் நல்லாராதலும், உலகின்கண் படிப்படியாகவே நிகழும். உற்றுநோக்கின், ஒதெல்லோவின் குணத்தாழ்ச்சியின் ஒவ்வொரு படியையும் அறியலாம்: துரைத்தன விஷயத்தில் தான் காதற்பற்றைக் காட்டிக் காஸியோவை உபசேனாபதியாக நியமித்துக்கொண்டதே முதற்படி; தன் பிரயாண விருத்தாந்தங்களில், டெஸ்டிமோனாவின் மனத்தை இளக்கும்பொருட்டுப் பல விதமாய்க் கதைகட்டிப் பேசியதை இரண்டாம்படியாகக் கொள்ளலாம்; பின்பு, யாவரும் தன்னிடம் உபேக்ஷையாகவிருந்த வெநிஸ் நகரத்தில், அன்பும் ஆதரவும் மரியாதையுமாகத் தன்னை நடத்திவந்த ப்ரபான்ஷியோ பிரபுவை வஞ்சித்து அவர் ஒரேமகள் காதலைக் கரவாய்க் கவர்ந்ததுமன்றி, யோக்கியமாக நேரில் அவர் அநுமதியைப் பெறாது, அநுபவக் குறைவாலும் காதல் மிகுதியாலும் அவளே இணங்கினும் தான் தடுத்துப் புத்தி புகட்டுவது தன் கடமையாயிருக்க, நம்பின நண்பரை வஞ்சித்து அவளைத் திருட்டுத்தனமாகக் கடத்திக் கலியாணஞ் செய்துகொள்கிறான். இவ்வாறு நெறிபிறழ்ந்தமையால், இயாகோவின் வஞ்சனைவலையிற் சிக்குண்டு, அவன் தந்திரங்களால் தீரா மனக்குழப்பமுற்று, இயற்கையில் அமைந்த துர்க்குணங்களின்மேலீட்டால் அதிசீக்கிரத்தில் நாசமடைகிறான். தன் மனைவிமேற் சமுசயம் பிறந்தவுடன், அவளிடத்து நிகழ்ந்தவற்றைக் கூறி உண்மையை அறிந்துகொள்ளாது, கைதுவட்டி விஷயமாகப் பல பொய்கள் உரைத்துப் பயமுறுத்தி, அவளாகவே உண்மையுரைப்பதையும் தடுத்துப், பிறர் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில் ஒளித்திருந்து நோக்கலாகிய இழிசெயலையுஞ் செய்கிறான். முடிவில் கொலையும்புரிந்து தற்கொலையுஞ் செய்துகொள்கிறான்.

முதல் அங்கத்தில், இவன் அரிதில் தேடிய உபகுணங்களாகிய மனவமைதியும் அடக்கமுமே பிரகாசிக்கின்றன. இரண்டாவது அங்கம் தொடங்கி, முதற்கண் அதி சந்தோஷமும் பின்பு அதிதாபமும் உண்டாகி, இயற்கைக்குணங்களே மேலிட்டு ஆட்சிபெற்று, மஹா பாதகங்களிற் புகுத்திவிடுகின்றன. ஆயினும், முடிவுவரையும், அவன் உயர் குணத்திற் சிறிது தங்குகின்றது: தன் குற்றங்கட்கு மரணதண்டனையே தக்கதென்ற கருத்துக்கொண்டே பெரும்பாவமாகிய தற்கொலையைச் செய்கிறான். இவ்வுணர்ச்சி மிகக் கொண்டாடத்தக்கதே. தானே குற்றவாளியும் நியாயாதிபதியுமாக நடந்துகொண்டதே பாவமாயிற்று. சுருக்கிக்கூறின், ஒதெல்லோ, கம்பீர குணசீலனாயினும், அநுபவ ஞானத்தாலும் தற்பயிற்சியினாலும் பெறற்கரிய உபகுணங்களைப் பெற்றவனாயினும், சாதாரணமான சில வேட்கைகளுக்குக் கிரமம் தவறி இடங்கொடுத்ததினாலும், கடமையை அறிந்து கைப்பிடியாததினாலும், ஒரு கொடிய வஞ்சகன் வலையிற் சிக்கி, முற்றிலும் நாசமடைகிறான். இந்நாசம் அவன் குற்றங்களினாலேயே விளைகின்றது; தினைத்துணைக் குற்றம், உயர்குண சீலனாகிய அவன் விஷயத்தில், பனைத்துணைக்கேட்டை விளைக்கின்றது. ஷேக்ஸ்பியர் வெகு கண்டிப்பான நீதிபோதகரேயன்றிச், சுபாவ விரோதமாக ஒன்றுங் கூறுவதில்லை.

டெஸ்டிமோனா:—இவள், மனத்தூய்மையிலும் மென்குணங்களிலும் ஒப்புயர்வற்றவள்; இந்த அம்சத்தில் ஷேக்ஸ்பியர் நாடக பாத்திரங்களில் இவள் உத்கிருஷ்டமானவள். ஒருவிதச் சீர்க்கேடும் நேர்ந்திராவிடின், இவளும் மோரியனும் குறைவற்ற வாழ்வு வாழ்ந்திருப்பார்கள்: இவளோ மிகச் சாந்தகுணத்தினள்; மனைமாட்சிக்கேற்ற நற்குணங்கள் நிறைந்தவள்; எளிதில் இணங்கும் மனநயமுடையவள்; அவனோ, மனவுறுதியும், யுத்தப்பிரியமும், பிடிவாதமும் பொருந்தியவன். ஆகவே, அவர்கள், ஒருவருக்கொருவர் மிக்க இயைபுடையவரே: அவள் மனத்தூய்மையாலும் நாணத்தாலும் அசுசியானவொன்றுமே அவளை அணுகுகிறதில்லை; இயாகோவைத் தவிர்த்து மற்றெல்லோரும் அவளுக்கு மரியாதைகாட்டிக் கவுரவஞ்செய்கின்றனர்; காஸியோவும், எமிலியாவும், அவள் பழக்கத்தினாலேயே மிக்க குணசிரேஷ்டமுறுகின்றனர். ஆயினும் அவள் சர்வோத்தமியல்ல; அவ்வண்ணமிருப்பின், இயாகோ, அவளை நாசத்துக்குட்படுத்தியிருக்கமுடியாது. அவ

ளிடத்தில் குற்றமில்லையெனினும், நடக்கையிற் பழுதுகளிருக்கின்றன. அவள் கணவனைப்போலவே, அவளுக்கும் கடமை நினைவு சிறிதுமில்லை. தம் மனப்போக்கின்படியே அவர்கள் நடக்கிறார்கள். நல்ல மனப்போக்கும் கூட நாசத்தில் முடியக்கூடுமென்பதை அவள்விஷயத்திற் காணலாம். எவ்வமயத்தில் எவ்விழைவு தன்மனத்தின் கண்ணுளதோ அதன் வயப்பட்டு ஒழுகுபவளேயன்றி, அவள், பிற விஷயங்களையும் ஆலோசித்துத், தன் கடமையின்னதென்றறிந்து, நடக்கவல்லவள் அல்லள்: மோரியனை அவள் காதலித்தது கிரமமே; ஆனால் அக்காதல் பற்றித் தன் தகப்பனை மறந்திருக்கக்கூடாது. தன் மனத்திற் புதிதாயுதித்த எண்ணவயப்பட்டுத் தன் கடமையை முற்றும் மறந்துவிடுகிறாள்; மோரியனைக் காணவும் அஞ்சுபவள்போல நடித்து, அவனுடன் கரந்தோடித் தன் தகப்பனை வஞ்சிக்கிறாள்; அவர்மேல் அவளுக்குச் சிறிதுமே இரக்கமில்லை; அவர்விஷயத்தில் அநுதாபத்தைக் காட்டும் ஒரு மொழியேனும் அவள் கூறிலள்; தன் புது மணாளனைப்பற்றிய எண்ணங்களில் ஆழ்ந்து, மதிமயங்கி, மிக்க மனக்கொடுமையை வெளியிடுகிறாள். பின் விளைவு எவ்வளவு பயங்கரமானது! முதலில் தன் தந்தையை வஞ்சித்ததற்கும், யுத்தத்திற்குச் செல்லும் தன் கணவனைப் பின்பற்றியதற்கும், கைதுவட்டியைப்பற்றிப் (பயத்தால்) பொய்கூறியதற்கும், பின்பு காஸியோவின்பொருட்டுப் பிடிவாதமாயும் மூடத்தனமாயும் மன்றாடியதற்கும், பின்பு தன்னை ஒதெல்லோ கொலைபுரிகையில் தன்னடக்கையின் தவறின்மையையும் நியாயத்தையும் எடுத்துக் காட்டாது, அறிவீனமாய்க் கூச்சலிட்டு உயிர்ப்பிச்சை வேண்டியதற்கும், முடிவில் (காதலால் தூண்டப்பட்டு) தெய்வத்தன்மைபொருந்தியதோர் பொய்யுரைத்ததற்கும், அவள் மனப்படியொழுகும் ஒழுக்கமும், ஆலோசனையின்மையுமே காரணம். யாவர்க்கேனும் தீங்கிழைக்கும் எண்ணம் இல்லாதவளேயெனினும், தன் கடமையிதென்றறிந்து அதன்படி யொழுகவேண்டுமென்ற அவாவின்மையால், தனக்கும் பிறர்க்கும் நாசமூலமாகின்றனள். ஆலோசனையின்மையே அவளிடத்துப் பெருங்குறை. ஆங்கில கவியாகிய ஹூட் சொல்லியிருக்கிறபடி, "தீங்கு, ஆலோசனையின்மையாலும், மன இளக்கமின்மையாலும் விளைகின்றது." பிற நற்குணங்கள்பொருந்திய பலர், இக்குறையால், தீச்செயல்களை இயற்றித் தீங்குறுகின்றனர்.

**இயாகோ** :—இத்துணைக் குணக்கேடரும் உலகத்தில் உளரோ? ஆதியோடந்தம் இவனிடத்தில் நற்குணவாசனையே இல்லையே! ஆயின், நாம் நாடகத்தைப் படிக்கும்பொழுது இவன் குணம் சுபாவ விரோதமாகத் தோன்றுகிறதா? இயாகோவைப்போன்ற மனிதர் இவ்வுலகில் மிக அருமையே; ஷேக்ஸ்பியர் நாடகங்களிலும் அவ்வாறே. இவன், தீக்குணத்தில் இணையெதிரற்றவனே; மானுஷகுணம் எவ்வளவு தாழ்வுற்றிழியக்கூடுமென்பதை, ஷேக்ஸ்பியர், இவன் மூலியமாய்க் காட்டினர் போலும். அவர் கூறியிருப்பது அசாதாரணமேயன்றி, அசாத்தியமானதல்ல. தீக்குணத்தர் பெரும்பாலும் புத்தியிற் சிறந்தவரே: இயாகோ அதிசமர்த்தன்; யுத்ததந்திரங்களில் மிகத் தேர்ந்த வீரன்; மனதைரியமும் நிலைகலங்கா அமைதியும் பொருந்தியவன்; மிக்க பொறுமையுடையவன்; சமயத்துக்கேற்ப இசைந்து நடக்கவல்லவன்: சித்தவிருத்தியைத் தவிர்த்து, மற்றவையெல்லாம் கொண்டாடத்தக்கனவே. நற்சிந்தையொழிய ஏனையவெல்லாம் அமைந்துள்ள ஒருவன், உலகவாழ்க்கையில் என்னகதியை அடைவானென்பதைக் காட்டுவதே ஷேக்ஸ்பியர் நோக்கம். இயாகோ, முதலில் காரியசித்தியடைகிறான்; எல்லாம் இவன் எண்ணப்படியே நிறைவேறுவதுபோல் தோன்றுகின்றது; ஆனால், முடிவில் திடீரென நாசம்வந்து மூடிக்கொள்கின்றது. இவ்வளவு சமர்த்தன் இவ்விதமாக ஆகாசக்கோட்டை கட்டியதென்னே? உண்மையில், இவனுக்கு நற்சிந்தையின்மை மாத்திரமன்று, நற்குணத்தில் நம்பிக்கையேயில்லை. நாமவனைக் காணுமுன்னமே அவன் தன் மனச்சாக்ஷியை முற்றும் தன்வயமாக்கி அடக்கிவிட்டான். டெஸ்டிமோனாவின் கற்பில் அவனுக்கு நம்பிக்கையில்லை; எவ்விதத்திலும் சிறந்த உத்தமி, மூடப்பிள்ளைகளுக்குப் பாலூட்டவும் தயிர் மோர் விற்றுக் கணக்கு எழுதவுமே தக்கவளென்பது அவன் கொள்கை. வாழ்க்கைச் சிறப்பும், உயர் பதவியும், பணமுமே அவன் மதித்து விரும்பும் பொருள்கள். அவ்விஷயத்தில், மோரியன் தன்னன்மைக்கு விரோதமாகக் காஸியோவை உபசேனபதியாக நியமித்துக்கொள்ளவே, இயாகோ பழிவாங்க நிச்சயிக்கிறான், இக்காரணம் அவன் கோபத்தை முதலிற் கிளப்பியது; பின்பு அவன் தீச்சிந்தையே மேலிட்டு வேண்டியவற்றை நடத்தியது. தன் விஷயத்திற் சிறிதும் சம்பந்தப்படாதவரும் தான் பழிவாங்குகையாற் சேதமுறுவரென்பதைப்பற்றி அவன் சிறிதும் எண்

ணவில்லை. தீங்கிழைப்பதே அவனுக்கு ஆநந்தமாய்விடுகிறது; பிறர் துன்பங்களைக் கண்டு அவன் மனங்களிக்கிறான்; தன் சாமர்த்தியத்தைத் தானே வியந்து மகிழ்கிறான்; பிறர்க்குறும் துன்பத்தைக் கண்டு தானடையும் களிப்பில், பழிவாங்கும் எண்ணங்கூட சீக்கிரம் மறக்கப்படுவதுமன்றித் தன் கைகளினாலேயே தன் மனைவியைக் கொலைசெய்யும்படி ஒதேல்லோவைத் தூண்டுவதில் சந்தோஷத்தையடைகிறான். காஸியோ காயமுற்ற விஷயத்தில் பியான்காவும் சம்பந்தப்பட்டவளாக அவன் அநுமானப்பட்டுக் கூறியதற்குக், கெட்ட குறும்புத்தனமும், குற்றமொன்றுஞ் செய்யாத ஒரு அசட்டுப் பெண்பிள்ளையை ஹிம்சைசெய்வதனால் தான் அடையும் சந்தோஷமுமே காரணம். பழிவாங்கும் ஆசையால் தூண்டப்பட்ட இவன், வெகு சீக்கிரத்தில் தீங்கிழைப்பதையே ஆநந்தமாகக்கொண்டு, அதில் அளப்பரிய மகிழ்ச்சியடைகிறான். தன்னெண்ணம் நிறைவேறிய சந்தோஷத்தினால், தன் வஞ்சனைகளில் ஒரு பகுதியை வெளியிட்டு, மிகுதியைப் பிறர் கண்டு பிடிக்கமுடியாது தத்தளித்துத் தயங்குவதைப் பார்த்துத் தான் களிக்க விரும்பியே, பின்பு மௌனமாயிருந்துவிடுகிறான். இவன் அனாவசியகமாக ஒரு பொய்யுமுரைப்பதில்லை. நன்மை தீமையென்ற வித்தியாசம் பார்க்காத இவனுக்கு வாய்த்த அதிதீவிர புத்தி, குரங்கின்கைப்பட்ட தார் கூரிய கத்தியாய்விடுகிறது. இவன் மிகக் கெட்டவன்; ஆகவே, முற்றிலும் தௌர்ப்பாக்கியனே.

**காஸியோ:**—காஸியோவின் யுத்த சாமர்த்தியத்தைக் குறித்து இயாகோ கூறியது பெரும்பாலும் உண்மையே. அவன் பிறர் மெய்ச்சநியாயமோதித் திரிபவனாதலின், குணவிழுமை வாய்ந்திலன். அவன் பிறர்பேச்சுக்கு எளிதில் இணங்குபவன்; அதிகமாய்ச், சாதுரியமாய்ப் பேசுபவன்; பிறரால் மதிக்கப்பெற்றவனல்லன், அற்பன்; இவனிடத்தில் யாரும் மட்டுமரியாதையின்றி நடக்கிறார்கள்; மதுபானத்தால் இவன் மூளை எளிதில் கலங்கிவிடுகிறது; சிறுபிள்ளைத்தனத்தால் ஒரு தூர்த்தையின் சம்பந்தம் ஏற்படுகிறது. ஆயினும், இவன்பால் வியக்கத்தக்க சில நற்குணங்களுள: டெஸ்டிமோனாவை இவன் பூஜ்யதை செய்வதே இவன் உயர்குணத்தை விளக்குகிறது; தான் குடித்து வெறிகொண்டதற்கு இவன் மனக்கிலேசமடைவதும், தன் குற்றத்துக்காக

மனம்வருந்தி அதன்பொருட்டு நேர்ந்த தண்டனை தக்கதேயென்றுணர்வதும், நற்குணங்களே ; ஆயினும், இயாகோ சில மொழிகள் கூறவே, சுபாவமான அற்பத்தனமேலிட்டால் தன் குற்றத்தையெல்லாம் மறந்துவிடுகிறான். மோரியனுக்காகப் பரிதாபப்பட்டு, அவன் மேலான குணங்களைப் புகழ்வதும், இவன் உயர்குணத்தை விளக்குகின்றது.

**ப்ரபான்ஷியோ** :—இவர் மிக்க அன்புள்ள தந்தையே; ஆயின், அகம்பாவக்காரர்; ஒருவரிழைத்த தீங்கை மறப்பதுமில்லை, மன்னிப்பதுமில்லை ; ஆதலின், தாமும் கேடுற்றுப் பிறரையும் கெடுக்கிறார்.

**எமிலியா** :—இவள் ஒரு சாதாரணப் பெண்பிள்ளை ; மேன்மையான குணங்கள் இல்லாதவள் ; உலகவழக்கத்தை அநுசரித்து ஒழுகுபவள். டெஸ்டிமோனாவின் சேர்க்கைவாசனையால், இவள், வரவர குணசிரேஷ்டம் அடைந்து, உற்ற சமயத்தில் சிறிதும் தன்னயங் கருதாது உண்மையை அஞ்சாமல் உரைத்துப் பெருந்தன்மையாக இறக்கிறாள்.

**ராடரிகோ** :—இவனும் ஒரு சாதாரண மனிதனே ; இயாகோவின் சகவாசதோஷத்தால் முற்றிலும் சீர்குலைந்து இழிவாய் மடிகிறான்.

சுருக்கிக் கூறுமிடத்து, இத்துன்பியல் நாடகம், உலகத்தில் வாழ்க்கைப்பேற்றை அடைதற்குக் கடமைப்பற்றும், இடையறா நல்லொழுக்கமும், ஆழ்ந்த ஆலோசனையின் விளைவான நிதான அறிவும், மனவுறுதியும், அடக்கமும், இன்றியமையாத கருவிகள் என்ற உண்மையை நன்குதீட்டியதோர் சிறந்த சித்திரம்போல விளங்குகின்றது. வேண்டுமென்றின்றியே ஓரணுவளவே நெறிதவறிய ஒழுக்கமும், முழுநாசத்தை விளைக்கக்கூடும்.

முற்றிற்று.

Printed at the M. E. Publishing House, Mount Road, Madras, 1902.

# EXTRACTS OF SOME OPINIONS

ON

# "PADMAVATI CHARITRAM."

**The late Sir K. Seshadri Iyer, K. C. S. I** :—"It gives me much pleasure to go through it."

**Justice Sir S. Subramania Iyer, C. I. E** :—"The interesting Tamil Novel."

**The Hon'ble Mr. P. Comaraswamy** (Colombo) :—"I have read it with great pleasure. . . . A book which is so interesting."

**Mr. K. C. Kumarakula Singh Mudaliar** Ceylon):—"I have read it with much interest...The story is instructive and well constructed."

**Mr. E. W. Sennatha Raja** (Colombo) :—"...Life-like and highly interesting...The language is simple, the style clear and terse, the tone of morality elevated..."

**"The Awakened India"** :—"*Padmavati Charitram* is entitled to a decent position not only among Tamil Novels that have yet appeared, but also among English ones of the same kind...Plot and characterisation must be pronounced a success. The situations are generally well chosen...The style is usually dignified and free from pedantry...No diffuseness or languor and some of the descriptions are done with great skill... On the whole we have no hesitation in pronouncing it a decided success and no reader will grudge to spend a few pleasant and profitable hours over it."

**"The Ceylon Independent,"** Colombo :—"Perhaps the first Tamil contribution towards high class vernacular fiction in Tamil India...The first Tamil Novel thoroughly modern in its nature...Even the style is modern, for it is not

the Tamil of the Great Masters, nor colloquial either. It is a style for the million...The story is interesting, instructive, well told in good language and tastefully presented.

"**The Arya Bala Bodini**":—"The book is excellent Tamil, the plot has been very intelligently conceived."

"**Gnana Bodini**":—"The style is simple. We heartily recommend the novel."

"**ஆரிய ஜனப்பிரியன்**":—"*பிராமணகுடும்ப விவகாரங்களை நன்கு உணர்த்துவதாயிருக்கின்றது.*"

"**லோகோபகாரி**":—"*இந்நூலைச்செய்து தமிழ்ப்பாஷையைப் பெருமைப்படுத்தின விஷயம்.*"

"**Morning Star,**" Jaffna:—"*விசேஷமாய் பிராமணகுடும்ப விவகாரங்களை நன்குணர்த்துவது.*"

"**Hindu Organ,**" Jaffna:—"*வாசிக்க மிகவும் உசிதமானது.*"

"**ஸஜ்ஜன பத்திரிகா**":—"*இப்புத்தகம் மிகச்சிறந்த அலங்காரமாய், அநேக பழமொழிகளை மாலையாக அணிந்து, சில மதுரமான காவியங்களை உள்ளடக்கி திருஷ்டாந்தமாகக் காட்டி,...சிறுவர் சிறுமிகளுக்கு எளிதிற் படித்தறியும்படியான தமிழ் நடையிலுள்ளது.*"

*Note:*—This and the other Tamil novels advertised in the next sheet are descriptive of native life in South India and have been written after the best English models with a view to furnish healthy and instructive 'light literature' for home reading.

# புத்தக விளம்பரம்

பின்வரும் தமிழ்ப் புத்தகங்கள் கற்றோரும் மற்றோரும் படித்துக் களிக்கத்தக்க எளிய தமிழ் நடையில்

ம-ா-ா-ஸ்ரீ. அ. மாதவையரால
இயற்றப்பட்டவை.

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| **பத்மாவதி சரித்திரம்.**—ஒரு தமிழ்நாட்டுக்கதை, முதற்பாகம். முதற்பதிப்புச் செலவாய் விட்டது. இரண்டாம் பதிப்பு அச்சிலிருக்கிறது. சீக்கிரம் வெளியாகும். விலை. .... .... | 0 | 12 | 0 |
| ஷை ஷை இரண்டாம் பாகம் .... | 0 | 12 | 0 |
| ஷை ஷை இரண்டு பாகங்களும் சேர்த்து காலிகோ பைண்டு செய்யப்பட்டது.... | 1 | 8 | 0 |
| **விஜயமார்த்தாண்டம்.**—ஒரு தமிழ் 'நாவல்.' வெகு அற்புதமானகதை (அச்சிலிருக்கிறது) | 0 | 12 | 0 |
| ஷை ஷை காலிகோ பைண்டு ... | 1 | 2 | 0 |
| **முத்து மீனாக்ஷி.**—ஒரு பிராமணப்பெண் சுவசரிதை (அச்சிலிருக்கிறது) .... ... | 0 | 8 | 0 |
| **ஷேக்ஸ்பியர் நாடகங்கள்.**—I. ஒதெல்லோ என்ற வெனிஸ் மோரியன். இச்சிறந்த நாடகம், ஷேக்ஸ்பியர் சரித்திரம், பொதுப்பாயிரம், குறிப்புரை, வியாக்கியானங்களுடன் எளிய தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. ஷேக்ஸ்பியர் மகா கவியின் படமும் சேர்க்கப்பட்டிருக்கிறது .... | 1 | 0 | 0 |
| ஷை காலிகோ பைண்டு ... .... .... | 1 | 6 | 0 |

இப்புத்தகங்களை, சென்னை திருவல்லிக்கேணி, ஸ்ரீனிவாஸ, வரதாசாரியார் அண்டு கம்பெனி, அல்லது, ஜி. ஏ. நடேசன் அண்டு கம்பெனி, எஸ்ப்ளனேடு, என்ற புஸ்தக வியாபாரிகளிடம் பெற்றுக்கொள்ளலாம்.